உ

கணபதி துணை.

எட்டுத்தொகையுள் மூன்றாவதாகிய

# ஐங்குறுநூறும்,

## பழையவுரையும்.

---


இவை,

கும்பகோணம் காலேஜ் தமிழ்ப்பண்டிதராகிய

உத்தமதானபுரம்

## வே. சாமிநாதையரால்


பலபிரதிருபங்களைக்கொண்டு பரிசோதித்து,


சென்னபட்டணம்:

வைஜயந்தி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

---

சோபகிருது௵ ஆனி௴

1903.

விலை ரூ. க௨.




# இப்புத்தகத்திலடங்கியவை.

பொருளடக்கம்



---

இப்பதிப்பில் எடுத்துக் காட்டிய

# நூல்கள் முதலியவற்றின் முதற்குறிப்புக்கள்.



அகநா - அகநானூறு.
இ. வி. - இலக்கணவிளக்கவுரை.
இள - இளம்பூரணருரை.
இறை - இறையனாரகப்பொருளுரை.
உ - உரை.
உறுப் - உறுப்பியல்.
ஊர் - ஊர்காண்காதை.
எழுத் - எழுத்ததிகாரம்.
எ - து. - என்பது, என்றது.
ஐங் - ஐங்குறுநூறு.
ஐந். எழு. - ஐந்திணையெழுபது.
ஐந். ஐம். - ஐந்திணையைம்பது.
ஒழி - ஒழிபியல்.
கட - கடவுள்வாழ்த்து.
கருத், கருத்து - கருத்துரை.
கலி - கலித்தொகை.
கள - களவழிநாற்பது.
கற் - கற்பியல்.
கார் - கார்நாற்பது.
கு - குறிஞ்சிப்பாட்டு.
குறிஞ் - குறிஞ்சி.
குறு - குறுந்தொகை.
கோ - கோவிந்தையாரிலம்பகம்.
சிந் - சிந்தாமணி.
சிலப் - சிலப்பதிகாரம்.
சிறுப - சிறுபஞ்சமூலம்.
சேனா - சேனாவரையருரை.

தொல் - தொல்காப்பியம்.
ந - நச்சினார்க்கினியருரை.
நற் - நற்றிணை.
நன். வி. - நன்னூல்விருத்தியுரை.
நாம - நாமகளிலம்பகம்.
நாற் - நாற்கவிராயநம்பி அகப்பொருளுரை.
நெய் - நெய்தல்.
பட் - பட்டினப்பாலை.
பதி - பதிகம்.
பதிற் - பதிற்றுப்பத்து.
பது - பதுமையாரிலம்பகம்.
பரி - பரிபாடல்.
ப - ரை. - பழையவுரை.
பா - பாலை.
பி - ம். - பிரதிபேதம்.
பிரயோ - பிரயோகவிவேகவுரை.
பு. வெ. - புறப்பொருள் வெண்பாமாலை.
புற - புறநானூறு.
பெருந்தி - பெருந்திணைப்படலம்.
பொரு - பொருளதிகாரம்.
பொருந - பொருநராற்றுப்படை.
மணி - மணிமேகலை.
மது - மதுரைக்காஞ்சி.
மரு - மருதம்.
மலை - மலைபடுகடாம்.

சொல் - சொல்லதிகாரம்.
திணைமா - திணைமாலை நூற்றைம்பது.
திணைமொ - திணைமொழியைம்பது.
திரி - திரிகடுகம்.
திருக் - திருக்குறள்.
திருச்- திருச்சிற்றம்பலக்கோவையார்.
திருமு - திருமுருகாற்றுப்படை.
தும் - தும்பைப்படலம்.
மு - முற்றும்.
முத் - முத்தியலம்பகம்.
முல் - முல்லை.
மூ - மூலம்.
யா - கா. - யாப்பருங்கலக் காரிகையுரை.
யா - வி. - யாப்பருங்கலவிருத்தியுரை.
வி - விசேடவுரை.

---

# பிழையும் திருத்தமும்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| க சா | க கூ | மகிழ்வென் | மகிழ்நவென் |
| ,, | உ கூ | சொ ர்த | சொரிந்த |
| க கூ | க க | சோழரா | சோழனு |
| கூ ரு | உ உ | புன்னைப் | புன்னை |
| கூ சா | ந | இலைகொளீ | இலைக்கொளீ |
| ,, | க அ | மொழிய | மொழிப |
| ச க | உ அ | பாணற | பாணற் |
| ச ச | கூ | விரும்புந | விரும்புந் |
| ச அ | க ந | மமமா | மமமா |
| ச கூ | ச | பெ ரி | பெரிதி |
| ரு க | ,, | னல்ல | நல்ல |
| ரு கூ | க க | முனைக்கு | முனைக்குந் |
| ,, | க எ | ,, | ,, |
| சா எ | க கூ | தப்பின் அ | தப்பின |
| எ க | கூ | லாடிமையை | லாளனை |
| எ ச | ரு | அறிபாமை | அறியாமை |
| ,, | ௯ | யன்னைய | யன்னையு |
| எ ரு | கூ 0 | பெய்மண | பெய்ம்மண |
| எ கூ | க ச | மேன்றேட் | மென்றேட் |
| அ க | ச | பொன்போல் | பொன்போற் |
| க க க | க ரு | யுறையுட | யறையும் |
| க க உ | எ | சரனே | சானே |
| க உ க | உ | யிடைபடு | யிடைப்படு |
| க கூ கூ | க எ | பெருஞ்சிறை | பெருஞ்சின |
| க ச உ | உ ச | கபிலா | கபிலன் |
| க அ 0 | க கூ | ,, | க ச க |

உ

கணபதி துணை.

# முகவுரை.

"சந்தனப் பொதியந் தடவரைச் செந்தமிழ்ப்
பரமா சாரியன் பதங்கள்
சிரமேற் கொள்ளுதுந் திகழ்தரற் பொருட்டே."

ஐங்குறுநூறென்பது, கடைச்சங்கப் புலவர்கள் அருளிச்செய்த நூல்களாகிய * எட்டுத்தொகைகளில் மூன்றாவது; சொற்சுவை பொருட்சுவைகளிற் சிறந்தது; பொருள்களின் இயற்கை யழகையும் தமிழ்ப்பாஷையின் இனிமையையும் நன்கு தெரிவிப்பது; இத்தமிழ் நாட்டின் பழையகாலத்தின் நிலைமையையுஞ் சிலசரித்திரங்களையும் புலப்படுத்துவது; பொருளிலக்கணத்தின் பகுதிகளாகிய அகம் புற மென்னும் இரண்டனுள் அகத்தின்பகுதிகளுக்கு இலக்கியமாக அமைந்துள்ளது. [அகமாவது, ஒத்த அன்பினராகிய தலைவனும் தலைவியும் தம்முட் கூடுகின்றகாலத்துப் பிறந்து அக்கூட்டத்தின்பின்பு அவ்விருவராலும் ஒருவர்க்கொருவர் தங்காமக்குப் புலனாக இவ்வா றிருந்ததெனக் கூறப்படாததாய் எப்பொழுதும் உள்ளத்துணர்வாலேயே அனுபவிக்கப்படும் இன்பம். இன்பம் பற்றி அகத்தேநிக ழும் ஒழுக்கத்தை அகமென்றது ஆகுபெயர். அகம் - உள்.]

இந்நூல், சிவபெருமானுடைய துதியாகிய கடவுள்வாழ்த்துச் செய்யுளொன்றை முதலிற்பெற்றுப் பின்னர் மருதம், நெய்தல், குறிஞ்சி, பாலை, முல்லையென்னும் ஐந்திணைகளுள் ஒவ்வொன்றற்குமுரிய ஒழுக்கங்களைத் தனித்தனி விளக்கும் நூறுநூறு அகவற்பாக்களைக் கொண்டு முறையே ஐந்துவகையாகப் பகுக்கப்பெற்றுள்ளது.

இதிலுள்ள பாக்கள் ௫௱. இப்பாக்கள் ௩-அடிச் சிற்றெல்லையையும் ௬-அடிப் பேரெல்லையையும் உடையவைகள்.

மருதமுதலிய ஐந்திணையொழுக்கங்களை, நற்றிணை முதலியவற்றிலுள்ள பாக்களைக்காட்டிலும் அடிவரையறையிற் குறைந்த நூறு

---

* எட்டுத்தொகைகளாவன: நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்பன. இவற்றின் வரலாற்றைப் புறநானூற்று அச்சுப்புத்தகத்தின் முகவுரையாலுணர்க.



நூறு பாக்களால் தனித்தனியே விளக்குகின்றமையின், இந்நூல் ஐங்குறுநூறென்று பெயர்பெற்றது.

இதிற் கடவுள்வாழ்த்துப் பாரதம்பாடிய பெருந்தேவனாராலும், முதனூறாகிய மருதம் ஓரம்போகியாராலும், இரண்டாநூறாகிய நெய்தல் அம்மூவனாராலும், மூன்றாநூறாகிய குறிஞ்சி கபிலராலும், நான்காநூறாகிய பாலை ஓதலாந்தையாராலும், ஐந்தாநூறாகிய முல்லை பேயனாராலும் இயற்றப்பட்டன. இதனை,

"மருதமோ ரம்போகி நெய்தலம் மூவன்
கருதுங் குறிஞ்சி கபிலன் - கருதிய
பாலையோ தாந்தை பனிமுல்லை பேயனே
நூலையோ தைங்குறு நூறு"

என்னும் வெண்பாவாலுணர்க.

இத் தொகையைத் தொகுத்தார் புலத்துறை முற்றிய கூடலூர் கிழார்; தொகுப்பித்தார் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறையார். இஃது, இந்நூலின் இறுதியிலிருக்கின்ற பழையவாக்கியத்தால் தெரிகின்றது.

ஓரம்போகியார் முதலிய ஐவரும் முறையே மருதமுதலிய ஐந்திணைவளங்களையும் இனிது விளக்கிப் பாடுதலில் மிக்க பயிற்சியுடையவர்களாதலின், மருதமுதலிய ஒவ்வொருபகுதியையும் படிப்பவர்கள் அப்பொழுது அப்பொழுது அந்த அந்த நிலங்களில் உள்ள

பொருள்களைக் கண்கூடாக நுகர்பவர்களாகவேயாவார்கள்.

இதிலுள்ள அகவற்பாக்கள் ஒவ்வொன்றன் பின்னும் தனித் தனியே கருத்துரையும் பழையவுரையும் உள்ளன; சிலவற்றிற்கு இரண்டு கருத்துரைகளுமுண்டு. அக்கருத்துரைகளை இயற்றியவர்கள் நூலாசிரியர்களோ வேறு யாரோ யாதும் புலப்படவில்லை. தொல்காப்பியப் பொருளதிகாரவுரையில் இந்நூலிலிருந்து மேற்கோளாக எடுத்துக்காட்டிய செய்யுட்களுட் சிலவற்றிற்கு நச்சினார்க்கினியர் இக் கருத்துரைகளைத் தழுவாமல் வேறுகருத்துரைகள் எழுதி அவற்றிற் கேற்ப அச்செய்யுட்களுக்குப் பொருளும் விளங்க எழுதிக்கொண்டு போகின்றனர். இஃது இவ்வச்சுப்புத்தகம் ௧௬-ம் பக்க முதலிய வற்றிலமைந்துள்ள பிரயோக விளக்கக் குறிப்பை உய்த்துணரின், நன்கு விளங்கும்.



ஆசிரியர் தொல்காப்பியனார் தொல்காப்பியம் அகத்திணையியலில், "மாயோன்மேய" என்னும் ௫-ம் சூத்திரத்தில், 'முல்லை குறிஞ்சி மருதநெய்தலெனச் சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே' என நிலங்களுக்கு முல்லைமுதலாக முறை கூறினாரேனும் அதில் 'சொல்லவும் படுமே' என்ற உம்மையால், இங்ஙனம் சொல்லாத முறையாலும் திணைகள் சொல்லப்படுமென்று அவர் அறிவுறுத்தினாராதலின், புலத்துறைமுற்றிய கூடலூர்கிழார் இந்நூலில் திணைகளை மருதமுதலாகத் தமக்கு வேண்டிய முறையாற் கோத்தாரென்றுணர்க. இக்கருத்தை, "உம்மை எதிர்மறையாகலின், இம்முறையன்றிச் சொல்லவும்படு மென்பது பொருளாயிற்று; தொகைகளிலும் கீழ்க்கணக்குக்களிலும் இம்முறை மயங்கக் கோத்தவாறு காண்க" (தொல். பொரு. அகத்திணையியல், ௫-ம் சூ. உரை) எனவும் "இனி, 'சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே' என்றவழிச் சொல்லாத முறையாற் சொல்லவும்படு மென்று பொருள் கொண்டமை பற்றிப் பாலை, குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தலெனவும் கோத்தார்; ஐங்குறுநூற்றினும் பிறவற்றினும் வேறுபடக்கோத்த வாறு காண்க" (கலித்தொகை, கடவுள்வாழ்த்துரை.) எனவும் போந்துள்ள ஆசிரியர் நச்சினார்க்கினியர் வாக்கியங்களும், "சொல்

லிய முறையாற் சொல்லவும்படும்' என்ற உம்மை, பிறவாற்றானும் சொல்லப்படுமென்பதுபட நிற்றலானும், பத்துப்பாட்டும், கலித்தொகையும், ஐங்குறுநூறும், கீழ்க்கணக்கும், * சிற்றடக்கமும் முதலாகிய சான்றோர் செய்யுட்களெல்லாம் வேண்டிய முறையான்வைத்தலானும் இவ்வாற்றான் எண்ணப்பட்டனவெனக்கொள்க" (அகத்திணையியல் சூ-ம் சூ. உரை) என்னும் நாற்கவிராயநம்பி அகப்பொருளின் உரையாசிரியர் வாக்கியமும் வலியுறுத்துமாறறிக.

இந்நூலைத் தொகுத்தோரும் தொகுப்பித்தோரும் முறையே மலைநாட்டுப்புலவரும் மலைநாட்டரசருமாதலால், ஆதனவினியென்னுஞ் சேரனைத் தலைவனாகப்பெற்ற முதற்பத்தையுடைய மருதம் முதலினும், தோண்டிப்பத்தையுடைய நெய்தல் மருதத்தின் பின்னும், மலைநாட்டரசர்களைப் பாடி மலைநாட்டிற் பெரும்பாலும் வதிந்து மலை

* சிற்றட்டகமென்றும் பிரதிவேறுபாடுண்டு,

2



வளம் பாடுதலிற் புகழ்பெற்ற கபிலர் பாடிய குறிஞ்சி நெய்தலின்பின்னும் கோக்கப்பெற்றனவென்று இம்மூன்றற்கும் ஒருவாறு முறை கூறலாமாயினும், பாலையும் முல்லையும் இவற்றின்பின்னர் முறையே அமையப் பெற்றதற்குக் காரணம் ஒருவாற்றானும் விளங்கவில்லை. [தொண்டி - சேரநாட்டிற் கடற்கரைக்கண்ணதோர் நகரம்; இதனை, 'குட்டுவன்றொண்டி' (ஐங். கஎஅ) என்பதனானுணர்க.]

ஐங்குறுநூறுபோலவே ஐந்திணையொழுக்கங்களை வேறுகூறிய வாறு பாகுபாடுசெய்து தொகுத்துத் தனித்தனியே கூறும் பழைய நூல்களுள் இப்பொழுது தெரிந்தவை வருமாறு :—

எட்டுத்தொகையுள் (இந்நூலேயன்றிக்) கலித்தொகையும், பதினெண் கீழ்க்கணக்கினுள் ஐந்திணையம்பது, திணைமாலை நூற்றைம்பது, திணைமொழியைம்பது, ஐந்திணையெழுபது, கைந்நிலையென்பனவும், பத்துப்பாட்டுள் மதுரைக்காஞ்சி முதலியனவும், பழைய உரைகளிற் காணப்படுகின்ற திணைமாலை, சிற்றடக்கமென்பனவுமாம். இவற்றுள் ஈற்றிலுள்ள இரண்டு நூல்களிலிருந்து சிலசில பாக்கள்

மட்டும் பழையவுரைகளிற் காணப்படுகின்றனவேயன்றி நூல்முழுவதும் காணப்படாமையின், அவற்றைப்பற்றி ஒன்றும் இப்பொழுது எழுதக்கூடவில்லை.

மேற்கூறிய இலக்கிய நூல்களிலும் தொல்காப்பிய முதலிய இலக்கணநூல்களிலும் திணைகளைக் கோத்துள்ளமுறை ஒருபடியாக இருக்கவில்லை. அவை வருமாறு :—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஐங்குறுநூறு | மரு | நெய் | குறிஞ் | பா | முல் |
| கலித்தொகை | பா | குறிஞ் | மரு | முல் | நெய் |
| ஐந்திணையைம்பது | முல் | குறிஞ் | மரு | பா | நெய் |
| திணைமாலை நூற்றைம்பது | குறிஞ் | நெய் | பா | முல் | மரு |
| திணைமொழி யைம்பது | குறிஞ் | பா | முல் | மரு | நெய் |
| ஐந்திணை யெழுபது | குறிஞ் | முல் | பா | மரு | நெய் |
| கைந்நிலை | குறிஞ் | பா | முல் | மரு | நெய் |
| மதுரைக்காஞ்சி | மரு | முல் | குறிஞ் | பா | நெய் |
| பெருங்கதை | மரு | முல் | குறிஞ் | பா | |
| தொல். பொருளதிகாரவுரை | முல் | குறிஞ் | மரு | நெய் | |
| இறையனாரகப்பொருளுரை | குறிஞ் | நெய் | பா | முல் | மரு |
| நாற்கவிராயநம்பியகப்பொருளுரை | குறிஞ் | பா | முல் | மரு | நெய் |
| வீரசோழியம் | முல் | குறிஞ் | மரு | பா | நெய் |
| மாறனகப்பொருள் | குறிஞ் | பா | முல் | மரு | நெய் |
| இலக்கணவிளக்கம் | குறிஞ் | பா | முல் | மரு | நெய் |



இந்நூலின் பழையவுரை பதவுரையுமன்று; பொழிப்புரையுமன்று; அகத்திணைநூல்களுக்கேயுரிய உள்ளுறையுவமம் இறைச்சிப்பொருள் முதலியவற்றைப் பெரும்பாலும் நலமுறவிளக்கிச் சிலசில இடத்துமட்டும் அரிசொற்களின் பொருளைப் புலப்படுத்திச் சிறுபான்மை இலக்கணக்குறிப்பையும் சொன்முடிபு பொருண்முடிபுகளையும் பெற்றுள்ளது. சகூ-ம் பாட்டிற்கு மேலுள்ளவற்றிற்குக் கையெழுத்துப் பிரதியில் இவ்வுரை காணப்படவில்லை. இடையிடையே சிலசில பாடல்களுக்குமில்லை. ஆனாலும் கிடைத்தவரையிற் பாடல்களின் பொருள்களைத் தெரிந்துகொள்வதற்கு இவ்வுரை மிகச்

சிறந்த கருவியாகவுள்ளது. இந்நூல்போலவே நடையாலும் பொருள்
நுணுக்கத்தாலும் * இவ்வுரையும் மிகப்பாராட்டற்பாலது. இவ்வுரை
இல்லையாயின், இந்நூற் பாக்களிலுள்ள உள்ளுறையுவமமுதலியன
வும் மற்ற அருமை பெருமைகளும் நன்கு புலப்படா. இவ்வுரை
யாசிரியர் இன்னாரென்பது ஒருவாற்றானும் விளங்கவில்லை. ஆனா
லும் நடையை உற்றுநோக்கின், இவர் பேராசிரியர், நச்சினார்க்கினியர்,
பரிமேலழகர் முதலியவர்களுள் ஒருவரோ அவர்களைப்போன்ற வேறு
யாரோவென்று ஊகிக்கப்படுகின்றார்.

இந்நூலின் நயம், தொல்காப்பியப் பொருளதிகாரம், இறையனா
ரகப்பொருள், நாற்கவிராசநம்பி அகப்பொருள் முதலிய நூல்களை
உரையுடன் பன்முறை ஆராய்ந்தவர்களுக்கு நன்கு புலப்படும்;
நடையும் தெற்றென விளங்கும்.

பழையவுரையில்லாத செய்யுட்களுக்கு உள்ளுறையுவம முதலிய
வற்றைப் புலப்படுத்தி ஏதோ ஒருவகையாக உரையெழுதி இதனு
டன் பதிப்பிக்கலாமென்ற விருப்பம் சில சமயம் எனக்கு நிகழ்ந்த
துண்டு; நிகழ்ந்தும் இந்நூலையும் இவ்வுரையையும் உற்று நோக்கும்
பொழுது உண்டாகிய அச்சம் அவ்விருப்பத்தை அடியோடே மாற்றி
விட்டது. இந்நூல் முழுமைக்கும் நான் எழுதிவைத்த அரும்
பதவுரையை இதனுடன் பதிப்பியாமைக்குக் காரணமும் இதுவே.

சிலசில இடத்து மூலமட்டும் தனியேயுள்ள பிரதிகளின் பாடம்
வேறாகவும், இந்நூற் பழைய வுரையாசிரியர் கொண்டபாடம் வேறா

* இவ்வரிய உரைப்பிரதியைத் தந்த உபகாரி, ஆழ்வார்திருநகரி, தே.
லக்ஷ்மணகவிராயரவர்கள்.



கவும், மேற்கோளாக எடுத்துக் காட்டியிருக்கும் நச்சினார்க்கினியர்
முதலியோர்கள் கொண்டபாடம் வேறாகவும் அவ்வப்பிரதிகளிற்
காணப்பட்டன. அவை ஒருவாறு தொகுத்துப் பிரதிபேதமாக அவ்
வப்பாக்களின் கீழே பதிப்பிக்கப்பட்டுள்ளன. பிரதிகளிலுள்ள
வாறே பதிப்பித்திருத்தலால், அவற்றுட் சில பாடபேதங்களுக்கு மட்

டும் பொருள்கள் புலப்படா.

இந்நூலின் கஉ௬, க௩ ௦ - ம் செய்யுட்கள் ஒருபிரதியிலும் காணப்படவில்லை. சக௬, சக௱ - ம் செய்யுட்களின் இரண்டாமடிகளிற் சீர்கள் குறைந்துள்ளன. அவற்றை ஒரு பிரதியாலும் நிரப்பக் கூடவில்லை.

மூலம், கருத்துரை, பழையவுரை என்னும் இம்மூன்றனுள் எழுத்துக்கள் சிதைந்துபோன பாகத்தில் (.........) இவ்வொற்றைப் புள்ளி நிரைகள் அமைக்கப் பெற்றுள்ளன.

சில சொற்கள் பின்னுள்ளவாறு இந்நூற் கையெழுத்துப் பிரதிகளிற் காணப்பட்டன.

| | |
|---|---|
| அடும்பு (=அடம்பு) | தடக்கம் (=தொடக்கம்) |
| அணுமை (=அணிமை) | துடங்கின்று (=தொடங்கின்று) |
| அலம்வருதல் (=அலமருதல்) | நெருனை (=நெருநை) |
| அற்சிரம் (=அச்சிரம்) | பஞ்சாய் (=பைஞ்சாய்) |
| இற்றி (=இத்திமரம்) | பழூனி (=பழுனி) |
| கவிழ்தல் (=கலுழ்தல்) | வல்லினை (=வல்லுனை) |
| குருசில் (=குரிசில்) | வேணும் (=வேண்டும்.) |

கையெழுத்துப் பிரதிகளைத் தேடுதல், எழுதுவித்தல், ஒப்புநோக்குதல், ஆராய்தல் முதலியவைகள் முடிவில் இன்பத்தை விளைவிப்பனவாயினும், எதுவும் தக்க பொருளுதவியின்றி நடைபெறாத இக்காலத்தில், அவைகளே அப்பொழுது அப்பொழுது பலவகையான துன்பத்தை விளைவிக்கின்றன; "அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க், கிவ்வுலக மில்லாகி யாங்கு" என்பது பொய்யாமொழியன்றோ. ஒரு பழைய நூலைப் பதிப்பித்தற்குரிய உழைப்பிலும் பொருட்செலவிலும் காலச்செலவிலும் அதனை ஆராய்தற்குரிய உழைப்பும் பொருட்செலவும் காலச்செலவும் மிக அதிகமென்பதைப் பழகியவர்கள் நன்கு அறிவார்கள்.



திரிசிரபுரம் மகாவித்துவான் ஸ்ரீமீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களுடைய கண்மணிபோன்ற முதன் மாணாக்கரும் பாடஞ்சொல்லுதல், செய்யுள்செய்தல், நூலாராய்தல் முதலியவற்றில் அவர்களைப் போன்

றவரும் முன்பு கும்பகோணம் கவர்ன்மெண்ட்காலேஜ் தமிழ்ப்பண்டிதராயிருந்தவரும் வேறுகவலையின்றி நூலாராய்ச்சியையே செய்துகொண்டு காலங்கழிக்கும்படி வற்புறுத்திக்கூறி அவ்வாறே யான் நடத்தற்குக் கரும்புதின்னக் கூலி கொடுக்கிறாற்போலத் தம்முடைய அரிய வேலையைஅன்புடன் எனக்கு எளிதிற்கிடைக்கச் செய்தவரும் "இரந்துபுன் மாக்கடமை யென்றுந் துதியா, வரந்தாவென் முன்னின்ற வள்ள" லுமாகிய திரிசிரபுரம் வித்துவான் ஸ்ரீ - தியாகராசசெட்டியாரவர்களுடைய அன்புடைமை எழுமையும் மறக்கற்பாலதென்று. அவர்கள்செய்த மேற்கூறிய அரியவுதவியில்லையேல் எனக்கும் பழைய தமிழ்நூலாராய்ச்சிக்கும் இக்காலத்தில் யாதோரியையுமின்றென்பது திண்ணம். ஆதலால், இனியதும் அரியதுமான இந்நூற்பதிப்பை அவர்களிடத்துள்ள நன்றியறிவிற்கு அறிகுறியாக அவர்கள்பெயர்க்கு உரியதாக்குகின்றேன்.

இவ்வரிய பழைய நூலைப் பதிப்பித்தலிற் பெரும்பாலும் எனக்கு மனக்கவலை யுண்டாகாதவண்ணம் கும்பகோணம் காலேஜ், சரித்திர உபந்யாஸகராகிய ம-அ-ஆ-ஸ்ரீ கே. சுந்தரராமையரவர்கள். M. A. வேறொன்றையும் எதிர்பாராமல் தாமே வலிந்து நல்ல அமயத்திற் பொருளுதவிபுரிந்தார்கள்; "செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும், வானகமு மாற்ற லரிது."

இந்நூலை ஆராயுங்காலத்தும் பதிப்பிக்குங்காலத்தும் சலிப்பின்றி உடனிருந்து ஒப்புநோக்குதல்முதலிய பல்வகை உதவிபுரிந்த தமிழ்ப்பாஷாபிமானிகளும் வித்துவான்களுமாகிய பழைய அன்பர்களுள் கும்பகோணம் டவுன்ஹைஸ்கூல் முதல் தமிழ்ப்பண்டிதராகிய பின்னத்தூர் ம-அ-அ-ஸ்ரீ நாராயணஸாமிஐயரவர்கள் செய்த பேருதவி மிகச்சிறந்தது.

இந்நூல் பதிப்பிக்கப்பெற்றுநிறைவேறி ௬-மாதங்களுக்கு மேற்பட்டும், இடையிடையே நேர்ந்த நோய்த்துன்பங்களாலும் சில முட்டுப்பாடுகளாலும், இதுவரையிற் பூர்த்திசெய்து வெளிப்படுத்தக் கூடவில்லை.

இந்நூலின் பெருமையையும் எனது சிறுமையையும் நன்குணர்ந்தவிவேகிகள் இப்பதிப்பிற்காணப்படும் பிழைகளையும் அவற்றின் திருத்தங்களையும் அன்புடன் தெரிவிப்பார்களென்று நம்புகிறேன்.

இப்படியே யான் எண்ணிய ஒவ்வொரு காரியமும் இடையூறின்றி இனிது நிறைவேறும்படி திருவருள் சுரக்கும்வண்ணம் எல்லாம்வல்ல முழுமுதற்கடவுளைச் சிந்தித்து வாழ்த்தி வந்திக்கின்றேன்.

---

## கிடைத்த கையெழுத்துப் பிரதிகள்:

---

### மூலமும் கருத்துரையுமுள்ள பிரதிகள்.

திருவாவடுதுறை யாதீனத்துப் ... ... பிரதி க

ம-ா ா-ஸ்ரீ ஜே. எம். வேலுப்பிள்ளையவர்கள், F. M. U. ,, க

திருமயிலை வித்துவான்.

,, சண்முகம் பிள்ளையவர்கள் ... ... ,, க

### மூலமும் கருத்துரையும் பழையவுரையுமுள்ள பிரதி:

ஆழ்வார் திருநகரி,

,, தே. லக்ஷ்மண கவிராயரவர்கள் ... பிரதி க

இவைகளன்றி ஒப்புநோக்குதற்கு இடையிடையே கிடைத்த அபூர்த்தியான பிரதிகள் சில.

மேற்கூறிய யாவும் மிகப் பழமையான பிரதிகளே.

இங்ஙனம்,

**வே. சாமிநாதையன்.**

---

# பாரதம்பாடிய பெருந்தேவனார் முதலியோர்களின் வரலாறு.

---

## க. பாரதம்பாடியபெருந்தேவனார்.

இந்நூலிற் கடவுள்வாழ்த்தியற்றிய இவர் கடைச்சங்கப் புலவர்களுள் ஒருவர்; உரைநடை இயற்றுதலிலும் செய்யுள்செய்தலிலும் மிக்க ஆற்றலுடையவர். இவர்பிறந்தஇடம் தொண்டைநாடு. இது,

"சீருறும் பாடல்பன் னீரா யிரமுஞ் செழுந்தமிழ்க்கு
வீரர்தஞ் சங்கப் பலகையி லேற்றிய வித்தகனார்
பாரதம் பாடும் பெருந்தேவர் வாழும் பழம்பதிகாண்
மாருதம் பூவின் மணம்வீ சிடுந்தொண்டை மண்டலமே"

என்னும் தொண்டைமண்டலசதகச்செய்யுளால் விளங்குகின்றது.

திருவள்ளுவமாலையில், "எப்பொருளும் யாரும்" என்னும்வெண்பா இவர் இயற்றியதாகத்தெரிதலால், இவர்காலம், உக்கிரப்பெருவழுதியார்காலமென்றும் அஃது இற்றைக்கு கஅ00 அல்லது உ000-வருஷத்திற்கு முற்பட்டதாக இருக்கலாமென்றுந் தோற்றுகின்றது.

பெருந்தேவனாரென்பது இவரது இயற்பெயர். இஃது இவரியற்றிய பாரதச்செய்யுளைத் தொல்காப்பியப் பொருளதிகாரவுரையில் மேற்கோளாக எடுத்துக்காட்டும் இடங்களில் நச்சினார்க்கினியர், "இச்செய்யுள் பெருந்தேவனாரியற்றியது" என்று புலப்படுத்தியிருத்தலால் துணியப்படும். பாரதத்தை (உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளாக) இயற்றியதனாற் பாரதம்பாடியபெருந்தேவனாரென்றும் இவர் வழங்கப்படுவர்.

இவரியற்றிய கடவுள்வாழ்த்துக்களுள் ஐங்குறுநூறு, அகநானூறு, புறநானூறு, இவைகளிலுள்ளவைகள் சிவபெருமான்துதிகளாகவும், நற்றிணையிலுள்ளது திருமால்துதியாகவும், குறுந்தொகையிலுள்

வது முருகக்கடவுள் துதியாகவும் உள்ளனவாதலாலும், பாரதவெண்பாவில் இவர் விநாயகக்கடவுளைத் துதித்திருத்தலாலும் இவருடைய கடவுள்வழிபாடும் கொள்கையும் இன்னவெனத் துணிந்து சொல்லக் கூடவில்லை.

10

## ஒரம்போகியார்.

இவரியற்றிய கடவுள்வாழ்த்துக்கள் நற்றிணைமுதலிய தொகை நூல்களின் முன்னர் வைக்கப்பெற்றிருத்தலும், ஐந்தாமறையாகிய பாரதத்தை இவரியற்றியிருத்தலும் இவருடைய முதன்மையையும் கல்விப்பெருமையையும் தெரிவிக்கின்றன.

பாரதவெண்பாவில் இடையிடையே அரசனொருவன் இவராற் பாராட்டப்படுகிறான். அவனது இயற்பெயர் தெரியவில்லை.

இவரியற்றிய நூல் பாரதவெண்பா. தொகைநூல்களிற் கடவுள் வாழ்த்துச் செய்யுட்கள் ஐந்தும் [நற். குறு. ஐங். அகநா. புற.], நற்றிணையில் ஒன்றும், அகநானூற்றில் ஒன்றும், திருவள்ளுவமாலையில் ஒன்றும் ஆக எட்டு வேறு தனிச்செய்யுட்கள் இவர்செய்தனவாக இப்பொழுது காணப்படுகின்றன.

---

## உ. ஓரம்போகியார்.

இந்நூலின் முதல்நூறாகிய மருதத்தைப் பாடிய இவர் கடைச்சங்கப் புலவர்களுள் ஒருவர். இப்பெயர் ஓரம்போதியாரென்றும், ஓரேர்போகியாரென்றும், ஒன்னூருழவரென்றும் பிரதிகளில் வேறுபட்டுக்காணப்படுகின்றது. இவர் மருதத்திணையில் மிகப்பயின்றவர்; அதன்வளங்களை விளங்கப்பாடுதலில் மிக்க ஆற்றலுடையவர்; தமிழ்நாட்டரசர் மூவர்களாலும் பிற உபகாரிகளாலும் நன்கு மதிக்கப்பெற்றவர். இவைகள் இவரியற்றிய செய்யுட்களால் நன்கு புலனாகின்றன. இவரியற்றியவைகளாக நற்றிணையில் இரண்டும், குறுந்தொகையில் நான்கும், ஐங்குறுநூற்றில் நூறும் (மருதம்), அகநானூற்றில் ஒன்றும், புறநானூற்றில் ஒன்றும் ஆக நூற்றெட்டுப்பாடல்கள் இப்பொழுது கிடைக்கின்றன. அவற்றுள், க௦௬ - செய்யுட்கள் மருதத்திணையின் வளத்தையே கூறுவனவாகவுள்ளன.

இவராற் பாடப்பட்டோர்கள் ஐவர். அவர்களில் முடிமன்னர் மூவர்: க. சேரமான்களில் ஆதனவினியென்பவன்* உ. வெல்போர்ச்

* இப்பெயர்முதலியன உள்ள இடங்களை இப்புத்தகத்தில் அரும்பத அகராதியிற்காண்க.



சோழன், கடுமான்கிள்ளி. ௩. பாண்டியன். (௫௪, ௫௫.) கோடையாளிகள் இருவர்: க. விராஅன். உ. மத்தி.

இவர்பாடலில் வந்துள்ள ஊர்கள் நான்கு: க. தேனூர், உ. ஆமூர், ௩. இருப்பை, ௪. கழார்.

நதிகள் இரண்டு: க. காவிரி, உ. வையை.

துறை ஒன்று: திருமருதந்துறை (மருதத்துப்பெருந்துறை.)

விழவு ஒன்று: இந்திரவிழவு.

விரதம் ஒன்று: தைத்திங்களில் நீராடல்.

## ௩. அம்மூவனார்.

இந்நூலின் இரண்டாமுகிய நெய்தற்றிணையைப் பாடிய இவர் கடைச்சங்கப் புலவர்களுள் ஒருவர்; இவர்பெயர் இடுகுறியோ காரணக்குறியோ யாதும் புலப்படவில்லை. நற்றிணை ௧௮-ம் செய்யுளினும் புறநானூறு ௨௦௯-ம் செய்யுளின் பின்னுள்ள வாக்கியத்திலும் மூவனென்று ஓர் உபகாரியின்பெயர் வந்திருத்தலால், மூவனென்ற பெயரொன்று பண்டைக்காலத்தில் வழங்கிவந்ததென்றுதெரிகிறது. இவர் நெய்தற்றிணையில் மிகப்பயின்றவர்; அதன்வளங்களை விளங்கப் பாடுதலில் மிக்க ஆற்றலுடையவர். தமிழ்நாட்டரசர்களுள் **சேரன் பாண்டியன்** என்னும் முடியுடைவேந்தர் இருவராலும், திருக்கோவலூரையாண்ட **காரி**யென்னும் வள்ளலாலும் ஆதரிக்கப்பெற்றவர். சேரநாட்டுக் கடற்கரைப்பட்டினமாகிய **தொண்டிநகரமும்**, அந்நாட்டின்கண்ணதாகிய **மாந்தைநகரமும்**, பாண்டிநாட்டுக் கடற்கரைப்பட்டினமாகிய **கோற்கைநகரமும்**, நடுநாட்டின்கண்ணதாகிய **கோவலூரும்** இந்நூலினும் பிற தொகை நூல்களினும் இவராற்பாராட்டப்பெற்றிருத்தலின், இவர் அந்நகரங்களில் மிகப்பயின்றவரென்றும் இவர் காலத்தில் அவைகள் மிக விளக்கமுற்றிருந்தனவென்றும் தெரிகின்றன. அகநானூறு ௩௫-ம் செய்யுளிற் பெண்ணையாறு இவராற் சிறப்பிக்கப்பட்டுள்ளது.

இவரியற்றியவைகளாக நற்றிணையில் ௰-ம், குறுந்தொகையில் ௧௧-ம், ஐங்குறுநூற்றில் நூறும் (நெய்தல்), அகநானூற்றில் ௬-மாக ௧௨௭-பாடல்கள் இப்பொழுது கிடைக்கின்றன. நற்றிணைமுதலிய





ஏனைத் தொகை நூல்களிலுள்ள ௨௭-பாடல்களிலும் நெய்தற்குரியன பல.

---

## ௪. கபிலர்.

இந்நூலின் மூன்றுநூறாகிய குறிஞ்சித்திணையைப் பாடிய இவர் கடைச்சங்கப்புலவர்களுள் ஒருவர்; [இப்பெயரையுடைய புலவர்கள் சிலருளர்.] குறிஞ்சித்திணையில் மிகப்பயின்றவர்; அதன் வளங்களை விளங்கப்பாடுதலில் மிக்க ஆற்றலுடையவர். இவற்றை இவரியற்றிய செய்யுட்கள் பலவும் புலப்படுத்தும். இவர்பிறந்த ஊர் பாண்டிநாட்டிலுள்ள திருவாதவூர். இது, * திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணத்தில் உ௪-வதாகிய குதிரையிடு ஞான உபதேசஞ்செய்த திருவிளையாடலிலுள்ள † "நீதியார் மதூக நீழ னெட்டிலை யிருப்பை யென்றோர், காதல்கூர் பனுவல் பாடுங் கபிலனார் பிறந்த மூதூர், சோதிசேர் வகுள நீழற் சிலம்பொலி துளங்கக் காட்டும், வேதநாயகனார் வாழும் வியன்றிரு வாத வூரால்" என்னும் ௪-ம் திருவிருத்தத்தால் வெளியாகின்றது.

இவர் அந்தணவருணத்தினர்; புறநானூறு ௨௦௦,—"யானே, பரிசிலன் மன்னு மந்தணன்", ௨௦௧,—"யானே, தந்தை தோழனிவரென் மகளிர், அந்தணன் புலவன் கொண்டுவந் தனனே" எனத் தம்மைப்புலப்படுத்தற்காக இவர்கூறிய செய்யுட்களும், ௧௨௬,—"புலனழுக் கற்ற வந்த ணாளன்" என மாறோக்கத்து நப்பசலையார் இவரைப் பாராட்டிக்கூறிய செய்யுளும் இதனைப் புலப்படுத்தும்.

வேள் பாரியினுடைய உயிர்நண்பரும் அவனுடைய அவைக்களத்துப் புலவருமாக இவர் விளங்கினார். தமிழ்நாட்டு மூவேந்தரும் அழுக்காறுற்று அவனைக் கொல்லநினைந்து நால்வகைச்சேனைகளோடும் அவன்மலையைச் சூழ்ந்தகாலையில் அவர்களைச் சிறிதும் மதியாது அவனுடைய அருமைக்குணங்களைப் புலப்படுத்திப்பாடினார்; [அவ்

* பழைய திருவிளையாடற் புராணம்.

† "நெட்டிலை யிருப்பை வட்ட வொண்பூ, வாடா தாயிற் பீடைப் பிடியின், கோடேய்க் கும்மே வாடிலோ வைந்தலைப், பரதர் மனைதொறு முணங்குஞ், செந்தலை யிறவின் சீரேய்க் கும்மே." இச்செய்யுள், தமிழ்நாவலர் சரிதையிற்கண்டது.

வருமைச் செய்யுட்கள் புறநானூற்றிற் காணப்படும்.] அவன் இறந்த பின்பு, இவர், பிரிவாற்ருது மனமுருகிப் பலசெய்யுட்களாற் புலம்பி, அவன்புதல்வியரை அழைத்துச்சென்று மணஞ்செய்துகொள்ளும் படி இருங்கோவேள், விச்சிக்கோனென்பவர்களை வேண்டி, மறுத் தமை கண்டு அவர்களை வெறுத்துப் பின்பு அம்மகளிரைப் பார்ப் பார்ப்படுத்துத் தம்முடைய நட்புக்கடனைக் கழித்தனர். ஆரியவர சன் பிரகத்தனைத் தமிழறிவித்தற்குக் குறிஞ்சிப்பாட்டை அருளிச் செய்தனர். சேரமான் செல்வக்கடுங்கோ வாழியாதனைப் பாடி நூரு யிரங்காணமும் அவன் ஒருமலைமீதேறிக் கண்டுகொடுத்த நாடும் பரிசி லாகப்பெற்றனர். பத்துப்பாட்டினுள் ஒன்ருகிய மேற்கூறிய குறிஞ் சிப்பாட்டும், பதினெண்கீழ்க்கணக்கினுள் ஒன்ருகிய இன்னாநாற்பதும் இவர் இயற்றிய நூல்கள்.

இவருடைய செய்யுட்கள் மிக்க இனிமையையுடையன; பழைய வுரைகளில் உதாரணமாகக்காட்டப்படும் 'கபிலரதுபாட்டு' என்னும் வாக்கியமே இதனைவலியுறுத்தும்.

இவரருளிச்செய்தனவாக உ0ு-பாடல்கள் இப்பொழுதுகிடைக் கின்றன. அவற்றுள், அகவற்பாக்கள், நற்றிணையில் உ0-ம், குறுந் தொகையில் உகூ-ம், ஐங்குறுநூற்றில் க00-ம் (குறிஞ்சி), பதிற்றுப்ப த்தில் க0-ம், அகநானூற்றில் கசு-ம், புறநானூற்றில் ஙக-ம், பத்துப் பாட்டினுள் க-ம், "நெட்டிலையிருப்பை" என்பது க-ம் ஆக உ0அ. வெண்பா, திருவள்ளுவமாலையில், "தினையளவு" என்பது க-ம், இன் னாநாற்பதிலுள்ள பாக்கள் சக-ம் ஆக சஉ.

மேற்கூறிய அகவற்பாக்கள் இருநூற்றெட்டினுள் குறிஞ்சித் திணையைச் சார்ந்தவை கஙுகு.

இவருடைய வாக்கில் விநாயகக்கடவுள், முருகக்கடவுள், சிவ பெருமான், பலதேவர், திருமால் இவர்களுடையதுதிகள் வந்திருக் கின்றன. இதனால், இவர் சமயக்கோட்பாட்டில் பாரதம்பாடிய

பெருந்தேவனாைப்போன்றவராக எண்ணப்படுகிறார்.

எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு என்னும் முத்தொகுதி நூல்களிலும் இவருடைய பாடல்களும் நூல்களும் கலந்திருத்தல் இவரது பெருமையை விளக்குகின்றது.

பதிற்றுப்பத்து அடு - "அரசவை பணிய வறம்புரிந்து வயங்கிய,



மறம்புரி கொள்கை வயங்குசெந் நாவி, னுவலை கூராக் கவலையி னெஞ்சின, னனவிற் பாடிய நல்லிசைக், கபிலன்" எனப் பெருங்குன்றூர் கிழாரும், புறநானூறு, ருஙு - "வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன்" எனப் பொருந்திலிளங்கீரனாரும், கஉகூ - "புலனழுக் கற்ற வந்தணாள, னிரந்துசென் மாக்கட் கினியிட னின்றிப், பரந்திசை நிற்கப் பாடினன்", கஎசு - "பொய்யா நாவிற் கபிலன்" என மாறோக்கத்து நப்பசலையாரும் பாடியவற்றைப் பார்க்கையில் இவருடைய மனம் வாக்குக் காயங்களின் தூய்மையும், அறம்புரி கொள்கையும், பெரும்புலமையும், அன்புடைமையும், நட்பின் பெருமையும் நன்குவிளங்குகின்றன.

இவராற் பாடப்பட்டோர்: அஃதை, இருங்கோவேள், ஓரி, சேரமான் செல்வக்கடுங்கோவாழியாதன், நள்ளி, மலையமான்திருமுடிக்காரி, விச்சிக்கோன், வேள்பாரி, வையாவிக்கோப்பெரும்பேகன், மலையன் என்பவர்கள்.

கொல்லிமலை, பறம்புநாடு, பறம்புமலை, முள்ளூர்மலை, மூள்ளூர்க்கானம் என்பவைகள் இவராற் பாராட்டப் பெற்றிருத்தலின், அவைகள் இவர்காலத்தில் மிக விளக்கமுற்றிருந்தன வென்றும் இவர் பழகிய இடங்களென்றுந் தெரிகின்றன.

நட்பு, வண்மை, நன்றிமறவாமை என்பவைகளை இவருடைய செய்யுட்களிற் பெரும்பாலன நன்கு புலப்படுத்தும்.

கக-ம் திருமுறையில் வந்துள்ள மூத்தநாயனார் திருவிரட்டை மணிமாலை, சிவபெருமான் திருவிரட்டை மணிமாலை, சிவபெருமான் திருவந்தாதி என்னும் பிரபந்தங்கள் மூன்றையும் அருளிச்செய்த கபிலதேவநாயனாரென்பவர் இவரேயென்று பெரியோர் கூறுவர்; திருவாலவா யுடையார் திருவிளையாடற் புராணத்திலுள்ள இடைக்காடன் பிணக்குத்தீர்த்த திருவிளையாடலில் கஉ-ம் திருவிருத்தக்

தில், "எணையங் காதி சொன்னவன் கபிலன்" எனச் சிவபெருமான் கட்டளை யிட்டருளியதாகக் கூறியிருத்தல் காண்க.

பழைய இலக்கணவுரைகளில் 'கபிலபரணர்' என்று வழங்குகிற தொகைநிலைத்தொடரை உற்றுநோக்குங்கால் சங்கப்புலவர்களுள் பரணரென்பவருக்கு இவர் சிறந்த நட்பினரென்றும், மேற்கூறிய திருவிளையாடற்புராணத்தில் வந்துள்ள "பின்னயில் கபிலன் றோழன் பெயரிடைக் காட னென்போன்" என்னுந் திருவிருத்தத்தால்



இடைக்காடருக்கு இன்றியமையாத தோழரென்றும் எண்ணப்படுகிறார். இவர் வேறு; தொகைநூல்களிற் காணப்படும் தோல்கபிலரென்பவர் வேறு.

## ரு. ஓதலாந்தையார்.

இந்நூலில் நான்காநூறாகிய பாலைத்திணையைப் பாடிய இவர் கடைச்சங்கப்புலவர்களுள் ஒருவர். (ஆதன் தந்தை யென்பது ஆந்தையென்று மருவியதென்பது பழைய உரையாசிரியர்களுடைய கொள்கை.) பாலைத்திணையிலேயே மிகப்பயின்றவர்; அதனியல்பை விளங்கப் பாடுதலில் மிக்க ஆற்றலுடையவர். இவரியற்றியனவாகக் குறுந்தொகையில் ரு-ம், ஐங்குறுநூற்றில் க00-ம் (பாலை), ஆக க0ரு-செய்யுட்கள் இப்பொழுது கிடைக்கின்றன. அவற்றுள் க0உ-செய்யுட்கள் பாலையினியல்பைக் கூறுவனவாகவிருத்தல் இவர் பாலை பாடுதலில் வல்லுநரென்பதை வலியுறுத்தும்.

## சு. பேயனார்.

இந்நூலின் ஐந்தாநூறாகிய முல்லைத்திணையைப் பாடிய இவர் கடைச்சங்கப் புலவர்களுள் ஒருவர்; முல்லைத்திணையில் மிகப்பயின்றவர்; அத்திணைவளங்களை விளங்கப்பாடுதலில் மிக்க ஆற்றலுடையவர். மற்றத்தொகைகளுள்ளே குறுந்தொகையில் மட்டும் ச-ஆக

வற்பாக்கள் இவர் செய்தனவாகக் காணப்படுகின்றன. அவற்றுள், ௩-செய்யுட்கள் முல்லைத்திணையைக் குறித்தனவே. இதனால், இவருடைய பயிற்சியும் ஆற்றலும் புலப்படுகின்றன. இவரியற்றிய செய்யுட்கள் மேற்கூறிய கஎ-என்றே இப்பொழுது தெரிகின்றது. பேயனென்றும் பேயாரென்றும் இவர்பெயர் பிரதிகளிற் காணப்படுகின்றது. யாப்பருங்கல விருத்தியுரையில்,

* "கறைப்பற் பெருமோட்டுக் காடு கிழவோட்
கரைத்திருந்த சாந்தைத்தொட் டப்பேய்
மறைக்குமோ மாட்டாது மற்றுந்தன் கையைக்
குறைக்குமாங் கூர்ங்கத்தி கொண்டு"

* இவ்வெண்பா, மிக்க வேறுபாட்டுடன் கம்பர்பாடியதாகத் தனிப்பாடற்றிரட்டிற் காணப்படுகின்றது; 'கூன்கத்தி' என்றும் பாடம்.



என்னும் வெண்பாவை மேற்கோளாக எடுத்துக்காட்டிய அந்நூலுரையாசிரியர், 'இது பூதத்தாரும் காரைக்காற்பேயாரும் பாடியது (காரைக்காற் பேயம்மையாரென்றும் பிரதிபேதமுண்டு); இதுவும் இரண்டாமடி குறைந்துவந்தது கண்டுகொள்க' என்று எழுதியிருத்தலாற் காரைக்காற்பேயாரென்று ஒருவர் பண்டைக்காலத்திற் பாடும் வன்மையுள்ளவராக இருந்தாரென்றுமட்டும் தெரிகின்றது. அவரும் இவரும் ஒருவரோ வேறோ யாதும் புலப்படவில்லை.

## எ. புலத்துறைமுற்றிய கூடலூர் கிழார்.

யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறையாரின் வேண்டுகோளின்படி இந்நூலைத் தொகுத்தோராகிய இவர் கடைச்சங்கப் புலவர்களுள் ஒருவர்; மலைநாட்டின் கண்ணதாகிய கூடலூரிற் பிறந்தவர்; வேளாளர்; கூடலூர்கிழாரென்பது இவரது இயற்பெயர். மேற்கூறிய அரசரால் மிக ஆதரிக்கப் பெற்றவர். அவரிறந்த பின்பு ஒருவாற்றானும் பிரிவாற்றாது மிகவருந்திப் புலம்பினர். இவர் வருந்திப் புலம்பிய செய்யுள் புறநானூறு, உஉகூ-வது. சேரநாட்டின்கண்

ணதாகிய மாந்தையென்னும் நகரம் இவராற் பாராட்டப்பெற்றுள்
ளது. இவரியற்றியனவாகக் குறுந்தொகையில் ௩-செய்யுட்களும்
புறநானூற்றில் ஒருசெய்யுளும் காணப்படுகின்றன. பதினெண்
கீழ்க்கணக்கினுள் ஒன்றாகிய முதுமொழிக்காஞ்சியை அருளிச்செய்த
மதுரைக் கூடலூர்கிழாரென்பவர் வேறு, இவர் வேறு. இவர்காலத்
துப் புலவர்கள் குறுங்கோழியூர் கிழார், பொருந்திலிளங்கீரனாரென்ப
வர்கள். இவர் பெயர் கூடலூர்கிழாரெனவும் வழங்கும். சான்றோராற்
சிறப்பித்துக் கூறப்படும் 'புலத்துறைமுற்றிய' என்னும் அடைமொழி
இவருடைய நூலாராய்ச்சியின் மிகுதியைப் புலப்படுத்துகின்றது.

## ௮. யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறையார்.

புலத்துறை முற்றிய கூடலூர்கிழாரைக்கொண்டு இந்நூலைத்
தொகுப்பித்தோராகிய இவர் சேரநாட்டரசர்; சேரபரம்பரையிற்
பிறந்தவர்; மகாவீரர்; பெருவண்மையையுடையவர்; செங்கோலி



னர்; யானையினது பார்வைபோலும் பார்வையையுடையவர்; கொல்லி
மலைக்குத் தலைவர்; விளங்கிலென்னுமூருக்குப் பகைவரான் வந்த
துன்பத்தைத் தீர்த்தவர்; கபிலருடைய நண்பர்; கடற்கரையிலுள்ள
தொண்டியென்னும் நகரத்தை ஆண்டவர்; ஒருகாலத்துப் பாண்டி
யன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனோடு போர்
செய்து அவனாற்பிணிப்புண்டிருந்து வலிதிற்போய்ச் சிங்காதனத்தி
லேறிக் குறுங்கோழியூர்கிழாராற் புகழ்ந்து பாடப்பெற்றார். சோ
ழன் இராயசூயம் வேட்ட பெருநற்கிள்ளியோடு போர் செய்தவர்;
இவர் பெயர் கோச்சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்
பொறையெனவும், சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்
பொறை யெனவும், சேரன் மாந்தரஞ்சேரலிரும்பொறை யென
வும், மாந்தரஞ்சேரலிரும்பொறை யெனவும், மாந்தரம் பொறை

யெனவும் தொகைநூல்களில் வழங்குகின்றது. பரிமேலழகர் ௩௯௰-ம் திருக்குறளின் விசேடவுரையில் இவருடைய பெயரை மேற்கோளாக எடுத்துக்காட்டிப் பொருளெழுதி விளக்கியிருக்கிறார்; சேரபரம்பரையில் மாந்தரனென்று ஒரரசன் மிக்க புகழ்பெற்றவனாக இருந்தானென்று பதிற்றுப்பத்தால் தெரிகின்றது. இவருடைய பெயர்த்தலையில், 'கோச்சேரமான்' என்ற அடைமொழி இல்லாமலிருத்தலின், இவர் இந்நூலைத் தொகுப்பிக்குங் காலத்தில் இளவரசராகஇருந்தாரென்றும் தொகுப்பித்தபின்பே முடிபுனையப் பெற்றாரென்றுந் தெரிகின்றன. [கோவென்பது பண்டைக் காலத்தில் முடிபுனைந்தபின்பு குடிப்பெயரோடு கொடுக்கப்படும் பட்டப்பெயர்; கோச்சேரன், கோச்சோழன், கோப்பாண்டியன் என்பவற்றாலுணர்க.] இவரிறந்தபின்பு பிரிவாற்றாது வருந்திப்புலம்பிய கூடலூர்கிழாருடைய "ஆடியலழற்குட்டம்" என்னும் செய்யுள் இவருடைய அருமைக்குணவிசேடங்களை இனிது புலப்படுத்தும்; (புறநானூறு. உ௨௯.) இவரைப் பாடிய புலவர்கள் குறுங்கோழியூர்கிழார், பொருந்திலிளங்கீரனார், கூடலூர்கிழார். இவர்களுள் இவரிறந்தபின்புமிருந்தவர் கூடலூர்கிழார்.

---

## சூசீபத்திரம்.

# ஐங்குறுநூறு.

பக்கம். | பக்கம்.

கணபதி துணை.

# ஐங்குறுநூறு.

[கடவுள்வாழ்த்து.]

நீல மேனி வாலிழை பாகத்
தொருவ னிருதா ணிழற்கீழ்
மூவகை யுலகு முகிழ்த்தன முறையே.

வாழ்த்து.

பாரதம்பாடிய பெருந்தேவனார்.

(பிரதிபேதம்:) மூலம், மாஅ மேனி, மாமலர் மேனி.

## ௧.—மருதம்.

### ௧.—வேட்கைப் பத்து.

௧. வாழி யாதன் வாழி யவினி
நெற்பல பொலிக பொன்பெரி தூ சிறக்க
வெனவேட் டோளே யாயே யாமே
நனைய காஞ்சிச் சினைய சிறுமீன்
யாண ரூரன் வாழ்க
பாணனும் வாழ்க வெனவேட் டேமே.

என்பது, புறத்தொழுக்கத்திலே நெடுநாளொழுகி, 'இது தகாது' எனத் தெளிந்த மனத்தனாய் மீண்டு தலைவியோடுகூடி ஒழுகாநின்ற தலைமகன்

தோழியோடு சொல்லாடி, 'யான் அவ்வாறொழுக நீயிர் நினைத்ததிறம் யாது' என்றற்கு அவள் சொல்லியது.

(பழையவுரை:) 'காவற்பொருட்டு அரசன் வாழ்க; விருந்தாற்றுதற்பொருட்டு நெற்பல பொலிக; இரவலர்க்கு ஈதற்பொருட்டுப் பொன் உண்க



டாகுக' என யாய் இல்லறத்திற்கு வேண்டுவன விரும்பி ஒழுகியதல்லது பிறிது நினைத்திலள்; அவள் இத்தன்மையளாக, நீ ஒழுகிய ஒழுக்கத்தால் நினக்கும் நின்னொழுக்கத்திற்குத் துணையாகிய பாணனுக்கும் தீங்குவருமென்றஞ்சி, 'யாண ரூரன் வாழ்க, பாணனும் வாழ்க' என விரும்பினேம் யாங்களென்றவாறு. தலைவியை யாயென்றது, புலத்தற்குக் காரணமாயின உளவாகவும் அவை மனங்கொள்ளாத சிறப்பைநோக்கி. தோழி யாங்களென உளப்படுத்தது, ஆயத்தாரைநோக்கியெனக் கொள்க. பூவும் புலாலும் ஒக்கவிளையும் ஊரனென்றது, குலமகளிரைப்போலப் பொதுமகளிரையும் கொண்டொழுகுவா னென்பதாம். ஆதனவினியென்பான், சேரமான்களிற் பாட்டுடைத் தலைமகன்.

(பி - ம்:) மூ. எனவேட்டோமே (க - க ο). (க)

உ. வாழி யாதன் வாழி யவினி
விளைக வயலே வருக விரவல
ரெனவேட் டோளே யாயே யாமே
பல்லிதழ் நீலமொடு நெய்த னிகர்க்குந்
தண்டுறை யூரன் கேண்மை
வழிவழிச் சிறக்க வெனவேட் டேமே.

இதுவுமது.

(ப - ரை:) தலைவி இல்லறமே நினைந்து ஒழுகினள்; யாங்கள் நின்காதல் அவள்மேற் சுருங்குகின்ற திறநோக்கி, 'நின்கேண்மை வழிவழிச்சிறக்க' என விரும்பினேம். எ-று. சிறப்புடைய கருங்குவளையுடனே சிறப்பில்லாத நெய்தல்நிகர்க்கு மூரனென்றது, குலமகளிருடனே பொதுமகளிர் இகலுமூரன். எ - று.

(பி - ம்:) மூ. வழிவழி சிறக்க. (உ)

ங. வாழி யாதன் வாழி யவினி
பால்பல வூறுக பகடுபல சிறக்க

வெனவேட் டோளே யாயே யாமே
வித்திய வுழவர் நெல்லொடு பெயரும்
பூக்கஞ லூரன் றன்மனை
வாழ்க்கை பொலிக வெனவேட் டேமே.

இதுவுமது.

(ப - ரை:) தலைவி இல்லறமேநினைந்து ஒழுகினள்; 'அவன் பொதுமனையில் வாழ்க்கையொழிந்து தன்மனையிலே வாழ்வானாக' எனவேட்டேம்யாங்கள். எ-று. மேல் விளைதற்குவித்திய உழவர் முன்பு விளைந்த செறுவின் நெல்லோடு



பெயருமென்றது, பின்வரும் பரத்தையர்க்கு வருவாய்பண்ணி அக்காலத்து உளராகிய பரத்தையரோடு இன்புநுகர்வானென்பதாம். (௩)

௪. வாழி யாதன் வாழி யவினி
பகைவர் புல் லார்க பார்ப்பா ரோதுக
வெனவேட் டோளே யாயே யாமே
பூத்த கரும்பிற் காய்த்த நெல்லிற்
கழனி யூரன் மார்பு
பழனமா கற்க வெனவேட் டேமே.

இதுவுமது.

(ப - ரை:) இவள் இல்லறமே விரும்பியொழுகினள்; 'அவன்மார்பு ஊரவர்க்கெல்லாம் பொதுவாகிய பழனம்போலாது இவட்கேயுரித்தாக' என விரும்பினேம் யாங்கள். எ - று. பூத்துப் பயன்படாக்கரும்பினையும் காய்த்துப் பயன்படும் நெல்லினையுமுடைய ஊரனென்றது, ஈன்று பயன்படாப் பொதுமகளிரையும் மகப்பயந்து பயன்படுங் குலமகளிரையும் ஒப்பநினைப்பான். எ - று.

(பி - ம்:) ௨. பகையர். (௪)

௫. வாழி யாதன் வாழி யவினி
பசியில் லாகுக பிணிசே ணீங்குக
வெனவேட் டோளே யாயே யாமே
முதலைப் போத்து முழுமீ னாருந்
தண்டுறை யூரன் றேரெம்
முன்கடை நிற்க வெனவேட் டேமே.

இதுவுமது.

(ப - ரை:) இவள் இல்லறமேவிரும்பியொழுகினள்; யாங்கள் 'அவன்றேர் பிறமகளிர்முன்கடைநிற்றலொழிந்து எம்முன்கடைநிற்க' எனவிரும்பினேம். எ - று. 'முதலை ...... ஊரன்' எ - து, ஒருங்குவாழ்வாரைப் பழமைநோக்காது உயிர்கவர்வானென்பதாம். (௫)

சு. வாழி யாதன் வாழி யவினி
வேந்துபகை தணிக யாண்டுபல நந்துக
வெனவேட் டோளே யாயே யாமே
மலர்ந்த பொய்கை முகைந்த தாமரைத்
தண்டுறை யூரன் வரைக
வெந்தையுங் கொடுக்க வெனவேட் டேமே.

## ஐங்குறுநூறு.

எ - து, களவினிற் பலநாளொழுகி வந்து வரைந்துகொண்ட தலைமகன் தோழியோடுசொல்லாடி, 'யான் வரையாது ஒழுகுகின்றநாள் நீயிர் இங்கு இழைத்திருந்த திறம்யாது' என்றாற்கு அவள் சொல்லியது.

(ப - ரை:) நின்னை எதிர்ப்பட்டவன்றே நீ வரைந்தாயெனக்கொண்டு இல்லறத்திற்கு வேண்டுவனவிரும்பி ஒழுகியதல்லது தலைவி பிறிதொன்றும் நினைத்திலள்; யாங்கள் 'அகன்ற பொய்கைக்கு அணியாகத் தாமரையையுடைய ஊரனாதலால், அத்தண்டுறையூரன் மனைக்கு அணியாம்வண்ணம் இவளை வரைவானாக; எந்தையும் கொடுப்பானாக' என விரும்பினேம். எ-று. ஈண்டுத் தலைவியை யாயென்றது, எதிர்ப்பட்ட ஞான்றே கற்புப்பூண்டொழுகுகின்ற சிறப்பைநோக்கி.

(பி - ம்:) கருத்து. நீயிர் நினைத்திருந்ததிறம். (சு)

எ. வாழி யாதன் வாழி யவினி
யறநனி சிறக்க வல்லது கெடுக
வெனவேட் டோளே யாயே யாமே
யுளைப்பூ மருதத்துக் கிளைக்குரு கிருக்குந்
தண்டுறை யூரன் றன்னூர்க்
கொண்டனன் செல்க வெனவேட் டேமே.

இதுவுமது.

(ப - ரை:) இவள் நின்னை எதிர்ப்பட்டஅன்றே வரைந்தாயெனக்கொண்டு

இல்லறத்திற்குவே...............

(பி - ம்:) மூ. தன்னூர் கொண்டனன். (எ)

அ. வாழி யாதன் வாழி யவினி
யரசுமுறை செய்க களவில் லாகுக
வெனவேட் டோளே யாயே யாமே
யலங்குசினை மாஅத் தணிமயி லிருக்கும்
பூக்கஞ லூரன் சூளிவண்
வாய்ப்ப தாக வெனவேட் டேமே.

இதுவுமது. (அ)

கூ. வாழி யாதன் வாழி யவினி
நன்றுபெரிது சிறக்க தீதில் லாகுக
வெனவேட் டோளே யாயே யாமே
கயலார் நாரை போர்விற் சேக்குந்

## உ.—வேழப்பத்து.



தண்டுறை யூரன் கேண்மை
யம்பல்ா கற்க வெனவேட் டேமே.

இதுவுமது.

(ப - ரை:) 'இன்ப நுகர்ந்தவன் செல்வமனைக்கண்ணே வைகும்வண்ணம் வரையுந்துணையும் அவன்கேண்மை அம்பலாகா தொழிக' எனவிரும்பினேம் யாங்கள். எ - று. (க)

க0. வாழி யாதன் வாழி யவினி
மாரி வாய்க்க வளநனி சிறக்க
வெனவேட் டோளே யாயே யாமே
பூத்த மாஅத்துப் புலாலஞ் சிறுமீன்
றண்டுறை யூரன் றன்னொடு
கொண்டனன் செல்க வெனவேட் டேமே.

இதுவுமது.

(ப - ரை:) இவள் தன்னை எதிர்ப்பட்டவன்றே வரைந்தானெனக்கொண்டு இல்லறத்திற்கு வேண்டுவன விரும்பி ஒழுகினள் ; யாங்கள், ' அவன் வரைந்துகொள்ள நினையானுயின், பூத்தமாவினையும் புலாலஞ்சிறுமீனையுமுடைய ஊரனாதலால், அதற்கேற்ப, எம்மூர்க்கண் அறத்தொடுநிலைவகையாற் கற்புடை

மையும் எதிர்ப்பாட்டினால் அலரும் கிளப்பவாயினும் உடன்கொண்டு செல்வானாக' என விரும்பினேம். எ - று. (௧௦)

## வேட்கைப்பத்து முற்றிற்று.

---

# ௨.—வேழப்பத்து.

௧௧. மனைநடு வயலை வேழஞ் சுற்றுந்
துறைகே ழூரன் கொடுமை நாணி
நல்ல னென்றும் யாமே
யல்ல னென்னுமென் றடமென் றோளே.

எ - து, பாணன்முதலாயினார்க்குத் தலைமகன்கொடுமைகூறி வாயின் மறுத்த தலைமகள் கழறிய பாங்கற்கு வாயினேர்வாள் சொல்லியது; 'தலைவன் எவ்வாறு தப்பியொழுகினும் அவன்கொடுமை நின்னாற் புலப்படுதல் தகாது' என்று கழறிய பாங்கிக்குத் தலைமகள் சொல்லியதூஉமாம்.



(ப - ரை:) மனைக்கண்வயலை புறத்துவேழம்சுற்றுமூரனென்றது, மணமனைக்கண்ணே வைகுனான்றும் பரத்தையர்திறமே சூழ்வானென்பதாம்.

(பி - ம்:) மூ. நெடுவெயலை. கருத். புலப்படுத்தற்காகாது. (௧)

௧௨. கரைசேர் வேழங் கரும்பிற் பூக்குந்
துறைகே ழூரன் கொடுமை நன்று
மாற்றுக தில்ல யாமே
தோற்க தில்லவென் றடமென் றோளே.

எ - து, உழையர் நெருங்கிக் கூறியதிறமும் தனது ஆற்றாமையு நினைந்து வாயில்நேரக்கருதிய தலைமகள் பரத்தையர்க்குப் பின்பும் அவன் சிறப்புச்செய்தானென்பதுகேட்டுப் பொருளாய்க் கருத்தழிந்து தன்னுள்ளே சொல்லியது.

(ப - ரை:) கரைமருங்குநிற்கும் வேழம் வயலகத்துவிளைக்கும் நீங் கரும்புபோலப் பொலியுமூரனென்றது, பொதுமகளிர்க்குக் குலமகளிரைப் போலச் சிறப்புச்செய்கிற்பான். எ - று.

(பி - ம்:) கருத். நெருக்கி. (௨)

கங. பரியுடை நன்மான் பொங்குளை யன்ன
வடைகரை வேழம் வெண்பூப் பகருந்
தண்டுறை யூரன் பெண்டிர்
துஞ்சூர் யாமத்துந் துயிலறி யலரே.

எ - து, வாயிலாய்ப்புக்கார்க்குத் தலைமகள், 'அவன்பெண்டிர் நள்ளென் யாமத்தும் துயிலார்; அவரறியாமல் அவன் வருந்திறம்யாது' எனச்சொல்லி வாயில்மறுத்தது.

(ப - ரை:) பரியுடைநன்மான் தலைக்கணிந்த வெண்கவரிபோல வேழம் வெண்பூவைக்கொள்வாரைக்குறித்துக்கொடுக்குமூரனென்றது,நன்றுபோலக் காட்டித் தம்நலத்தினைவிற்பார் வாழும் ஊரன். எ-று.

(பி - ம்:) மூ. புரியுடை. புரிவுடை. துஞ்சும்யாமத்தும். (ங)

கச. கொடிப்பூ வேழந் தீண்டி யயல
வடுக்கொண் மாஅத்து வண்டளிர் நுடங்கு
மணித்துறை யூரன் மார்பே
பனித்துயில் செய்யு மின்சா யற்றே.

## உ.—வேழப்பத்து. எ

எ - து, தலைமகள் புணர்ச்சிவேட்கை குறிப்பினான் உணர்ந்த தோழி, அவன்கொடுமை நினையாது அவன் மார்பை நினைந்து ஆற்றாயாகின்றது என்னை' என்றாட்கு 'அவன்கொடியனே யாயினும், அவன்மார்பு குளிர்ந்த துயிலைச்செய்யும் இனியசாயலையுடைத்து, ஆதலாற்காண்' எனச் சொல்லியது.

(ப - ரை:) தீண்டபூவினையுடைய வேழம் தீண்டுதலான் வடுக்கொண்மாத்துவண்டளிர் நுடங்குமென்றது, பரத்தையால் தமக்கு உளவாகிய மெலிவு கூறியவாறு.

(பி - ம்:) மூ. பணித்துயில். (ச)

கரு. மணலாடு மலிர்நிறை விருப்பிய வொண்டழைப்
புனலாடு மகளிர்க்குப் புணர்துணை யுதவும்
வேழ மூதூ ரூர
னூர னாயினு மூரனல் லன்னே.

எ - து, சேணிடைப்பிரிந்துவந்து உடனுறைகின்ற தலைமகற்குப் புறத் தொழுக்கம் உளதாகின்றதென்று குறிப்பினானுணர்ந்து தலைமகள் வேறுபட்டாளாக, தோழி அதனையறியாது, 'அவன் உடனுறையவும் வேறுபடுகின்றது என்னை' என்றாட்கு அவள் சொல்லியது.

(ப-ரை:) புனலாடு மகளிர்க்குப் புணர்ந்த துணையை உதவுகின்ற வேழத்தையுடைய ஊரனாதலாற் புனலாடும் பரத்தையர்க்கு வேழஞ்செய்வனவெல்லாம் செய்வானென்பதாம்.

(பி-ம்:) ௬. மலர்சிறை. வெண்டழை. ப-ரை. துணைமை. (௫)

௬௬. ஒங்குபூ வேழத்துத் தூம்புடைத் திரள்காற்
சிறுதொழு மகளி ரஞ்சனம் பெய்யும்
பூக்கஞூ ஆரனை யுள்ளிப்
பூப்போ லுண்கண் பொன்போர்த் தனவே.

எ-து, வாயிலாய்ப்புகுந்தார்க்குத் தோழி 'அவன் வரவையே நினைத்து இவள் கண்ணும் பசந்தன; இனி அவன் வந்து பெறுவது என்னே' எனச் சொல்லி வாயின்மறுத்தது.

(ப-ரை:) 'ஓங்குபூ...ஊரன்' எ-து, இழிந்தார்க்குப் பயன்படுமூரன். எ-று. (௬)

௬௭. புதன்மிசை நுடங்கும் வேழ வெண்பூ
விசும்பாடு குருகிற் றோன்று மூரன்
புதுவோர் மேவல னாகலின்
வறிதா கின்றென் மடங்கெழு நெஞ்சே.

அ ஐங்குறுநூறு.

எ-து, தலைமகன் பரத்தையிற் பிரிந்தவழி, 'இவ்வாறு ஒழுகுதலும் ஆடவர்க்கு இயல்பன்றே; நீ இதற்கு நெஞ்சு அழிகின்றது என்னே' என்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது

(ப-ரை:) புறத்தொழுக்கம் உளதாகிய துணையேயன்றி நாடோறும் கனவில் வந்து வருத்துதலுமுடையனாதலால் என்னெஞ்சு பெருமையிழந்து மெலிகின்றதென்பதாம். புதன்மிசையேநுடங்கும் வேழவெண்பூக் கரிதான விசும்பின்கண்ணே பறக்கும் குருகுபோலத்தோன்று மூரன் எ-து, நன்மை தோன்றாது ஒழுகுவாரையுடையான். எ-று. (௭)

௬௮. இருஞ்சா யன்ன செருந்தியொடு வேழங்
கரும்பி னலமருங் கழனி யூரன்
பொருந்துமல ரன்னவென் கண்ணழப்
பிரிந்தன னல்லனோ பிரியலெ னென்றே.

எ-து, பரத்தையிற்பிரிந்து தெளித்துக் கூடியதலைமகற்குப் பின்னும் அவ்வொழுக்கம் உளதாயவழி அவன்வரவிடுத்தவாயில்கட்குத் தலைமகள்

சொல்லியது.

(ப - ரை:) செருந்திப் பூவொடு வேழம் கரும்புபோல அலமருமூர னென்றது, தம்சேடியரோடு பொதுமகளிர் குலமகளிரைப் போலத் தருக்கி யொழுகுமூரன், எ - று. (அ)

கசு. எக்கர் மாஅத்துப் புதுப்பூம் பெருஞ்சினை
புணர்ந்தோர் மெய்ம்மணங் கமழுந் தண்பொழில்
வேழ வெண்பூ வெள்ளுளைச் சீக்கு
மூர னாகலிற் கலங்கி
மாரி மலரிற் கண்பனி யுகுமே.

எ - து, 'பன்னாள் அவன் சேணிடைப்பிரியவும் ஆற்றியுளையாகிய நீ சின்னாள் அவன் புறத்தொழுகுகின்ற இதற்கு ஆற்றாயாகின்றது என்னை' என்றதோழிக்கு 'எதிர்ப்பாடின்றி ஓரூர்க்கண்ணே உறைகையினாலே ஆற்றே னாகின்றேன்' எனத் தலைமகள் சொல்லியது.

(ப - ரை:) வாயிலாய்ப்புகுந்தார் கேட்டு நெருங்காது மாறுதல் கருத்து. மாங்கொம்பூத்து வதுவைமகளிர் மெய்ம்மணம் கமழக்கடவ பொழிலை அம் மலர் அரும்பாகியபருவத்தே வேழங்களின்பூத் துடைக்குமூரன் எ-து, சேணி டைப் பிரிந்துவந்து தன்னுடனாய்நிகழ்கின்ற பருவத்து இன்பங்கள் நுகராமல் இடையே விலக்குகின்ற பரத்தையர்களையுடையான், எ - று.

## உ.—கள்வன் பத்து. சுூ

(பி - ம்:) மூ. சினைப்புணர்ந்தோர். சீய்க்கும். கருத். சேயிடை. (கூ)

உ0. அறுசில் கால வஞ்சிறைத் தும்பி
நூற்றித ழலர்ந்த தாமரைப் பூச்சினை சீக்குங்
காம்புகண் டன்ன தூம்புடை வேழத்துத்
துறைநணி யூரனை யுள்ளியென்
னிறையே லொல்வளை நெகிழ்ப்போ டும்மே.

எ - து, தலைமகளை வாயில் நேர்வித்தற்பொருட்டாக, 'காதலர் கொடு மைசெய்தாராயினும் அவர்திறம் மறவாதொழியல்வேண்டும்' என்று முகம்புகு கின்ற தோழிக்கு, 'என்கைவளை நில்லாதாகின்றது அவரை நினைந்ததன் பயனன்றே; இனி அமையும்' எனத் தலைமகள் சொல்லியது.

(ப-ரை:) தாமரைப்பூவகத்துளதாகிய தும்பிச்சினையை வேழம் சீக்கும் எ-து, தன்மாட்டு எம்புதல்வன் உறைதலையும் விலக்குவாராகிய பொதுமக ளிரையுடையான். எ-று. 'சினைச்சேக்கும்' என்று பாடமோதுவார் தும்பிச்சினை வருந்த வேழம் தங்குமென்று பொருளுரைப்ப.

(பி-ம்:) மூ. சினைச்சேக்கும். துறைகனி. நிறையேபோல்வளை. (௪௦)

வேழப்பத்து முற்றிற்று.

---

## ௩.—கள்வன் பத்து.

---

௨௧. முள்ளி நீடிய முதுநீ ரடைகரைப்
புள்ளிக் கள்வ னாம்ப லறுக்குந்
தண்டுறை யூரன் றெளிப்பவு
முண்கண் பசப்ப தெவன்கொ லன்னாய்.

எ-து, 'புறத்தொழுக்கம் எனக்கு இனியில்லை' என்று தலைமகன் தெளிப்பவும் 'அஃது உளது' என்று வேறுபடும் தலைமகட்குத் தோழி சொல்லியது.

(ப-ரை:) 'முள்ளிநீடிய........லறுக்குமூரன்' என்றது, தனக்கு உரித்தாகிய இல்லின்கண் ஒழுகிப் பரத்தையரோடு தொடர்ச்சியறுப்பான். எ-று. (௧)

௨௨. அள்ள லாடிய புள்ளிக் கள்வன்
முள்ளி வேரளைச் செல்லு மூர
னல்ல சொல்லி மணந்தினி
நீயே னென்ற தெவன்கொ லன்னாய்.

௨



எ-து, களவினிற்புணர்ந்து பின்பு வரைந்துகொண்டு ஒழுகாநின்றதலைமகற்குப் புறத்தொழுக்கம் உளதாயிற்றாக, ஆற்றாளாகிய தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

(ப-ரை:) 'நல்ல...... அன்னாய்' எ-து,இக்காலத்து இங்ஙனம் ஒழுகுகின்றான் அக்காலத்து அங்ஙனங்கூறியதென்கொல். எ-று. சேறாடியகள்வன் முள்ளிவேரளைச்செல்லுமென்றது, பிறர்கூறும்அலரஞ்சாது பரத்தையர்மனைக்கட் செல்வானென்பதாம். (௨)

௨௩. முள்ளி வேரளைக் கள்வ னாட்டிப்

பூக்குற் றெய்திய புனலணி யூரன்
றேற்றஞ் செய்தநப் புணர்ந்தினிந்
தாக்கணங் காவ தெவன்கொ லன்னாய்.

இதுவுமது.

(ப - ரை:) தன்னூர் விளையாட்டுமகளிர் அலையின்கண்வாழும் அலவனை அலைத்துப் பூக்குற்று விளையாடினாற்போலத் தன்மனைக்கண்வாழு நம்மை வருத்திப் புறத்துப்போய் இன்பநுகர்வான். எ - று. (௩)

உச. தாய்சாப் பிறக்கும் புள்ளிக் கள்வனொடு
பிள்ளை தின்னு முதலைத் தவனூ
ரெய்தினு னாகின்று கொல்லோ மகிழ்நன்
பொலந்தொடி தெளிர்ப்ப முயங்கியவர்
நலங்கொண்டு துறப்ப தெவன்கொ லன்னாய்.

எ - து, பரத்தையருள்ளும் ஒருத்தியைவிட்டு ஒருத்தியைப் பற்றி ஒழுகுகின்றானென்பது கேட்ட தோழி வாயிலாய்வந்தார் கேட்பத் தலைமகட்குச் சொல்லியது.

(ப - ரை:) 'தாய்சாப்பிறக்கும்...... அவனூர்' எ-து,தொன்னலம் சாம்வண்ணம்பிறக்கும்பொய்புடனே செய்தனசிதையத்தோன்றும் அருளின்மையையுமுடையான். எ - று.

(பி - ம்:) மூ. தெளிப்ப. தெழிப்ப. (௪)

உரு. அயல்புறந் தந்த புனிற்றுவளர் பைங்காய்
வயலைச் செங்கொடி கள்வ னறுக்குங்
கழனி யூரன் மார்புபலர்க்
கிழைநெகிழ் செல்ல லாகு மன்னாய்.

இதுவுமது.



(ப - ரை:) 'அயல்புறந்தந்த.... .அறுக்கும்' எ - து, எம்புதல்வன் வருந்துவதும் உணராது நம்மைவருத்துவான். எ - று. (௫)

உசா. கரந்தையஞ் செறுவிற் றுணைதுறந்து கள்வன்

வள்ளை மென்கா லறுக்கு மூர
னெம்மும் பிறரு மறியா
னின்ன னாவ தெவன்கொ லன்னாய்.

எ - து, தலைமகற்கு வாயிலாகப் புகுந்தார், 'நின் முனிவிற்கு அவன் பொருந்தா னின்றான்' என்றவழித் தலைமகட்குத் தோழி, 'அவன் பாடு அஃதி ல்லை' என்பதுபடச் சொல்லியது.

(ப-ரை:) 'துணை துறந்து... . ...மூரன்' எ-து, தான் துணையாகக் காத லித்து ஒழுகுகின்ற பரத்தையையு நீக்கி எம்மையும் வருத்தி ஒழுகுவான். எ-று. (வேறுரை:) 'கரந்தையஞ் செறுவிற் றுணை துறந்து' எ-து, நின்னைத் துற ந்து. எ-று. 'வள்ளைமென் காலறுக்கும்' எ-து, பரத்தையருள்ளும் ஒருத்தி யைவிடுவதும் ஒருத்தியைப் பற்றுவது மாகி அவர்களை வருத்துகின்றான். எ-று. 'எம்மும் பிறரு மறியான்' எ-து, எம்மையும் பிறரையும்......... ...

(பி - ம்:) மூ. இன்னனாவது. (சு)

உரு. செந்நெலஞ் செறுவிற் கதிர்கொண்டு கள்வன்
றண்ணக மண்ணளைச் செல்லு மூரற்
கெல்வளை நெகிழச் சாஅ
யல்ல லுழப்ப தெவன்கொ லன்னாய்.

எ - து, தலைமகன் மனைக்கண் வருங்காலத்து வாராது தாழ்த்துழி, 'புறத்தொழுக்கம் உளதாயிற்று' என மாட்டக் கருதி வருந்துந் தலைமகட்குத் தோழி சொல்லியது.

(பி - ம்:) மூ. செங்நெற் செறுவின். (எ)

உஅ. உண்டுறை யணங்கிவ ளுறைநோ யாயிற்
றண்சே று கள்வன் வரிக்கு மூரற்
கொண்டொடி நெகிழச் சாஅய்
மென்றோள் பசப்ப தெவன்கொ லன்னாய்.

எ - து, இற்செறிவித்தவிடத்துத் தலைமகட்கு எய்திய வேறுபாடு கண்டு, 'இது தெய்வத்தினாயிற்று' என்று தமர் வெறியெடுப்புழி அதனை விலக்கக்கருதியதோழி செவிலிக்கு அறத்தொடுநின்றது. (அ)



உகூ. மாரி கடிகொளக் காவலர் கடுக

வித்திய வெண்முளை கள்வ னூர்க்குங்
கழனி யூரன் மார்புற மரீஇத்
திதலை யல்கு னின்மகள்
பசலை கொள்வ தெவன்கொ லன்னாய்.

எ - து, வரைவெதிர் கொள்ளார் தமர் அவண்மறுப்புழித் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது.

(ப - ரை:) 'மாரி கடிகொள...... அழுக்கும்' எ - து, மாரிநின்ற யாமத்துக் காவலரைத்தப்பி அவன் தலைவியை எதிர்ப்பட்டமை உணர்த்தியதெனக் கொள்க. இஃது உண்மைசெப்பலென்னும் அறத்தொடுநிலை.

(பி - ம்:) ௩. மார்புறவரீஇ. (௯)

௯0. வேப்புநனை யன்ன நெடுங்கட் கள்வன்
றண்ணக மண்ணளை நிறைய நெல்லி
னிரும்பூ வுறைக்கு மூரற்கிவள்
பெருங்கவி னிழப்ப தெவன்கொ லன்னாய்.

இதுவுமது.

(ப - ரை:) அலவன் மண்ணளை நிறைய நெல்லின்பூவுறைக்கு மூரனென்றது, தலைவன் மனையிடத்து உளவாகிய வருவாய்ச்சிறப்புக் கூறியதெனக்கொள்க. (௧0)

## கள்வன்பத்து முற்றிற்று.



## ௪.—தோழிக்குரைத்த பத்து.



௯௧. அம்ம வாழி தோழி மகிழ்நன்
கடனன் றென்னுங் கொல்லோ நம்மூர்
முடமுதிர் மருதத்துப் பெருந்துறை
யுடனா டாயமோ டுற்ற சூளே.

எ - து, முன்னொருநாள் தன்னோடு புதுப்புனலாடுழி, 'இனிப் புறத்தொழுக்கம் விரும்பேன்' என ஆயத்தாரோடு சூளுற்றதலைமகன் பின்னும் பரத்தையரோடு புனலாடத் தொடங்குகின்றா னென்பதுகேட்ட தலைமகள் அவனுழையர்கேட்பத் தோழிக்குச் சொல்லியது. (௧)

௯௨. அம்ம வாழி தோழி மகிழ்ந
னொருநா ளம்மில் வந்ததற் கெழுநா

ளுழப வென்பவவன் பெண்டிர்
தீயுறு மெழுகி னெகிழ்வனர் விரைந்தே.

எ - து, வாயில்வேண்டிப்புகுந்தார் கேட்பத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது. (௨)

௩௩. அம்ம வாழி தோழி மகிழ்நன்
மருதுயர்ந் தோங்கிய விரிபூம் பெருந்துறைப்
பெண்டிரொ டாடு மென்பதன்
றண்டா ரகலந் தலைத்தலைக் கொளவே.

இதுவுமது.

(பி-ம்:) ௩. பெண்டிரொடுமாடும். (௩)

௩௪. அம்ம வாழி தோழி நம்மூர்ப்
பொய்கைப் பூத்த புழைக்கா லாம்பற்
றாதேர் வண்ணங் கொண்டன
வேதிலா ளர்க்குப் பசந்தவென் கண்ணே.

இதுவுமது.

(பி-ம்:) ௪. வண்ணங்கொண்ட, ஏதிலார்க்கு. (௪)

௩௫. அம்ம வாழி தோழி நம்மூர்ப்
பொய்கை யாம்ப லநுநிற மென்கா
லிறத்தினு நிழற்றுதன் மன்னே
யினிப்பசந் தன்றென் மாமைக் கவினே.

எ - து, வாயிலாய்ப்புகுந்தார் தலைமகன்குணங்கூறியவழி, 'அவனுக்கு இல்லாதனவே கூறுதலால், இப்பொழுதுகாண் என் மேனி பசந்தது' எனத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது. (௫)

௩௬. அம்ம வாழி தோழி யூர
னம்மறந் தமைகுவ னாயி னாமறந்
துள்ளா தமைதலு மமைகுவ மன்னே
கயலெனக் கருதிய வுண்கண்

பாசலைக் கொல்கா வாகுதல் பெறினே.

எ - து, தான் வாயினேருங் குறிப்பினளானமை யறியாத தோழி வாயின் மறுத்துழி அவள் நேரும் வகையால் அவட்குத் தலைமகன் சொல்லியது. (சு)



கூஎ. அம்ம வாழி தோழி மகிழ்ந
னயக்தோ ருண்கண் பசந்துபனி மல்க
வல்லன் வல்லன் பொய்த்த
றேற்றா னூற்ற சூள்வாய்த் தல்லே.

எ - து, தலைமகளைச் சூளினுல் தெளித்தானென்பது கேட்ட காதற் பரத்தை தலைமகட்குப் பாங்காயினார்கேட்பத் தன்தோழிக்குச் சொல்லியது. (எ)

கூஅ. அம்ம வாழி தோழி மகிழ்நன்
றன்சொ லுணர்ந்தோ ரறியல னென்றுந்
தண்டளிர் வெளவு மேனி
யொண்டொடி முன்கை யாமழப் பிரிந்தே.

எ - து, தலைமகன் மனைவயிற்போகக் கருதினானென்பது சொல்லிய தன்றோழிக்குப் பரத்தை சொல்லியது. (அ)

கூகூ. அம்ம வாழி தோழி யூரன்
வெம்முலை யடைய முயங்கி நம்வயிற்
றிருந்திழை பணைத்தோ ணெகிழப்
பிரிந்தன னாயினும் பிரியலன் மன்னே.

எ - து, ஒருஞான்று தலைவன் தன்மனைக்கட் சென்றது கொண்டு அவன் பெண்மை நலமெல்லாந் துய்த்துக் காதல்நீங்கிப் பிரிந்தானென்பது தலைவிகூறினாளெனக்கேட்ட பரத்தை அவட்குப் பாங்காயினார் கேட்பத் தன் தோழிக்குச் சொல்லியது.

(பி -ம் :) மூ. இழைப்பணைத்தோள். கருத். கேட்டு அப்பரத்தை. (கூ)

சு0. அம்ம வாழி தோழி மகிழ்ந
னொண்டொடி முன்கை யாமழப் பிரிந்துதன்
பெண்டி ரூரிறை கொண்டன னென்ப
கெண்டை பாய்தர வவிழ்ந்த

வண்டுபிணி யாம்ப லாடுகிழ வோனே.

எ - து, உலகியல்பற்றித் தலைவன் தன்மனைக்கண் ஒருஞான்றுபோன தேகொண்டு அவ்வழிப் பிரியாது உறைகின்றானென்று அயற்பரத்தையர் பலரும் கூறினாரென்பது கேட்ட காதற்பரத்தை அவர்பாங்காயினார்கேட்பத் தன்றோழிக்குச் சொல்லியது. (கㄖ)

## தோழிக்குரைத்தபத்து முற்றிற்று.





## ரு.—புலவிப் பத்து.



சக. தன்பார்ப்புத் தின்னு மன்பின் முதலையொடு
வெண்பூம் பொய்கைத் தவனூ ரென்ப, அதனாற்
றன்சொ லுணர்ந்தோர் மேனி
பொன்போற் செய்யு மூர்கிழ வோனே.

எ - து, கழறித்தெருட்டற்பாலராகிய அகம்புகன் மரபின் வாயில்கள் புகுந்துழித் தலைவனையும் பாணன் முதலாகிய பக்கத்தாரையும் இகழ்ந்து தலைவி கூறியது.

(ப-ரை:) அன்பில்லாத முதலையென்றது தலைவனை நோக்கியெனவும், பொய்கையில் வெண்பூ வென்றது புறத்தொழுக்கத்திற்குத் துணையாகிய அறிவிலாதாரை நோக்கியெனவுங் கொள்க.

(பி - ம்:) மூ. அவனூரேயதனால். அவரூரேயதனால். என்பதனால். பொன்போலச்செய்யும். கருத். தெருட்டற்பாலராகிய. (க)

சஉ. மகிழ்மிகச் சிறப்ப மயங்கினள் கொல்லோ
யாண ரூரநின் மாணிழை யரிவை
காவிரி மலிர்நிறை யன்னநின்
மார்புநனி விலக்க றொடங்கி யோளே.

எ - து, தலைநின்று ஒழுகப்படாநின்ற பரத்தை தலைவன் பிறபரத்தையருடன் ஒழுகினனென்று புலந்தாளாக, அதனையறிந்த தலைவி, அவன் தன்னில்லத்துப் புகுந்துழித் தானறிந்தமை தோன்றச் சொல்லியது.

(பி - ம்:) மூ. நனிவிலங்கல். கருத். தன்னில்லகத்து. (உ)

சங. அம்பணத் தன்ன யாமை யேறிச்
செம்பி னன்ன பார்ப்புப்பல துஞ்சும்
யாண ரூர நின்னினும்
பாணன் பொய்யன் பலசூ ளினனே.

எ - து, பாணன் வாயிலாகப் புகுந்து தெளிப்ப மறுத்ததலைமகள் பாண னோடு தலைவன்புகுந்து தெளித்துழிச் சொல்லியது.

(ப - ரை:) யாமைப்புறத்து ஏறிப் பார்ப்புப்பல துஞ்சுமூரவென்றது, மார்பில் துயில்கின்ற புதல்வரையுடையாய். எ - று. மகப்பெற்று வாழ்வார்க்குப் பொய்கூறலாகா தென்பதாம். (ரு)



சச. தீம்பெரும் பொய்கை யாமை யிளம்பார்ப்புத்
தாய்முக நோக்கி வளர்ந்திசி னாஅங்
கதுவே யையநின் மார்பே
யறிந்தனை யொழுகுமதி யறனுமா ரதுவே.

எ - து, பரத்தையர் மனைக்கண்ணே பன்னாட்டங்கித் தன்மனைக்கண் ணேவந்த தலைமகற்குத் தோழிகூறியது.

(ப - ரை:) நின்மார்பாற் கொள்ளும் பயனின்றிக் காட்சியெய்தவும் பெறுகின்றிலளெனப் புலந்து கூறியவாறறிக.

(பி - ம்:) மூ. ஐயன்மார்பே. கருத். தம்மனை. (ச)

சரு. கூதி ராயிற் றண்கலிழ் தந்து
வேனி லாயின் மணிநிறங் கொள்ளும்
யாறணிந் தன்றுநின் னூரே
பசப்பணிந் தனவான் மகிழ்நவென் கண்ணே.

எ - து, நெடுநாட் பரத்தையரிடத்தானுய் ஒழுகிய தலைமகன் மனை வயிற்சென்றுழித் தோழிசொல்லியது.

(ப-ரை:) கலங்குதலும் தெளிதலுமுடைத்தாகிய யாற்றியல்பும் பெ றாது என்றும் பசந்தே ஒழுகுகின்றாளிவளென்பதாம். (ரு)

௬௬. நினக்கே யன்றஃ தெமக்குமா நினிதே
நின்மார்பு நயந்த நன்னுத லரிவை
வேண்டிய குறிப்பினை யாகி
யீண்டுநீ யருளா தாண்டுறை தல்லே.

எ - து, மனைக்கண்வருதல் பரத்தைவிலக்க விலக்கிப் பின்பு உலகியல் பற்றி அவள்குறிப்பினோடும் வந்தமையறிந்ததோழி தலைமகனைப் புலந்து சொல்லியது.

(ப-ரை:) இவ்வாறு வருதலின் வாராமையே இனிதென்பதாம். (௬)

௬௭. முள்ளெயிற்றுப் பாண்மக ளின்கெடிறு சொரிந்த
வகன்பெரு வட்டி நிறைய மனையோ
ளரிகாற் பெரும்பயறு நிறைக்கு மூர
பாணிமை யாய மறியுநின்
பாணன் போலப் பலபொய்த் தல்லே.

## ரு.—புலவிப் பத்து. ௬௭

எ - து, பாணற்கு வாயில்மறுத்த தலைமகள் பின் அப்பாணனோடு தலைமகன் புகுந்து தன்காதன்மை கூறியவழிச் சொல்லியது.

(ப - ரை:) மாணிழையாய மறியுமென்ற கருத்து : நீகூறுங் காதன்மை பொய்யென்பது ஆயமெல்லா மறியும் ; நான் இதனை மெய்யென்று கொள்ளினும் அவர் பொறாரென்பதாம். கெடிறுசொரிந்த வட்டி நிறைய மனையோள் பயறுநிறைக்கு மூரவென்றது, நீ நின்காதல் சொல்லிவிடுத்து அவர் சிறந்த காதல் சொல்லி வரவிடப் பெறுவாய், எ - று. (எ)

௬௮. வலைவல் பாண்மகன் வாலெயிற்று மடமகள்
வராஅல் சொரிந்த வட்டிபுண் மனையோள்
யாண்டுகழி வெண்ணெ னிறைக்கு மூர
வேண்டேம் பெருமநின் பரத்தை
யாண்டுச்செய் குறியோ டீண்டுநீ வரலே.

எ - து, பரத்தையர்மாட்டு ஒழுகாநின்று தன்மனைக்கட்சென்ற தலைமகற்குத் தலைமகள் சொல்லியது.

(பி - ம்:) மூ. ஈண்டுவரலே. கருத். தம்மனைக்கண். (அ)

௬௯. அஞ்சி லோதி யசைநடைப் பாண்மகள்
சின்மீன் சொரிந்து பன்னெற் பெறூஉம்

யாண ரூரநின் பாண்மகன்
யார்நலஞ் சிதையப் பொய்க்குமோ வினியே.

எ - து, பாணன்வாயிலாகப் பரத்தையோடுகூடினனென்பது கேட்ட தலைமகள் தனக்கும் பாணனாற் காதன்மைகூறுவிப்பான் புக்க தலைமகற்குச் சொல்லியது. (கூ)

ருய. துணையோர் செல்வமும் யாமும் வருந்துதும்
வஞ்சி யோங்கிய யாண ரூர
தஞ்ச மருளாய் நீயேநின்
னெஞ்சம் பெற்ற விவளுமா ரழுமே.

எ - து, மனையினீங்கிப் பரத்தையிடத்துப் பன்னாட்டங்கிவந்த தலைமகற்குத் தோழி சொல்லியது. (க0)

## புலவிப்பத்து முற்றிற்று.





## ஐங்குறுநூறு.

## சு.—தோழிகூற்றுப்பத்து.



ருக. நீருறை கோழி நீலச் சேவல்
கூருகிர்ப் பேடை வயாஅ மூர
புளிங்காய் வேட்கைத் தன்றுநின்
மலர்ந்த மார்பிவள் வயாஅ நோய்க்கே.

எ - து, வாயில்பெற்றுப் புகுந்துபோய்ப் புறத்தொழுக்கமொழுகிப் பின்பும் வாயில்வேண்டுந்தலைமகற்குத் தோழிகூறிமறுத்தது.

(பி-ம்:) மூ. வயாவுமூர. மார்பிவண். (க)

ருஉ. வயலைச் செங்கொடிப் பிணைய றைஇச்
செவ்விரல் சிவந்த சேயரி மழைக்கட்
செவ்வாய்க் குறுமக ளிணைய
வெவ்வாய்முன் னின்று மகிழ்நநின் றேரே.

எ - து, வாயில் பெற்றுக் கூடியிருந்த தலைமகற்குத் தோழி நகையாடிச் சொல்லியது. (உ)

௫௩. துறையெவ னணங்கும் யாமுற்ற நோயே
சிறையழி புதுப்புனல் பாய்ந்தெனக் கலங்கிக்
கழனித் தாமரை மலரும்
பழன வூரநீ யுற்ற சூளே.

எ - து, தலைவிதன்னுடன்போய்ப் புனலாடியவழி, 'இது பரத்தைய ருடனாடிய துறை' எனநினைந்து பிறந்த மெலிவை மறைத்தமையை யுணர்ந்த தலைமகன் மனைவயிற் புகுந்தழி, 'தெய்வங்களுறையுந் துறைக்கண்ணே நாம் ஆடினவதனாற் பிறந்ததுகொல் நினக்கு இவ்வேறுபாடு' என்று வினவியி னாற்கு அவள் சொல்லியது.

(பி - ம்:) ௩. தாமரைமல்கும். (௩)

௫௪. திண்டேர்த் தென்னவ னன்னாட் டுள்ளதை
வேனி லாயினுந் தண்புன லொழுகுந்
தேனூ ரன்னவிவ டெரிவளை நெகிழ
வூரி னூரனை நீதர வந்த
பஞ்சாய்க் கோதை மகளிர்க்
கஞ்சுவ லம்ம வம்முறை வரினே.

எ - து, வாயில் வேண்டிவந்த தலைமகற்குத் தலைமகள்குறிப்பறிந்த தோழி அவன்கொடுமைகூறி வாயின்மறுத்தது. (௪)



௫௫. கரும்பி னெந்திரங் களிற்றெதிர் பிளிற்றுந்
தேர்வண் கோமான் றேனூ ரன்னவிவ
ணல்லணி நயந்துநீ துறத்தலிற்
பல்லோ ரறியப் பசந்தன்று நுதலே.

எ - து, வரைந்த அணிமைக்கண்ணே புறத்தொழுக்கம் ஒழுகி வாயில் வேண்டிவந்து தன்மெலிவுகூறியதலைமகனைத்தோழி நெருங்கிச்சொல்லியது.

(ப - ரை:) 'களிற்றெதிர் பிளிற்றும்' என்றது, நீ கூறுகின்ற மெலி வுக்கு மேலே மெலிவு கூறுகின்றது இவள்நுதலென்பதாம்.

(பி - ம்:) ௨. பிளிறும். (௫)

௫௬. பகல்கொள் விளக்கோ டிராநா ளறியா

வெல்போர்ச் சோழ ரழூ ரன்னவிவ ளூ
ணலம்பெறு சுடர்நுத றேம்ப
வெவன்பயஞ் செய்யுநீ தேற்றிய மொழியே.

எ-து, புறத்தொழுக்கம் உளதாகியதறிந்து தலைமகள் மெலிந்துழி, 'அஃதில்லை' என்று தேற்றுந் தலைமகற்குத் தோழி சொல்லியது.

(ப-ரை:) 'தேம்ப' எ-து, தேம்பாநிற்க. எ-று. 'பகல்கொள்விளக் கோ......ரன்ன' எ-து, ஒருநாளும் மெலிவறியாதஇவள் மெலிவறிய ஒழுகி னாய். எ-று.

(பி-ம்:) மூ. பகல்கொல். நன்றறியா. வெண்வேற்சோழரான்மூர். (சு)

ருஎ. பகலிற் றோன்றும் பல்கதிர்த் தீயி
னாம்பலஞ் செறுவிற் றேனூ ரன்ன
விவணலம் புலம்பப் பிரிய
வனைநல முடையளோ மகிழ்நநின் பெண்டே.

எ-து, தலைமகற்குப் புறத்தொழுக்கம் உளதாயிற்றென்பது கேட்ட தோழி அவனை வினவியது.

(ப-ரை:) வேள்வித்தீயினையும் ஆம்பலஞ்செறுவினையுமுடையதேனூ ரென்றது, மனத்தொழுக்கத் தூய்மையு............கூறியவாறு.

(பி-ம்:) மூ. அனநலம். (எ)

ருஅ. விண்டு வன்ன வெண்ணெற் போர்விற்
கைவண் விராஅ னிருப்பை யன்ன
விவளணங் குற்றனை போறி
பிறர்க்கு மனையையால் வாழி நீயே.



எ-து, உணர்ப்புவயின் வாரா ஊடற்கட் புலந்த தலைமகற்குத் தோழி கூறியது.

(ப-ரை:) 'கைவண் விராஅன் இருப்பையன்ன' எ-து, இனது இல் வாழ்க்கைக் குரியவாகிய குணங்களாலுயர்ந்தாள், எ-று.

(பி-ம்:) மூ. விராவினிருப்பை. (அ)

ருகூ. கேட்டிசின் வாழியோ மகிழ்ந வாற்றுற

மைய னெஞ்சிற் கெவ்வந் தீர
நினக்குமருந் தாகிய யானினி
யிவட்குமருந் தன்மை நோமெ னெஞ்சே.

எ - து, தலைமகள் ஆற்றுளாம் வண்ணம் மனைக்கண் வரவுசுருங்கிய தலைமகற்குப் புறத்தொழுக்கமுள தாகியவழி ஆற்றுளாகியதோழி சொல்லியது.

(பி - ம்:) மூ. மகிழ்நவாற்றும். கருத். தலைமகற்குத் தேற்றத்தேருது புறத்தொழுக்கம். (௯)

௬0. பழனக் கம்புள் பயிர்ப்பெடை டகவுக்
கழனி யூரநின் மொழிவ லென்றுந்
துஞ்சுமனை நெடுநகர் வருதி
யஞ்சா யோவிவ டந்தைகை வேலே.

எ - து, வரையாதொழுகுந் தலைமகன் இரவுக்குறி வந்துழித் தோழி சொல்லியது.

(பி - ம்:) மூ. பயிர்பெடை. பயிற்பெடை. (௧0)

## தோழிகூற்றுப்பத்து முற்றிற்று.



## எ.—கிழத்திகூற்றுப் பத்து.



௬௧. நறுவடி மாஅத்து விளைந்துகு தீம்பழ
நெடுநீர்ப் பொய்கைத் துடுமென விழூஉங்
கைவண் மத்தி கழாஅ ரன்ன
நல்லோர் நல்லோர் நாடி
வதுவை யயர விரும்புதி நீயே.

எ - து, 'வதுவையயர்ந்தா னொருபரத்தையைச் சின்னாளில்விட்டு மற்றொரு பரத்தையை வதுவையயர்ந்தான்' என்பதறிந்த தலைமகள் அவன்

மனைவயிற்புக்குழிப் புலந்தாளாக, 'இது மறைத்தற்கரிது' என உடன்பட்டு 'இனி என்னிடத்து இவ்வாறு நிகழாது' என்றற்கு அவள் சொல்லியது.

(பி - ம்:) மூ. இகுமதிநீயே. (க)

சுஉ. இந்திர விழவிற் பூவி னன்ன
புன்றலைப் பேடை வரிநிழ லகவு
மிவ்வூர் மங்கையர்த் தொகுத்தினி
யெவ்வூர் நின்றன்று மகிழ்நநின் றேரே.

இதுவுமது.

(பி - ம்:) மூ. மங்கையைத் தொகுத்து. மகிழ்நநின். (உ)

சுந. பொய்கைப் பள்ளிப் புலவுநா றுநீர்நாய்
வாளை நாளிரை பெறூஉ மூர
வெந்நலந் தொலைவ தாயினுந்
துன்னலம் பெருமபிறர்த் தோய்ந்த மார்பே.

எ - து, பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகனொடு தலைமகள் புலந்து கூறியது.

(பி - ம்:) மூ. நீர்வாய். (ங)

சுச. அலமர லாயமோ டமர்துணை தழீஇ
நலமிகு புதுப்புன லாடக் கண்டோ
ரொருவரு மிருவரு மல்லர்
பலரே தெய்யவெம் மறையா தீமே.

எ - து, தலைமகன் பரத்தையரோடு புனலாடினு னென்பதறிந்த தலைமகள் அவன்மறைத்துழிச் சொல்லியது. (ச)

சுரு. கரும்புநடு பாத்தியிற் கலித்த வாம்பல்
சுரும்புபசி களையும் பெரும்புன லூர
புதல்வனை யீன்றவெம் மேனி
முயங்கன்மோ தெய்யநின் மார்புசிதைப் பதுவே.

எ - து, ஆற்றாமையே வாயிலாகப்புக்க தலைமகற்குத் தலைமகள் சொல்லியது.

(பி - ம்:) மூ. பாத்திக் கலித்த. ஈன்றதென் மேனி.
பாத்திகலித்த. ஈன்றவெம் முயங்கல்.
கதித்தவாம்பல், அதுவேதெய்ய நின்மார்பு. (ரு)

சசு. உடலினே னல்லேன் பொய்யா துரைமோ
யாரவண் மகிழ்ந தானை தேரொடு
தளர்நடைப் புதல்வனை யுள்ளிநின்
வளமனை வருதலும் வௌவி யோளே.

எ - து, புதல்வனைப் பிரியாதவன் பிரிந்து புறத்துத்தங்கி வந்தானாக, அவனோடுபுலந்து தலைமகள் சொல்லியது.

(பி - ம்:) மூ. தானைத்தேரொடு. (சு)

சுஎ. மடவ ளம்மநீ யினிக்கொண் டோளே
தன்னொடு நிகரா வென்னொடு நிகரிப்
பெருநலந் தருக்கு மென்ப விரிமலர்த்
தாதுண் வண்டினும் பலரே
யோதி யொண்ணுதல் பசப்பித் தோரே.

எ - து, தலைநின்று ஒழுகப்படாநின்ற பரத்தை புறனுரைத்தாளெனக் கேட்டதலைவி தலைமகன்வந்துழி அவடிறத்தாராய் நின்று ஒழுகும் வாயில்கள் கேட்பச் சொல்லியது.

(பி - ம்:) மூ. பலர்நீ. (எ)

சுஅ. கன்னி விடியற் கணைக்கா லாம்ப
ருமரை போல மலரு மூர
பேணு ளோநின் பெண்டே
யாந்த னடக்கவுந் தானடங் கலளே.

எ - து, பரத்தை தான் தலைமகளைப் புறங்கூறிவைத்துத் தன்னைத் தலைமகள் புறங்கூறினளாகப் பிறர்க்குக் கூறினமைகேட்ட தலைவி தலைமகற்குச் சொல்லியது.

(பி - ம்:) மூ. கணைக்காலாம்பல். (அ)

சுகூ. கண்டனெ மல்லமோ மகிழ்நநின் பெண்டே
பலராடு பெருந்துறை மலரொடு வந்த
தண்புனல் வண்ட லுய்த்தென
வுண்கண் சிவப்ப வழுதுநின் றோளே.

எ - து, தலைமகன் பெதும்பைப் பருவத்தாள் ஒரு பரத்தையைக் களவில்மணந்து ஒழுகுகின்றதனை அறிந்த தலைமகள் தனக்கில்லையென்று அவன் மறைத்துழிச் சொல்லியது, (க)

எ0. பழனப் பன்மீ னருந்த நாரை
கழனி மருதின் சென்னிச் சேக்கு
மாநீர்ப் பொய்கை யாண ரூர
தூயர் நறியர்நின் பெண்டிர்
பேஎ யனையமியாஞ் சேய்பயந் தனமே.

எ - து, பரத்தையரோடு பொழுதுபோக்கி நெடிது துய்த்துவந்த தலைமகனோடு தலைமகள் புலந்து சொல்லியது.

(பி - ம்:) மூ. பேஎ, யனையம் யாஞ்சேய் பயந்தனை சென்மே.
கருத். நெடிதுய்த்து. (௧0.)

கிழத்திகூற்றுப்பத்து முற்றிற்று.



## அ.—புனலாட்டுப் பத்து.



எக. சூதார் குறுந்தொடிச் சூரமை நுடக்கத்து
நின்வெங் காதலி தழீஇ நெருநை
யாடினை யென்ப புனலே யலரோ
மறைத்த லொல்லுமோ மகிழ்ந
புதைத்த லொல்லுமோ ஞாயிற்ற தொளியே.

எ - து, பரத்தையரோடு புனலாடினானெனக்கேட்டுப் புலந்த தலைமகள் தலைமகன் அதனையில்லை யென்று மறைத்துழிச் சொல்லியது.

(பி - ம்:) மூ. நெருநை. (௧)

எஉ. வயன்மல ராம்பற் கயிலமை நுடங்குதழைத்
திதலை யல்குற் றுயல்வருங் கூந்தற்
குவளை யுண்க ணேஎர் மெல்லியன்
மலரார் மலிர்நிறை வந்தெனப்
புனலாடு புணர்துணை யாயின ளெமக்கே.

எ - து, தலைமகள் புலவி நீக்கித் தன்னோடு புதுப்புனல் ஆடவேண்டிய தலைமகன் களவுக்காலத்துப் புனலாட்டு நிகழ்ந்ததனை அவள்கேட்பத் தோழிக்குச் சொல்லியது.

(பி - ம்:) மூ. ஆம்பற்கயலமை. (௩)



எ௩. வண்ண வொண்டழை நுடங்க வாலிழை
யொண்ணுத லரிவை பண்ணை பாய்ந்தெனக்
கண்ணறுங் குவளை நாறித்
தண்ணென் றிசினே பெருந்துறைப் புனலே.

இதுவுமது.

(பி - ம்:) மூ. வண்ண வெண்டழை. தண்ணென் குவளை.
கண்ணுறுக் குவளை. (௩)

எச. விசும்பிழி தோகைச் சீர்போன் றிசினே
பசும்பொ னவிரிழை பைய நிழற்றக்
கரைசேர் மருத மேறிப்
பண்ணை பாய்வோ டண்ணறுங் கதுப்பே.

இதுவுமது. (௪)

எ௫. பலர்வ ணுெவ்வாய் மகிழ்ந வதனு
லைர்தொடங் கின்றா லூரே மலர
தொன்னிலை மருதத்துப் பெருந்துறை
நின்னோ டாடின டண்புன லதுவே.

எ - து, பரத்தையோடு புனலாடிவந்த தலைமகன் அதனை மறைத்துக் கூறியவழித் தோழி கூறியது. (௫)

எ௬. பைஞ்சாய்க் கூந்தற் பசுமலர்ச் சுணங்கிற்
றண்புன லாடித்தன் னலமேம் பட்டன
ளொண்டொடி மடவர னின்னோ
டந்தா மகளிர்க்குத் தெய்வமும் போன்றே.

இதுவுமது.

(பி - ம்:) மூ. பஞ்சாய். (௬)

௭௭. அம்ம வாழியோ மகிழ்நநின் மொழிவல்
பேரூ ரலரெழ நீரலைக் கலங்கி
நின்னொடு தண்புன லாடுதும்
மெம்மொடு சென்மோ செல்லனின் மனையே.

எ - து, முன்னொரு ஞான்று தலைவியோடு புனலாடினு னெனக்கேட்டு இவனுடன் இனி ஆடேனென உட்கொண்ட பரத்தை, 'புதுப்புனல் ஆடப் போது' என்ற தலைமகற்குச் சொல்லியது. (௭)

## ௯.—புலவிவிராயபத்து. ௨௫

௭௮. கதிரிலை நெடுவேற் கடுமான் கிள்ளி
மதில்கொல் யானையிற் கதம்புநெறி வந்த
சிறையழி புதுப்புன லாடுக
மெம்மொடு கொண்மோவெந் தோள்புரை புணையே.

இதுவுமது.

(பி - ம்:) மூ. கதிமான்கிள்ளி. யானையிற் கதவுநெரிதந்த. (௮)

௭௯. புதுப்புன லாடி யமர்த்த கண்ணள்
யார்மக ளிவளெனப் பற்றிய மகிழ்ந
யார்மக ளாயினு மறியாய்
நீயார் மகனையெம் பற்றி யோயே.

எ - து, தன்னொடு கூடாது தனித்துப் புனலாடுகின்று னெனக்கேட்டுத் தலைநின்று ஒழுகப்படாநின்ற பரத்தை தானும் தனியேபோய்ப் புனலாடினளாக, அவளை ஊடறீர்த்தற் பொருட்டாகத் தலைமகன் சென்று தான் அறியான்போல நகையாடிக்கூறிக் கைப்பற்றியவழி அவடோழி சொல்லியது. (௯)

௮0. புலக்குவே மல்லேம் பொய்யா துரைமோ
நலத்தகு மகளிர்க்குத் தோட்டுணை யாகித்
தலைப்பெயற் செம்புன லாடித்
தவநனி சிவந்தன மகிழ்நநின் கண்ணே.

எ - து, தன்னையொழியப் புதுப்புனலாடித் தாழ்த்துவந்த தலைமகனோடு தலைமகள் புலந்து சொல்லியது. (௧0)



## கூ.—புலவி விராய பத்து.

அக. குருகுடைத் துண்ட வெள்ளகட் டியாமை
யரிப்பறை வினைஞ ரல்குமிசைக் கூட்டு
மலரணி வாயிற் பொய்கை யூரநீ
யென்னை நயந்தனெ னென்றிநின்
மனையோள் கேட்கின் வருந்துவள் பெரிதே.



எ - து, தன்னைக் கொடுமைகூறினள் தலைமகளென்பது கேட்ட பரத்தை தலைமகன்வந்து தன்மேல் அன்புடைமை கூறினனாக அவட்குப் பாங்காயினர்கேட்பச் சொல்லியது.

(ப - ரை:) குருகுடைத்துண்ட யாமை மிச்சிலை வினைஞர் உணவிற் கூட்டுமூரனெனவே நாங்கள் நுகர்ந்துகழித்த மார்பை நுகர்வாளென்று தலைமகளைப் பழித்தவாறும்.

(பி - ம்:) ௱. நல்குமிசை. (க)

அஉ. வெகுண்டன ளென்ப பாணநின் றலைமகண்
மகிழ்நன் மார்பி னவிழிணர் நறுந்தார்த்
தாதுண் பறவை வந்தெம்
போதார் கூந்த லிருந்தன வெனவே.

எ - து, மனைவயிற் புகுந்த பாணற்குத் தலைமகன் கேட்குமாற்றால் தலைமகள் சொல்லியது.

(ப - ரை:) 'இதுவும் பொறுதவள் நீ ஈண்டு வருதல்பொறாள், கடிதிற் செல்' என்பதாம். (உ)

அங. மணந்தனை யருளா யாயினும் பைபயத்
தணந்தனை யாகி யுய்ம்மோ நும்மூ
ரொண்டொடி முன்கை யாயமும்
தண்டுறை யூரன் பெண்டெனப் படற்கே.

எ - து, வரைந்த அணுமைக்கண்ணே தலைமகற்குப் புறத்தொழுக்க

முண்டாகியவழி அதனையறிந்ததலைவி அவனோடு புலந்து சொல்லியது.

(பி - ம்:) மூ. பைய. கருத். வரைந்தனுமைக்கண்ணே. (௫)

அ௪. செவியிற் கேட்பினுஞ் சொல்லிறந்து வெகுள்வோள்
கண்ணிற் காணி னென்னு குவள்கொ
னறுவீ யைம்பான் மகளி ராடுந்
தைஇத் தண்கயம் போலப்
பலர்படிந் துண்ணுநின் பரத்தை மார்பே.

எ - து, பரத்தையர்மனைக்கட்டங்கிப் புணர்ச்சிக்குறியோடு வாயில்வேண்டி வந்த தலைமகற்குத் தோழி சொல்லியது. (௬)

அ௫. வெண்ணுதற் கம்பு ளரிக்குரற் பேடை
தண்ணறும் பழனத்துக் கிளையோ டாலு

## ௬.—புலவிவிராயபத்து. 

மறிவில் யாணர் மலிகே ழூரநீ
சிறுவரி னினைய செய்தி
நகாரோ பெருமநிற் கண்டிசி னோரே.

எ - து, தலைமகன் பரத்தையர்மேற் காதல்கூர்ந்து நெடித்துச்செல் வுழி மனையகம்புகுந்தானாகத் தலைவிகூறியது.

(ப - ரை:) கம்புட்பேடை சேவலொழியக் கிளையுடனே ஆலுமூர. எ-து, 'கிளையுடனே வாழ்கின்ற எமக்கு நின்னினீங்கிய மெலிவு உளதாகக் கூற கின்றேமல்லேம்; நின் குலத்தொழுக்கத்துக்குத் தகாது' எனக் கழறியதாம்; * "தாய்போற் கழறித் தழீஇக் கோட, லாய்மனைக் கிழத்திக் குரித்தென மொழிப" என்றதூஉம் இத்திறனோக்கியெனக்கொள்க.

(பி - ம்:) மூ. ஊரநின். செய்தியை. (௭)

அ௬. வெண்டலைக் குருகின் மென்பறை விளிக்குர
னீள்வய னண்ணி யிமிழு மூர
வெம்மிவ ணல்குத லரிது
நும்மனை மடந்தையொடு தலைப்பெய் தீமே.

எ - து, புதல்வன் கூறியமாற்றம் தலைமகட்குப் பாங்காயினர் கூறக் கேட்டா னென்பதறிந்த பரத்தை அதற்குப்புலந்து தலைமகற்குச் சொல்லி யது.

(ப - ரை:) குருகின் பார்ப்பு அழைக்குங்குரல் வயல் நண்ணி இமிழு மூர. எ - து, நின்புதல்வன் கூறிவிடுத்தல் நீ கேட்டமை சேரியெல்லா மறிந்

தது; நின்னுன்மறைத்த லரிதென்பதாம். பார்ப்பினம் மெல்லிதாகப் பறத்தல்பற்றி மென்பறையென்று ஆகுபெயராற் கூறியதெனக்கொள்க.

(பி - ம்:) மூ. அறிது, நும்மனே. (சு)

அஎ. பகன்றைக் கண்ணிப் பல்லான் கோவலர்
கரும்பு குணிலா மாங்கனி யுதிர்க்கும்
யாண ரூரகின் மனையோள்
யாரையும் புலக்கு மெம்மைமற் றெவனே.

எ - து, தலைமகள் தன்னைப் புறங்கூறினு ளெனக்கேட்ட காதற்பரத்தை அவட்குப் பாங்காயினர் கேட்பத் தலைமகனோடு புலந்து சொல்லியது.

---

* தொல்காப்பியம், பொருளதிகாரம், கற்பியல், கூஉ.



(ப - ரை:) கரும்புகுணிலா மாங்கனியுதிர்க்கு மூர. எ - து, யாங்கள் பழித்தேமென்று அவட்கு இனியசொற்கூறி அவள் எங்களைப் பழித்துக் கூறுஞ் சொற்களை நினக்கு இனியவாகப் பெறுவாய். எ - று. (எ)

அஅ. வண்டுறை நயவரும் வளமலர்ப் பொய்கைத்
தண்டுறை யூரனை யெவ்வை யெம்மனையின்
வருதல் வேண்டுது மென்ப
தொல்லேம் போல்யா மதுமே வண் டுதுமே.

எ - து, தலைமகனை நயப்பித்துக் கொள்கையில் விருப்பில்லாதாள் போல அவ்வாறு கோடலையே விரும்புவாள், அது தனக்கு முடியாதெனத் தலைமகள் புறனுரைத்தா ளெனக் கேட்ட பரத்தை அவட்குப் பாங்காயினர்க்குச் சொல்லியது.

(ப - ரை:) இவ்வாறு என்னைக்கூறுகை தவிராளாயின் அதனை முடியச் செய்துவிடுகின்றே னென்பதாம். வள்ளியதுறைகளின் கண்ணே எல்லாருங் கொள்ளும்வண்ணம் நயந்துபூக்கின்ற மலர்களையுடைய பொய்கை யூரன். எ - து, மகளிரெல்லார்க்கும் பொதுப்பட்டிருப்பான். எ - று.

(பி - ம்:) மூ. வளர்மலர். (அ)

அகூ. அம்ம வாழி பாண வெவ்வைக்
கெவன்பெரி தளிக்கு மென்ப பழனத்து
வண்டுதா தூது மூரன்
பெண்டென விரும்பின் றவடன் பண்பே.

எ - து, தலைமகன் தலைமகளைப் போற்றி யொழுகாநின்றானென்பது

கேட்ட காதற்பரத்தை அவன் பாணனுக்குச் சொல்லுவாளாய் அவட்குப் பாங்காயினர் கேட்பச் சொல்லியது.

(ப - ரை:) அவன் ஆங்கு ஒழுகுகின்றது அவள் பண்புடைமை யல்லது வேறுகாரணம் இல்லையென இகழ்ந்து கூறியவாறும்.

(பி - ம்:) மூ. வேண்டென விரும்பின்று } கருத். என்பது காதற்பரத்தை. } (க)

௬0. மகிழ்நன் மாண்குணம் வண்டுகொண் டனகொல்
வண்டின் மாண்குண மகிழ்நன்கொண் டான்கொ
லன்ன தாகலு மறியா
ளெம்மொடு புலக்குமவன் புதல்வன் றாயே.

## ௬0.—எருமைப்பத்து. உ௬

எ - து, தலைமகன் தன்மனைக்கட் செல்லாமல் தான் விலக்குகின்றாளாகத் தலைமகள் கூறினளென்பது கேட்ட காதற்பரத்தை தலைமகன் கேட்குமாற்றால் அவட்குப் பாங்காயினர் கேட்பச் சொல்லியது. (க 0)

## புலவிராயபத்து முற்றிற்று.



## ௬0.—எருமைப்பத்து.



௬௧. நெறிமருப் பெருமை நீல விரும்போத்து
வெறிமலர்ப் பொய்கை யாம்பன் மயக்குங்
கழனி யூரன் மகளிவள்
பழன வெதிரின் கொடிப்பிணை யலளே.

எ - து, குறைவேண்டிப் பின்னின்றுவந்த தலைமகற்குத் தோழி, 'இவள் இளையள் விளைவிலள்' எனச் சேட்படுத்தது.

(ப - ரை:) நாற்றங்கொள்ளப்படாத கரும்பின் பூவாற்செய்யப்பட்ட நெடிய மாலையையுடையளென்பதனாற் பேதையென்றவாறு அறிக. எருமைப் போத்து வெறிமலர்ப் பொய்கை ஆம்பல் மயக்கு மூரென்றது, நல்லதன்மையை ஆராயாது கெடுக்குமூராதலால் நினக்கு ஈண்டுவருதல் பொருந்தாதென்

பதாம். பழனவெதிரென்பது கரும்பு.

(பி - ம்:) மூ. பழநல்வெதிரின். (க)

கூஉ. கருங்கோட் டெருமைச் செங்கட் புனிற்றுக்
காதற் குழவிக் கூறுமுலை மடுக்கு
நுந்தை நும்மூ ரருத்தி
தொண்டொடி மடந்தை நின்னையாம் பெறினே.

எ - து, நினக்கு வரைந்து தருதற்குக் குறை நின்தமர் அங்குவந்து கூறாமையேயெனத் தோழி கூறினளாக, தலைமகன் முகநோக்கி இவன் குறிப்பினாற் கூறினளென்பதறிந்த தலைமகன், 'வரைவு மாட்சிமைப்படின் நானே வருவல்' எனத்தலைமகட்குச் சொல்லியது.

(ப - ரை:) எருமைப் புனிற்றுத் தன்குழவிக்கு ஊறுமுலை மடிக்குமென்றது, அவள்பொருட்டு உற்றார்பக்கல் தான் பெறுவனவுங் கூறியவாறு.

(பி - ம்:) மூ. 'அருங்கோட்டெருமை. கருத். அறிந்த தலைமகன். (உ)

கூ0 ஐங்குறுநூறு.

கூங. எருமைநல் லேற்றின மேய லருந்தெனப்
பசுமோ ரோடமோ டாம்ப லொல்லா
செய்த வினைய மன்ற பல்பொழிற்
றாதுண் வெறுக்கைய வாகியிவள்
போதவிழ் முச்சி யூதும் வண்டே.

எ - து, முயக்கம்பெற்றவழிப் பிறந்த வெறிநாற்றத்தால் பண்டையளவன்றி வண்டுகள் மொய்த்தனவாக, 'இதற்குக் காரணமென்' என்று வினவிய செவிலித்தாய்க்குக் கூறுவாள்போன்று தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி சொல்லியது.

(பி - ம்:) மூ. நல்லேறின்மேயல். மூச்சூதும். (ங)

கூச. மள்ள ரன்ன தடங்கோட் டெருமை
மகளி ரன்ன துணையொடு வதியு
நிழன்முதி ரிலஞ்சிப் பழனத் ததுவே
கழனித் தாமரை மலருங்
கவின்பெறு சுடர்நுத றந்தை யூரே.

எ - து, வரைவிடை வைத்துப் பிரிந்த தலைமகன் மீள்கின்றான் சொல்லியது.

(ப - ரை:) எருமை துணையொடு வதியுமென்றது, வரைந்தெய்திய வழித் தலைமகளோடு தானெழுகும் இன்பவொழுக்கத்தினை நினைந்து கூறிய

வாறு. கழனித்தாமரை மலரும். எ - து, அவ்விடத்துத் தன்னைக்கண்டு மகிழ்வார் முகமலர்ச்சிகூறியவாறும்.

(பி - ம்:) மூ. திறக்கோட்டெருமை. (௯)

கூ௫. கருங்கோட் டெருமை கயிறு பரிந்தசைஇ
நெடுங்கதிர் நெல்லி னுண்மேய லாரும்
புனன்முற் றூரன் பகலும்
படர்மலி யருநோய் செய்தன னெமக்கே.

எ - து, உண்டிக்காலத்து மனைக்கண் வருதலுஞ் சுருங்கிப் பரத்தை யிடத்தனுய்த் தலைமகன் ஒழுகியவழி அவற்கு வாயிலாய் வந்தார்க்குத் தலை மகள் சொல்லியது.

(ப - ரை:) எருமை கயிற்றைப் பரிந்துபோய் நாண்மேயலாருமென்றது, விலக்குவார்க்கு அடங்காது புறத்தொழுக்கம் விரும்புவான். எ - று. (௰)

## ௰.—எருமைப்பத்து.

கூக

கூசு. அணிநடை யெருமை யாடிய வள்ளன்
மணிநிற நெய்த லாம்பலொடு கலிக்குங்
கழனி யூரன் மகளிவள்
பழன வூரன் பாயலின் றுணையே.

எ - து, பரத்தையர் பலரோடும் ஒழுகுதல்கண்டு பொறுத்திருந்த தலை மகள் தலைமகன் மனைக்கட்புகுந்துழி உடன்படுதல்கண்ட வாயில்கள் தம் முள்ளே சொல்லியது.

(ப - ரை:) எருமை உழுதழக்கிய அள்ளற்கண்ணே நெய்தலும் ஆம்ப லுங் கலிக்கும். எ - து, தலைமகற்கு வேண்டுவன புரிகின்ற இல்வாழ்க்கைக் கண்ணே தாம்பெறுகின்ற சிறப்புக்கூறியவாறு.

(பி - ம்:) மூ. அணிநிறவெருமை. (௬)

கூஎ. பகன்றை வான்மலர் மிடைந்த கோட்டைக்
கருந்தா ளெருமைக் கன்று வெரூஉம்
பொய்கை யூரன் மகளிவள்

பொய்கைப் பூவினு நறுந்தண் ணியளே.

எ - து, புறத்தொழுக்கம் இன்றியே இருக்கவும் உளதென்று புலந்த தலைமகளைப் புலவிநீக்கிய தலைமகன் புணர்ச்சியது இறுதிக்கண் தன்னுள்ளே சொல்லியது.

(ப - ரை:) நாயினுடைய பகன்றைமலர்மிடைந்த கோட்டைக் கன்று வெரூஉமென்றது, தன் தோளிலணிந்த மாலையைப் பிறிதொன்றற்கணிந்த மாலையெனக் கருதினளென்பதாம். (௭)

௯௮. தண்புன லாடுந் தடங்கோட் டெருமை
திண்பிணி யம்பியிற் றோன்று மூர
வொண்டொடி மடமக ளிவளினு
நுந்தையும் யாயுங் கடியரோ நின்னே.

எ - து, புறத்தொழுக்கம் உளதாகிய துணையானே புலந்து வாயினேராத தலைமகள்கொடுமை தலைமகன் கூறக்கேட்ட தோழி அவற்குச் சொல்லியது.

(ப - ரை:) இவளினுங் கடியரோவென்றது, நின்னிடத்துக் குற்ற முளதாகியவழிக் கழறுங்கால் இவளினும் கடியரோ நுந்தையும் யாயும். எ-று;



அவரினும் கடுமையாற் கூறுதற்கு உரியாள் இவளென்பதாம். நீராடு மெருமை பலருமேறுதற்குரிய அம்பிபோலத் தோன்றுமென்றது, பலர்க்கும் உரியையாவை யெனப் புலந்தாளென்பதாம். (௮)

௯௯. பழனப் பாகன் முயிறுமூசு குடம்பை
கழனி யெருமை கதிரொடு மயக்கும்
பூக்கஞ லூரன் மகளிவ
ணோய்க்குமருந் தாகிய பணைத்தோ ளோளே.

எ - து, தோழி முதலாயினர் தலைமகன் கொடுமைகூறி விலக்கவும் தலைமகள் வாயினேர்ந்துழி அவன் உவந்து சொல்லியது.

(ப - ரை:) முயிறுமூசு குடம்பையை நெற்கதிரோடு எருமை மயக்கு மென்றது, யான்செய்த கொடுமையையும் அவர்கள் தன்மேற் காதலித்துக் கூறியவற்றையுஞ் சிதைத்து என்பக்கலே நின்றாளென்பதாம்.

(பி - ம்:) மூ - பழனப்பாகர். (௯)

௧00. புனலாடு மகளி ரிட்ட வொள்ளிழை
மணலாடு சிமையத் தெருமை கிளைக்கும்
யாண ரூரன் மகளிவள்
பாணர் நரம்பினு மின்கிள வியளே.

எ - து, வாயினேர்தற்பொருட்டு முகம்புகுவான்வேண்டி இயற்பழித்துழித் தலைமகள் இயற்படமொழிந்ததிறம் தலைமகற்குத் தோழி சொல்லியது.

(ப - ரை:) மகளிரது மறைந்த இழையை எருமை கிளைக்குமூரன் மகளென்றது இப்போது வாயினேர்தலேயன்றிக் களவுக்காலத்து நீசெய்த நன்மைமறைந்தனவும் எடுத்துக் கூறினளென்பதாம். (௧0)

## எருமைப்பத்து முற்றிற்று.



### மருதம் முற்றிற்று.



ஓரம்போகியார்.



# உ.—நெய்தல்.



## ௧௧.—தாய்க்குரைத்த பத்து.



௧0௧. அன்னை வாழிவேண் டன்னை புதுக்கா
ணோர்கொடிப் பாசடும்பு பரியவூர் பிழிபு
நெய்தன் மயக்கி வந்தன் று நின்மகள்
பூப்போ லுண்கண் மரீஇய
நோய்க்குமருந் தாகிய கொண்கன் றேரே.

எ - து, அறத்தொடு நின்றபின்னர் வரைதற்பொருட்டுப் பிரிந்த தலை

மகன் வரைவோடு புகுந்தவழித் தோழி செவிலிக்குக் காட்டிச் சொல்லியது.

(ப - ரை:) தேர் அடும்புபரிய அதனை ஊர்ந்திழிந்து நெய்தலை மயக்கி வந்ததென்றது, களவிற்கூட்டம் வெளிப்பட்டபின்பும் வரையாது பிரிந்தானென்று அலர்கூறுவார் வருந்த வந்தான். எ - று.

(பி - ம்:) மூ. உவக்காண். ஊர்பிழிபூஉ. நின்மகளே. (௧)

௧0௨. அன்னை வாழிவேண் டன்னை நம்மூர்
நீனிறப் பெருங்கடற் புள்ளி னானாது
துன்புறு துயர நீங்க
வின்புற விசைக்குமவர் தேர்மணிக் குரலே.

இதுவுமது.

(பி - ம்:) மூ. இசைக்குமவர். (௨)

௧0௩. அன்னை வாழிவேண் டன்னை புன்னையொடு
ஞாழல் பூக்குந் தண்ணந் துறைவ
னிவட்கமைந் தனனாற் றானே
தனக்கமைந் தன்றிவண் மாமைக் கவினே.

எ - து, அறத்தொடு நின்றதோழி வதுவைநிகழாநின்றுழித் தாய்க்குக் காட்டி உவந்து சொல்லியது.

(ப - ரை:) புன்னையொடு ஞாழல் பூக்குமென்றது, குடிப்பிறப்பும் உருவும் நலனும் ஒத்தல் கூறியவாறு. (௩)

௫



௧0௪. அன்னை வாழிவேண் டன்னை நம்மூர்ப்
பலர்மடி பொழுதி னலமிகச் சாஅய்
நள்ளென வந்த வியறேர்ச்
செல்வக் கொண்கன் செல்வனஃ தூரே.

எ - து, புதல்வற் பெற்றுழித் தலைமகன் மனைக்கட்சென்ற செவிலிக்கு முன்பு அறத்தொடுநின்று வதுவைகூட்டிய தோழி அவனூர் நன்மைகாட்டிச் சொல்லியது.

(ப - ரை:) செல்வக் கொண்கன் செல்வனென்றது, புதல்வனை; செல்வக்கொண்கன் செல்வனூரென்னும் எழுவாயின் முற்றுச்சொல் அஃதென்னும்பெயர்.

(பி - ம்:) மூ. வியன்றேர். (௪)

௧0௫. அன்னை வாழிவேண் டன்னை முழங்குகடற்
றிரைதரு முத்தம் வெண்மணை லிமைக்குந்
தண்ணந் துறைவன் வந்தெனப்
பொன்னினுஞ் சிவந்தன் று கண்டிசி னுதலே.

எ - து, அறத்தொடு நின்றபின் வேண்டுவன தருதற்குப் பிரிந்த தலைமகன் வரைவொடுவந்துழி முன்பு தலைமகள் நுதற்கட் பசப்புநீங்கும்வண்ணம் தோன்றிய கதிர்ப்புக்காட்டிச் செவிலிக்குத் தோழி சொல்லியது.

(ப - ரை:) ஓதத்தால் அலைப்புண்டு போந்தமுத்தம் மணற்கண்ணே கிடந்து விளங்குமென்றது, தன்வருத்தநோக்காது நமக்கு நிலைநின்ற இன்பத்தைத் தருவான். எ - று.

(பி - ம்:) மூ. திரிதருமுத்தம், கருத். வேண்டுவன கொண்டுவருதற்கு. (௫)

௧0௬. அன்னை வாழிவேண் டன்னை யவர்நாட்டுத்
துதிக்கா லன்னந் துணைசெத்து மிதிக்குந்
தண்கடல் வளையினு மிலங்குமிவ
ளங்கலி ழாகங் கண்டிசி னினிந்தே.

எ - து, அறத்தொடு நின்றதோழி அது வற்புறுப்பான்வேண்டிச் செவிலிக்குச் சொல்லியது.

(ப - ரை:) தண்கடல் வளையினும் இலங்குமென்றது, மேனியில் வேறுபாடு.

(பி - ம்:) மூ. அன்னநீ துணைசெத்து. (௬)

## ௧௧.—தாய்க்குரைத்த பத்து. ௩௫

௧0௭. அன்னை வாழிவேண் டன்னையென் றோழி
சுடர்நுதல் பசப்பச் சாஅய்ப் படர்மெலிந்து
தண்கடற் படுதிரை கேட்டொறுந்
துஞ்சா ளாகுத னோகோ யானே.

எ - து, தோழி செவிலிக்கு அறத்தொடுநிலை குறித்துக் கூறியது. (எ)

௧0௮. அன்னை வாழிவேண் டன்னை கழிய

முண்டக மலருந் தண்கடற் சேர்ப்ப
னெங்தோ டுறந்தன னாயி
னெவன்கொன் மற்றவ னயந்த தோளே.

எ - து, அறத்தொடுநிலை பிறந்தபின்னும் வரைவுநீடிற்றாக மற்றொரு குலமகளை வரையுங்கொலென்று ஐயுற்ற செவிலி குறிப்பறிந்ததோழி அவட்குச் சொல்லியது.

(பி - ம்:) மூ. என்றோடுறந்தனன். என்னுங்கொல்லவன்.
என்னுங்கொன் மற்றவ னயந்தோ டோளே. (அ)

கூசு. அன்னை வாழிவேண் டன்னை நெய்தல்
னீர்ப்படர் தூம்பின் பூக்கெழு துறைவ
னெங்தோ டுறந்த காலை யெவன்கொல்
பன்னாள் வருமவ னளித்த பொழுதே.

எ - து, அறத்தொடு நின்றபின்பு வரைவான்பிரிந்ததலைமகன் கடிதின் வாராதவழி ஐயுற்றசெவிலி, 'அவன் நம்மைத்துறந்தான்போலும்; நுங்கட்கு அவன்கூறியதிறம் யாது' என்றாட்குத் தோழி சொல்லியது. (கூ)

கக0. அன்னை வாழிவேண் டன்னை புன்னை
பொன்னிறம் விரியும் பூக்கெழு துறைவனை
யென்னை யென்றும் யாமே யிவ்வூர்
பிறிதொன் றாகக் கூறும்
மாங்கு மாக்குமோ வாழிய பாலே.

எ - து, நொதுமலர் வரைவின்கண் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது. (க0)

## தாய்க்குரைத்தபத்து முற்றிற்று.





## கஉ.—தோழிக்குரைத்த பத்து.



கககக. அம்ம வாழி தோழி பாணன்
சூழ்கழி மருங்கி னாணிரைக் கொளீஇச்
சினைக்கயன் மாய்க்குந் துறைவன் கேண்மை
பிரிந்தும் வாழ்துமோ நாமே
யருந்தவ முயறு லாற்று தேமே.

எ - து, இற்செறிப்பா ரெனக்கேட்ட தலைமகள் வரையாதுவந்து ஒழுகுந்தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லியது. (க)

ககஉ. அம்ம வாழி தோழி பாசிலைச்
செருந்தி தாய விருங்கழிச் சேர்ப்பன்
றான்வரக் காண்குவ நாமே
மறந்தோ மன்ற நாணுடை நெஞ்சே.

எ - து, களவுநீடுவழி வரையலன்கொலென்று அஞ்சிய தோழிக்குத் தலைமகன் வரையுந்திறம் தெளிக்கத் தெளிந்த தலைமகள் சொல்லியது.

(பி - ம்:) மூ. மறந்தேன் மன்ற. (உ)

ககங. அம்ம வாழி தோழி நென்ன
லோங்குதிரை வெண்மண லுடைக்குந் துறைவற்
கூரார் பெண்டென மொழிய வென்னை
யதுகேட் டன்னா யென்றன ளன்னை
பைபய வெம்மை யென்றனென் யானே.

எ - து, வரையாதுவந்து ஒழுகுந்தலைமகன் சிறைப்புறத்து நின்று கேட்ப நெருநல் இல்லத்து நிகழ்ந்தது இதுவெனத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

(பி - ம்:) மூ. பெண்டெனமொழிப. அன்னையென்றனள்.
பைபைய. பையவெம்மை. (ங)

ககச. அம்ம வாழி தோழி கொண்க
னேரே மாயினுஞ் செல்குவங் கொல்லோ
கடலி னாரை யிரற்று
மடலம் பெண்ணைய வனுடைய நாட்டே,

எ - து, இடைவிட்டொழுகுந் தலைமகன்வந்து சிறைப்புறத்தானாமை யறிந்த தலைமகள் அவன்கேட்கு மாற்றால் தோழிக்குச் சொல்லியது.

(பி - ம்:) மூ. சொண்கனை, கேரேனாயினும். நாரை விரற்றும். அவருடை. (ரு)

கக௫. அம்ம வாழி தோழி பன்மா
ணுண்பணை யைகரை நம்மோ டாடிய
தண்ணந் துறைவன் மறைஇ
யன்னை யருங்கடி வந்துநின் றோனே.

எ - து, இற்செறிப்புண்ட பின்னும் வரைந்துகொள்ள நினையாது தலைமகன் வந்தானாக, அதனையறிந்த தலைமகள் அவன்கேட்குமாற்றால் தோழிக்குச் சொல்லியது.

(பி - ம்:) மூ. துறைவன்மரீஇ. வந்துநின்றனே. (௬)

கக௬. அம்ம வாழி தோழி நாமழ
நீல விருங்கழி நீலங் கூம்பு
மாலைவந் தன்று மன்ற
காலை யன்ன காலைமுந் துறுத்தே.

எ - து, எற்பாட்டின்கண் தலைமகன் சிறைப்புறத்து நின்றுகேட்பத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது. (௭)

கக௭. அம்ம வாழி தோழி நலனே
யின்ன தாகுதல் கொடிதே புன்னை
யணிமலர் துறைதொறும் வரிக்கு
மணிநீர்ச் சேர்ப்பனை மறவா தீமே

எ - து, வரையாது வந்தொழுகுந் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது. (௮)

கக௮. அம்ம வாழி தோழி யானின்
றறனி லாளற் கண்ட பொழுதிற்
சினவுவென் றகைக்குவென் சென்றனென்
பின்னிலைனந் திரங்கிப் பெயர்தந் தேனே.

எ - து, சிறைப்புறமாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது; தோழி வாயின் மறுத்த தலைமகள் பின்பு தலைமகன் வந்துழி நிகழ்ந்ததனை அவட்குக் கூறியதூஉமாம்.

(பி - ம்:) மூ. சென்றனன். (அ)

௧௧௯. அம்ம வாழி தோழி நன்று
மெய்யா மைபி னேதில பற்றி
யன்பிலன் மன்ற பெரிதே
மென்புலக் கொண்கன் வாரா தோனே.

எ - து, 'வரைதற்கு வேண்டுவன முயல்வேம்' எனச்சொல்லி வரையாது செலுத்துகின்ற தலைமகன் சிறைப்புறத்தானானமை யறிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

(பி - ம்:) மூ. எதில பெற்றி. ஏதிலர்ப் பற்றி. ஏதில் பற்றி. (௯)

௧௨௦. அம்ம வாழி தோழி நலமிக
நல்ல வாயின வளியமென் றோளே
மல்ல லிருங்கழி நீரறல் விரிய
மெல்லம் புலம்பன் வந்த மாறே.

எ - து, வரைவிடைவைத்துப் பிரிந்த தலைமகன் வந்து சிறைப்புறத்தானாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

(பி - ம்:) தோள்கள். கழிமலரும். கழிமல்கும். (௧0)

## தோழிக்குரைத்த பத்து முற்றிற்று.



## ௧௩.—கிழவற்குரைத்த பத்து.



௧௨௧. கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
முண்டகக் கோதை நனையத்
தெண்டிரைப் பௌவம் பாய்ந்துநின் றோளே.

எ - து, பரத்தை தலைமகற்குச் சொல்லியது; பெதும்பைப் பருவத்தாள் ஒருபரத்தையோடு கூடி மறைந்து ஒழுகாநின்றா னென்பதறிந்து தலைவி புலந்துழி, 'இத்தவறு என்மாட்டில்லை; நீ இப்புலவியை நீக்கவேண்டும்' என்று தோழிக்குத் தலைமகன்கூறப் புலவியைநீக்கக் கருதியதோழி அவளிளமை கூறி நகையாடிச் சொல்லியதூஉமாம்.

இனி வருகின்றபாட்டு ஒன்பதிற்கும் இத்துறையாம்.

(பி - ம்;) கருத். நீக்கவேணுமென்று, (க)

## கக.—கிழவற்குரைத்த பத்து. கக

கஉஉ. கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
யொள்ளிழை யுயர்மணல் வீழ்ந்தென
வெள்ளாங் குருகை வினவு வோளே. (உ)

கஉக. கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
யொண்ணுத லாய மார்ப்பத்
தண்ணென் பெருங்கடற் றிரைபாய் வோளே. (க)

கஉச. கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
வண்டற் பாவை வௌவலி
னுண்பொடி யளைஇக் கடலூர்ப் போளே. (ச)

கஉரு. கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
தெண்டிரை பாவை வௌவ
வுண்கண் சிவப்ப வழுதுநின் றோளே.
(பி - ம்;) மூ. திரைப் பாவை. (ரு)

கஉசா. கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
யுண்கண் வண்டின மொய்ப்பத்
தெண்கடற் பெருந்திரை மூழ்கு வோளே. (சா)

கஉஎ. கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
தும்பை மாலை யிளமுலை
நுண்பூ ணாகம் விலங்கு வோளே. (எ)

கஉஅ. கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
யுறாஅ வறுமுலை மடாஅ
வுண்ணாப் பாவையை யூட்டு வோளே.
(பி - ம்;) மூ. ஊறுவறுமுலை. பாவையூட்டு. (அ)

கஉகூ. ::::::::::::::::::::::::::::::
..............................

........................... (௯)

கரு0. ...........................

...........................

........................... (௧0)

கிழவற்குரைத்த பத்து முற்றிற்று.

## ௧௪.—பாணற்குரைத்த பத்து.

கருக. நன்றே பாண கொண்கனது நட்பே
தில்லை வேலி யிவ்வூர்க்
கல்லென் கௌவை யெழாஅக் காலே.

எ - து, வாயில்வேண்டிவந்த பாணன் தலைமகன் காதன்மை கூறினானாகத் தலைமகள் வாயில்மறுப்பாள் அவற்குக் கூறியது. (௧)

கருஉ. அம்ம வாழி பாண புன்னை
யரும்புமலி கானலி லிவ்வூ
ரலரா கின்றவ ரருளு மாறே.

எ - து, வாயில்வேண்டிவந்த பாணன், 'நீர் கொடுமைகூறவேண்டா; நும்மேல் அருளுடையர்' என்றாற்குத் தலைமகள் சொல்லியது. (உ)

கருரு. யானெவன் செய்கோ பாணவா னுது
மெல்லம் புலம்பன் பிரிந்தெனப்
புல்லென் றனவென் புரிவளைத் தோளே.

எ - து, வாயிலாய்ப் புகுந்தபாணன் தலைமகள் தோண்மெலிவு கண்டு 'மனைப்புறத்துப் போய்வந்ததுணையானே இவ்வாறு வேறுபடுதல் தகாது' என்றாற்கு அவள் சொல்லியது.

(பி - ம்:) மூ. எம்புரிவளை. கருத். வேறுபடுதற்காகாது. (௩)

கருச. காண்மதி பாண விருங்கழிப் பாய்பரி
நெடுந்தேர்க் கொண்க னோடு
தான்வந் தன்றென் மாமைக் கவினே.

எ - து, பிரிவின்கண் தலைமகள் கவின்தொலைவுகண்டு வெறுத்து ஒழுகுகின்றபாணற்குத் தலைமகன்வந்தழிக் கவினெய்திய தலைமகள் சொல்லியது.

(பி - ம்:) மூ. பாய்மணி. (சு)

கரு௫. பைதலை மல்லேலம் பாண பணைத்தோ
ளைதமைந் தகன்ற வல்கு
னெய்தலங் கண்ணியை நேர்தனும் பெறினே.

எ - து, பரத்தை யொருத்தியைத் தலைப்பெய்வான்வேண்டி அதனைத் தலைமகன் மறைத்தொழுகுகின்றதறிந்த தலைமகள் அவன் கேட்குமாற்றாற் பாணற்குச் சொல்லியது. (௬)

கரு௬. நாணிலை மன்ற பாண நீயே
கோணே ரிலங்குவளை நெகிழ்த்த
கானலந் துறைவற்குச் சொல்லுகுப் போயே.

எ - து, வாயிலாய்ப் புகுந்து தலைமகன் குணங்கூறிய பாணற்கு வாயின் மறுக்கும் தலைமகள் சொல்லியது.

(பி - ம்:) கருத். புகுந்த தலைமகன். (சு)

கருஎ. நின்னொன்று வினவுவல் பாண நும்மூர்த்
திண்டேர்க் கொண்கனை நயந்தோர்
பண்டைத் தங்நலம் பெறுபவோ மற்றே.

எ - து, தலைமகன் வாயில்பெற்றுப்புகுந்து நீங்கின விடத்தும் அவன் முன்புசெய்த தீங்குநினைந்து தலைமகள் வேறுபட்டிருந்தாளாக, 'இனி இந்த வேறுபாடு என்' என்றுவினவிய பாணற்கு அவள் சொல்லியது.

(ப - ரை:) திண்டேர்க் கொண்கனை நயந்தோர் நும்மூரிற் பண்டைத் தங்நலம் பெறுவாருளரோ வெனக்கூட்டுக. (எ)

கருஅ. பண்பிலை மன்ற பாண விவ்வூ
ரன்பில கடிய கழறி
மென்புலக் கொண்கனைத் தாரா தோயே.

எ - து, தலைமகன் வாயில்பெற்றுப் புகுந்தது அறியாது வந்தபாணற்குத் தலைமகள் நகையாடிச் சொல்லியது. (அ)

கந௬. அரும வாழி கொண்க வெம்வயின்
மாணலமருட்டு நின்னினும்
பாணனல்லோர் நலஞ்சிதைக் கும்மே.
௬



எ - து, ஆற்றாமை வாயிலாகப் புகுந்திருந்த தலைமகற்குப் பாணன் வந்துழித் தலைமகள் சொல்லியது. (௯)

கசㅇ. காண்மதி பாணநீ யுரைத்தற் குரியை
துறைகெழு கொண்கன் பிரிந்தென
விறைகே ழெல்வளை நீங்கிய நிலையே.

எ - து, பாணன் தூதாகிச் செல்லவேண்டுங் குறிப்பினனாகிய தலைமகள் அவற்குத் தன்மெலிவுகாட்டிச் சொல்லியது.

(பி - ம்:) மூ. உரைத்தற்கு முரியை. (௧ㅇ)

பாணற்குரைத்தபத்து முற்றிற்று.



## கரு.—ஞாழற்பத்து.



கசக. எக்கர் ஞாழல் செருந்தியொடு கமழத்
துவலைத் தண்டுளி வீசிப்
பசலை செய்தன பனிபடு துறையே.

எ - து, வரைவிடை வைத்துப் பிரிந்துழி ஆற்றாளாகின்ற தலைமகள் 'அவன் வரைதற்குப் பிரியவும் நீ ஆற்றாயாகின்றது என்னை' என்ற தோழிக்குச்சொல்லியது. (௧)

கச௨. எக்கர் ஞாழ லிறங்கிணர்ப் படுசினைப்
புள்ளிறை கூருந் துறைவனை
யுள்ளேன் றோழி படீஇயரென் கண்ணே.

எ - து, வரையாதுவந்து ஒழுகுந் தலைமகன் இரவுக்குறிக்கட் சிறைப்புறத்தானாக, 'நின்கண் துயிறற்பொருட்டு நீ அவனை மறக்கவேண்டும்' என்ற

தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

(ப - ரை:) ஞாழலில் தாழ்ந்த பூச்சினை வருந்தப் புள்வதியு மென்றது, தான்வரையாது நமக்கு வருநோயறியாது தான்வேண்டு மின்பமே முடிப்பான். எ - று.

(பி - ம்:). கருத். மறுக்கவேண்டும். (உ)

கசா. எக்கர் ஞாழற் புள்ளிறி ழகன்றுறை
யினிய செய்த நின்றுபின்
முனிவு செய்தவிவ டடமென் றோளே.

கரு.—ஞாழற் பத்து. சரு

எ - து, புறத்துத் தங்கிவந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.

(ப - ரை:) 'இனியசெய்த.........மென்றோள்' என்றது, அக்காலத்து நினக்கு இனிமைசெய்து பின்முனிவைச் செய்தனவாதலால், இஃது இத் தோள்களின் தவறல்லது நின்தவறன்றென்பதாம்; ஞாழற்கண்ணே புள்ளி மிழகன்றுறை யென்றது, இவ்வூரகன்றுறையார் அலர்தூற்றுவ ரென்பதாம்.

(பி - ம்:) மூ. நின்றுயின். (ங)

கசச. எக்கர் ஞாழ லிணர்படு பொதும்பர்த்
தனிக்குரு குறங்குந் துறைவற்
கினிப்பசந் தன்றென் மாமைக் கவினே.

எ - து, தலைமகன் வரைந்து கோடல் நினையாது களவொழுக்கமே விரும்பி ஒழுகாநின்ற னென்பது அறிந்து வேறுபட்ட தலைமகள், 'அவன் கூறியவாற்றால் இனிக் கடிதின் வரைவன்; ஆற்றுயாகாதொழியவேண்டும்' என்ற தோழிக்குச் சொல்லியது.

(ப - ரை:) 'எக்கர்ஞாழல்......உறங்கும்' என்றது, இனி அக்காலம் வந்த விடத்தும் வரைந்துகொண்டு ஒன்றுபட்டொழுக நினையாது தனித்துறை தலே விரும்புவான். எ - று. இப்போது பசந்ததென்றது, அவன்வரைவே னென்று கூறியவார்த்தையை மெய்யென்று கொண்டு கூறுதலால், இப்போது காண் என் மாமைக்கவின் பசந்தது. எ - று. (ச)

கசரு. எக்கர் ஞாழற் சிறியிலைப் பெருஞ்சினை
யோதம் வாங்குந் துறைவன்
மாயோள் பசலை நீக்கின னினியே.

எ - து, வரைவுமறுத்த தமர் உடம்படுமாற்றுற் சான்றோரைத் தலை மகன் விடுத்ததறிந்ததோழி தலைமகள் கேட்குமாற்றுற் சொல்லியது.

(ப - ரை:) ஞாழற்சினையை ஒதம்வளைக்குந் துறைவனென்றது, தன் வழிவாராத சுற்றத்தாரைத் தன்வழியாக்குகின்றா னென்றதாம்.

(பி - ம்:) கருத். வரைவுமடுத்த. (௬)

கசசு. எக்கர் ஞாழ லரும்புமுதி ரவிழிணர்
நறிய கமழுந் துறைவர்க்
கினிய மன்றவென் மாமைக் கவினே.

எ - து, வரைவுகடாவவும் வரையாதொழுகுகின்றுழி, 'நம்மை எவ்வகை நினைத்தார் கொல்லோ' என்று ஐயுற்றிருந்த தலைமகள் வரைவு தலைவந்துழித் தோழிக்குச் சொல்லியது.

சச ஐங்குறுநூறு.

(ப - ரை:) 'அரும்புமுதி.........துறைவர்' என்றது, அவரன்பு முறையால் நிரம்பி வெளிப்பட்டதிறம் கூறியவாறு. (௬)

கசஎ. எக்கர் ஞாழன் மலரின் மகளி
ரொண்டழை யயருந் துறைவன்
றண்டழை விலையென நல்கின னாடே.

எ - து, சுற்றத்தார்வேண்டிய கொடுத்துத் தலைமகன் வரைவுமாட்சிமைப்படுத்தமையறிந்த தோழி உவந்த வுள்ளத்தாளாய்த் தலைமகட்குச் சொல்லியது.

(ப - ரை:) ஞாழன்மலரில்லாத மகளிர் அதன்றழையை விரும்புந் துறைவனென்றது, உலகைவழங்கவேண்டு முள்ளத்தன் அஃதின்மையால் நாட்டை வழங்கினனென்பதாம்.

(பி - ம்:) மூ. மலரினை மகளிர். (எ)

கசஅ. எக்கர் ஞாழ லிகந்துபடு பெருஞ்சினை
வீயினிது கமழுந் துறைவனை
நீயினிது முயங்குமதி காத லோயே.

எ - து, களவொழுக்கத்தின் விளைவறியாது அஞ்சிய வருத்தநீங்க வதுவை கரணவகையான் முடித்தபின்பு தலைமகளைப் பள்ளியிடத்து உய்க்குந்தோழி சொல்லியது.

(ப - ரை:) 'எக்கர்ஞாழ...........கமழுந்துறைவன்' என்றது, அவன் அன்பு இதன்மேல் இல்லையென வளர்ந்து பயன்பட்டதிறம் கூறியவாறு.

(பி - ம்:) கருத். விளைவறிவதஞ்சிய. (அ)

கசசு. எக்கர் ஞாழற் பூவி னன்ன
சுணங்குவன ரிளமுலை படந்தைத்
கணங்குவளர்த் தகறல் வல்லா தீமே.

எ - து, வரைந்தெய்திய தலைமகன் தலைவியோடு பள்ளியிடத்திருந்தழித் தோழி வாழ்த்தியது. (கூ)

கஙு0. எக்கர் ஞாழ னறுமலர்ப் பெருஞ்சினைப்
புணரி திளைக்குந் துறைவன்
புணர்வி னின்று னரும்புணர் வினனே.

## ககூ.—வெள்ளாங்குருகுப் பத்து. சடு

எ - து, முன்னொருகாற் பிரிந்துவந்த தலைமகன் பின்னும் பிரிந்துவந்தழி அவனை முயங்காளாக, தோழி, "நீ இவ்வாறு செய்தற்குக்காரணம் என்" என்று வினவியவழித் தலைமகள்தோழிக்குத் தலைமகன்கேட்பச் சொல்லியது.

(ப - ரை:) நறுமலர்ப்பெருஞ்சினை வருந்த வந்து திரை திளைக்குமென்றது, ஓரிடத்தானுமொழுகாது வந்தும் பெயர்ந்தும் நம்மை வருத்தமுறுத்துவான். எ - று.

(பி - ம்:) மூ. புணர்வினன்னுன். (க0)

## ஞாழற்பத்து முற்றிற்று.



## ககூ.—வெள்ளாங்குருகுப் பத்து.



கஙுக. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
மிதிப்ப நக்க கண்போ னெய்தல்
கட்கமழ்ந் தானுத் துறைவற்கு
நெக்க நெஞ்சு நேர்கல் லேனே.

எ - து, வாயில்வேண்டிய தோழிக்குத் தலைமகள் வாயின்மறுப்பாள் சொல்லியது.

(ப - ரை:) இதனுள்ளுறை: பரத்தையொருத்தியோடு ஒழுகுகின்ற

ஒழுக்கம் இடையறாதாகச் சென்றவாயில்கள் நெருங்க அவள் நெஞ்சு நெகிழ்ந்து கூறிய காதன்மாற்றம் பரந்துசெல்கின்ற துறைவனென்பதாம். வெள்ளாங்குருகென்றது பரத்தையாகவும், பிள்ளையென்றது பரத்தையோடு தலைமகனிடை உளதாகிய ஒழுக்கமாகவும், காணிய சென்ற மடநடை நாரை யென்றது வாயில்களாகவுங்கொள்க. இவை வருகின்ற பாட்டு ஒன்பதுக்கும் ஒக்கும். மிதித்தது அவளை நெருங்குதலாகவும், நக்கநெய்தல் அவனொஞ்சாக வும், கட்கமழ்ந்து ஆறுமை அவள் அவர்க்குக் கூறியமாற்றம் எல்லாருக்கும் புலப்படுதலாகவும் இப்பாட்டிற்குக்கொள்க. (க)

கருஉ. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
கையறு பிரற்று கானலம் புலம்பந்
துறைவன் வரையு மென்ப
வறவன் போலு மருளுமா ரதுவே.



எ - து, தலைமகள் வாயின்மறுத்தழி 'இவன் நின்மேல் தொடர்ச்சியிற் குறைவிலன்; அருளுமுடையன்; ஆதலால், நீ இவனோடுபுலத்தல் தகாது' என நெருங்கி வாயில்நேர்விக்குந்தோழிக்கு அவள் சொல்லியது.

(ப - ரை:) 'துறைவன் வரையு.........மா ரதுவே' என்றது, அப்பரத் தையைத் தனக்கு இற்பரத்தையாக வரைவானென்று கூறுநின்றாராதலின், நீ கூறுகின்றபடியே 'அறமுடையன்போலும், அருளும் அதுவே' என இகழ்ந்துகூறியவாறு. 'கையறு பிரற்று கானலம் புலம்பந் துறைவன்' என் றது, பரத்தையிடத்துச்சென்ற வாயில்கள் கூற்றேயாய்ப் பிறிதுமாற்ற மின்றிச் செல்கின்ற துறைவன். எ - று.

(பி - ம்:) மூ. கையறப்பிரற்ற. இரற்ற. கானல்புலம்பும். (உ)

கருந. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற படநடை நாரை
[illegible]வொழிந்த தூவி குலவுமணற்
போர்விற் பெறூஉந் துறைவன் கேண்மை
நன்னெடுங் கூந்த னுடுமோ மற்றே.

எ - து, பரத்தையிற்பிரிந்து வாயில்வேண்டிய தலைமகன் கேட்குமாற்

ரூல் வாயிலாய்ப்புகுந்தார்க்குத் தோழிகூறியது.

(ப - ரை:) 'ஊரவொழிந்த....... துறைவன்' என்றது, இவன்கூறி விட்ட வாயில்கள்மாற்றம் பரத்தைபெறுந் துறைவன். எ-று.

(பி - ம்:) மூ. குவவுமணல். நாணுமோ. (௩)

கருச. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
கானற் சேக்குந் துறைவனோ
டியானெவன் செய்கோ பொய்க்குமிவ் வூரே.

எ - து, தோழி வாயில்வேண்டி நெருங்கியவழி வாயின்மறுக்கும் தலைமகள் சொல்லியது.

(ப - ரை:) 'துறைவனோடு யானெவன்செய்கோ' என்றது, 'அவனோடு யான் ஒழுகுமொழுக்கம் என்' என்று வெறுத்துக்கூறியவாறு. 'பொய்க்கு மிவ்வூர்' என்றது, தலைமகன் குணங்கூறுகின்ற தோழியை நோக்கியெனக் கொள்க. 'நாரை கானற்சேக்கும்' என்றது, வாயிலாய்ச்சென்றார் அவண் மூட்டுத் தங்குதல் நோக்கியெனக்கொள்க. (௪)

## கசு.—வெள்ளாங்குருகுப்பத்து. ௭௭

கருரு. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
பதைப்பத் ததைந்த நெய்தல் கழிய
வோதமொடு பெயருந் துறைவற்குப்
பைஞ்சாய்ப் பாவை யீன்றனென் யானே.

எ - து, பல்வழியானும் வாயில்நேராளாகிய தலைமகள், 'மகப்பேற்றிற்கு உரித்தாகிய காலங்கழிய ஒழுகுகின்றாய்' என நெருங்கியதோழிக்குச் சொல்லியது.

(ப - ரை:) 'பதைப்ப................ துறைவன்' என்றது, வாயில்கள் கூறப் பரத்தையெய்திய இரக்கத்தினைத் தன் தண்ணளியால் தீர்ப்பான். எ - று.

(பி - ம்:) மூ. பறைப்பத்ததைந்த. பஞ்சாய்க்கோதை.
கருத். பலபடியானும். ப. விரகத்தினை.

கறு௬. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
பதைப்ப வொழிந்த செம்மறுத் தூவி
தெண்கழிப் பரக்குந் துறைவ
னெனக்கோ காதல னனைக்கோ வேறே.

எ - து, பரத்தையிடத்து வாயில்விட்டு ஒழுகுகின்ற தலைமகனது வாயிலாய் வந்தார்க்குத் தோழி வாயின்மறுத்தது.

(ப - ரை:) 'எனக்கோ காதலன் அனைக்கோவேறே' என்றது, 'இவண் பேர் அவன் காதலன்' என்று நீயிர்கூறுகின்றமாற்றம் மெய்யென்பது எனக்கு மொக்கும்; இவண்மனத்திற்கு ஒவ்வாதென்பதாம். அன்னையென்றது தலைமகளை. 'செம்மறுத் தூவி தெண்கழிப் பரக்குந்துறைவன்' என்றது, அப்பரத்தைக்குக் கூறிவிட்டமாற்றம் எவ்விடத்தும் பரந்து செல்கின்ற துறைவன். எ - று.

(பி - ம்:) மூ. பரிக்குந்துறைவன். கருத். தலைமகற்குவாயிலாய். (௬)

கறு௭. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
காலை யிருந்து மாலைச் சேக்குந்
தெண்கடற் சேர்ப்பனொடு வாரான்
றான் வந் தனனெங் காத லோனே.



எ - து, பரத்தையிற்பிரிந்து வாயில்வேண்டி ஒழுகுகின்ற தலைமகன் புதல்வன் வாயிலாக வருமெனக்கேட்டு அஞ்சிய தலைமகள் புதல்வன் விளையாடித் தனித்துவந்துழிச் சொல்லியது.

(ப - ரை:) 'காதலன்' என்றது, என்மேல் என்புதல்வன் காதலனென்பதறிந்தேன்; அவனோடு வாராது தனித்துவருதலான். எ - று. 'நாரை காலையிருந்து மாலைச்சேக்குந் துறைவன்' என்றது, பரத்தையிடத்துவிட்ட வாயில்கள் செவ்விபெறாது பகலெல்லாமிருந்து இரவின்கண்ணும் அங்கே துயில்கின்றானென்பதாம். (எ)

கறு௮. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை

சானலம் பெருந்துறைத் துணையொடு கொட்குந்
தண்ணந் துறைவன் கண்டிகு
ர மம்மர் மேனியெந் தோழியது துயரே.

எ - து, பரத்தை புலந்துழிப் புலவி நீக்குவானாய் அஃது இடமாகவந்தமை யறிந்த தோழி தலைமகற்கு வாயில்மறுத்தது.

(ப - ரை:) 'கண்டிகும் மம்மர் மேனி எம் தோழியது துயரே' என்றது, எம்மிடத்துத் துயரமில்லை; எந்தோழியாகிய பரத்தைத் தலைவி துயரங்கண்டேம்; நீ கடிதிற்சென்று அவள் வருத்தந் தீர்ப்பாயாக. எ - று. 'நாரை...... ......கொட்கும்' என்றது, நினக்கு வாயிலாகச்சென்றார் அவள் கருத்தறிந்து மகிழ்ந்து ஒழுகுகின்றாரென்பதாம்.

(பி - ம்:) ௬. என்றோழியது. (அ)

கறுகூ. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
பசிதின வல்கும் பனிநீர்ச் சேர்ப்ப
நின்னொன் றிரக்குவ னல்லேன்
றந்தனை சென்மோ கொண்டவிவ ணலனே.

எ - து, மருமற்பொருட்டு உண்டிக்காலத்து வாயில்வேண்டிவந்த தலைமகற்குத் தோழி கூறியது.

(ப - ரை:) நீகொண்ட இவள் நலன் தந்தனை செல்லெனக்கூட்டுக. 'நாரை ......சேர்ப்ப' என்றது, வாயிலாய் நின்பரத்தைமனைக்கட் சென்றோர் நின்னைப்பார்த்திருந்து பசிப்பர்கள்; அவருடன் அருந்தக் கடிதின் அவள்மனைக்கட் செல்வாயென்பதாம். (கூ)

## கஎ.—சிறுவெண்காக்கைப் பத்து. சசு

கஙஂ0. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
நொந்ததன் றலையு நோய்மிகுந் துறைவ
பண்டையின் மிகப்பெரி தினைஇ
முயங்குமதி பெரும மயங்கினள் பெரிதே.

எ - து, புலந்த காதற்பரத்தை புலவிதீராது தலைமகன் வாயில்வேண்டி வந்தானென்றது அறிந்த தலைமகள் வாயின்மறுத்தது.

(ப - ரை:) 'பண்டையின்' என்றது, பண்டும் நீ புலவிதீர்த்து முயங்கும் இயல்புடையை. எ - று. 'நாரை............துறைவ' என்றது, நின் ஆற்றாமைக்குப் பரிந்து வாயிலாய்ச்சென்றவர்கள் அவள்வருத்தங்கண்டு மிகவும்

வருந்துகின்றார்க ளென்பதாம்.

(பி - ம்:) சருத். புலர்ந்த கானற்பரத்தை. (க0)

வெள்ளாங்குருகுப்பத்து முற்றிற்று.



## கஎ.—சிறுவெண்காக்கைப் பத்து.



கசுக. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
கருங்கோட்டுப் புன்னைத் தங்குந் துறைவற்குப்
பசந்துநுத லழியச் சாஅய்
நயந்த நெஞ்ச நோய்ப்பா லஃதே.

எ - து, ஒருவழித் தணந்துழி ஆற்றுவிக்குந்தோழிக்குத் தலைமகள் ஆற்றாளாய்ச் சொல்லியது.

(உ - ரை:) 'சிறுவெண்காக்கை.........தங்கும்' என்றது, வரைதற்கு வேண்டுவன முயலாது தன்மனைக்கண்ணே தங்குவான். எ - று. (க)

கசுஉ. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
நீத்துநீ ரிருங்கழி யிரைதேர்ந் துண்டு
பூக்கமழ் பொதும்பர்ச் சேக்குந்
துறைவன் சொல்லோ பிறவா யினவே.

இதுவுமது.

(உ - ரை:) 'துறைவன்சொல்லோ பிறவாயின' என்றது, 'இன்ன நாளுள் வரைவல்' என்றசொற்கள் வேறாயின. எ - று. 'சிறுவெண்காக்கை
எ



.................சேக்கும்' என்றது, வரைவிற்குவேண்டுவன முயலாது தன் கருமஞ்செய்து மனைக்கண்ணே தங்குவான். எ - று.

(பி - ம்:) ஒ. பெருங்கடற்றிரையது. (உ)

கசுங. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
யிருங்கழித் துவலை யொலியிற் றுஞ்சுந்

துறைவன் றுறந்தெனத் துறந்தெ,
னிறையோர் முன்கை நீங்கிய வளையே.

இதுவுமது.

(ப - ரை:) 'சிறுவெண்காக்கை, இருங்கழித் துவலை யொலியிற் றுஞ்சும்' என்றது, ஆண்டுத் தனக்கு இனியவாகக் கூறுவார் மாற்றங்கேட்டு முயற்சியின்றித் தங்குவானென்பதாம். (ரு)

கருச. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
யிருங்கழி மருங்கி னயிரை யாருந்
தண்ணந் துறைவன் றகுதி
நம்மோ டமையா தலர்பயந் தன்றே.

எ - து, தலைமகனுக்குப் புறத்தொழுக்க முளதாகியவழித் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

(ப - ரை:) 'சிறுவெண்காக்கை இருங்கழி மருங்கின் அயிரையாரும்' என்றது, பரத்தையருள்ளும் புல்லியாரை விரும்புவான். எ - று. 'துறைவன் தகுதி நம்மோடமையாது அலர்பயந்தன்றே' என்றது, அவன் தகுதியுடைமை நமக்குத் தீங்குசெய்தலே யன்றித் தனக்கும் அலர்பயந்த தென்பதாம்.

(பி - ம்:) மூ. இருங்கரைமருங்கின். (சு)

கருடு. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
யறுகழிச் சிறுமீ னார மாந்துந்
துறைவன் சொல்லிய சொல்லெ
னிறையே ரெல்வளை கொண்டுநின் றதுவே.

இதுவுமது.

(ப - ரை:) 'துறைவன்சொல்லிய சொல்லெ, னிறையேரெல்வளை கொண்டு நின்றது' என்றது, வளையைக்கொண்டு நின்றது, இப்புறத்தொழுக்கமன்று; முற்காலத்துத் தெளிப்பான் கூறுற்ற சொல். எ - று. (ஏ)

## கஎ.—சிறுவெண்காக்கைப் பத்து.



கருசு. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
வரிவெண் டாலி வலைசெத்து வெரூஉ
மெல்லம் புலம்பற் றேறி
நல்ல வாயின நல்லோள் கண்ணே.

எ - து, வரையாது வந்தொழுகுந் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகள் பசப்பிற்கு வருந்திய தோழி அவனை இயற்பழித்துக் கூறியது.

(ப - ரை:) 'நல்லவாயின நல்லோள்கண்' என்றது, கண்பசந்தன. எ - று. சிறுவெண்காக்கை திரையாற் கரையில் எறடப்பட்ட பலகறைகளை வலைச் சுற்றிற்கோத்த பலகறையென வெரூஉமென்றது, நாம் வரைதல்வேண்டிக் கூறியசொற்களைத் தனக்கு வருத்தஞ்செய்வனவாகக்கொண்டு வெருவுகின்றா னென்பதாம். (சு)

கசுஎ. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
யிருங்கழி யினக்கெடி றாருந் துறைவ
னல்குவன் போலக் கூறி
நல்கா னாயினுந் தொல்கே ளன்னே.

எ - து, பரத்தையிற்பிரிந்த தலைமகன்விட வாயிலாய்வந்தார்க்கு அவன் கொடுமைகூறித் தோழி இயற்பழித்தவழித் தலைமகள் சொல்லியது.

(ப - ரை:) 'தொல்கேளன்' என்றது, நமக்குப் பண்டு கேளாகியதன்மையினையுடையான். எ - று. 'சிறுவெண்காக்கை.........ஆருந்துறைவன்' என்றது, பரத்தையர் பலரையும் தனக்குவரும் வருத்தமறியாது நுகர்வானென்பதாம். (எ)

கசுஅ. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
துறைபடி யம்பி யகமணை யீனுந்
தண்ணந் துறைவ னல்கி
னொண்ணுத லரிவை பாலா ருமே.

எ - து, கொதுமலர் வரைவுவேண்டி விடுத்தமையறிந்த தலைமகள் ஆற்றாளாய்ப் பசியடநிற்புழி, 'இதற்குக் காரணமென்' என்று செவிலி வினவத் தோழி அறத்தொடு நின்றது.

(ப - ரை:) 'துறைபடியம்பியகமணையீனும்' என்றது, யாவர்க்கும் எவ்விடத்தும் தீங்குவாராத துறைவனென அவன்சிறப்புக் கூறியவாறு.

பி - ம்:) மூ. கடற்றிரையது. அகமனை, பாலார்கம்மே. (அ)



கசுகூ. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
ரெள பொன்னிணர் ஞாழன் முனையிற் பொதியவிழ்

புன்னையம் பூஞ்சினைச் சேக்குந் துறைவ
னெஞ்சத் தூண்மை யறிந்து
மொன்செயப் பசக்குந் தோழியென் கண்ணே.

எ - து, காதற்பரத்தையைவிட்டு மற்றொருத்தியுடன் ஒழுகாநின்றதலைமகன் வாயில்வேண்டி விடுத்தழி வாயினேர்தல்வேண்டி நின்கண் பசந்தனகாணென்று முகம்புகு தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

(ப - ரை:) சிறுவெண்காக்கை ஞாழலைவெறுப்பிற் புன்னைச்சினையிற் சேக்குமென்றது, பரத்தையர் மனையில் ஒன்றுவெறுப்பின், ஒன்றின்கண் தங்குதலை யுடையா னென்பதாம்.

(பி - ம்:) மூ. சினைவதியும். (௯)

௧௭0. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
யிருங்கழி நெய்தல் சிதைக்குந் துறைவ
னல்ல னென்றி யாயிற்
பல்லித ழுண்கண் பசத்தன் மற்றெவனோ.

எ - து, தலைமகற்குப் புறத்தொழுக்க முளதாகியவழி வேறுபட்ட தலைமகள், 'அவற்கு அவ்வாறு நிகழ்ச்சியில்லை; நம்மேல் அன்புடையன்' என்று தெளிக்குந்தோழிக்குச் சொல்லியது.

(ப - ரை:) 'சிறுவெண்காக்கை.........சிதைக்கும்' என்றது, தான்பற்றிய பரத்தையருடைய நலம் சிதைப்பா னென்பதாம்.

(பி - ம்:) கருத். அன்புடையனென்ற தோழிக்கு. (௧0)

## சிறுவெண்காக்கைப்பத்து முற்றிற்று.



## ௧௮.—தொண்டிப் பத்து.



௧௭௧. திரைஇமி ழின்னிசை யளைஇ யயலது
முழவிமி ழின்னிசை மறுகுதொ றிசைக்குந்
தொண்டி யன்ன பணைத்தோ
ளொண்டொடி யரிவையென் னெஞ்சுகொண் டோளே.

எ - து, இயற்கைப்புணர்ச்சி புணர்ந்துநீங்குந் தலைமகன் ஆயத்தோடு செல்லும் தலைமகளைக் கண்டு சொல்லியது.

(ப - ரை:) திரையின் ஒலியொடுகலந்து முழவு ஒலிக்கு மென்றது, உடன்செல்கின்ற ஆயத்தார் மகிழ்ச்சியரவமும் உழையாராய் எதிர்வருகின்றார் மகிழ்ச்சியரவமும் கூறினவாறு. (௧)

௧௭௨. ஒண்டொடி யரிவை கொண்டனெ னெஞ்சே
வண்டிமிர் பனித்துறைத் தொண்டி யாங்க
ணுரவுக் கடலொலித் திரையென
விரவி னானுந் துயிலறி யேனே.

எ - து, 'கண்டுயில்கின்றிலை; இதற்குக்காரணமென்' என்றுவினவிய பாங்கற்குத் தலைமகன் சொல்லியது. (௨)

௧௭௩. இரவி னானுந் துயி லறியா
தரவுறு துயர மெய்துப தொண்டித்
தண்ணறு நெய்த னாறும்
பின்னிருங் கூந்த லணங்குற் றோரே.

எ - து, தலைமகன் குறிவழிச்சென்று தலைமகளைக்கண்டபாங்கன் தன்னுள்ளே சொல்லியது.

(ப - ரை:) தொண்டித் தண்ணறு நெய்தல்போல் நாறும் கூந்தலென்றது, சேய்மைக்கண்ணே நாறுதனோக்கி. (௩)

௧௭௪. அணங்குடைப் பனித்துறைத் தொண்டி யன்ன
மணங்கமழ் பொழிற்குறி நல்கின னுணங்கிழைப்
பொலங்கறி பரந்த வுண்க
ணலங்கவிழ் மேனி யசைஇய வெமக்கே.

எ - து, குறிவழிச்சென்று தலைமகளைக் கண்டுவந்தபாங்கன் அவள் நின்றுழி நின்றுளென்று கூறியவழி ஆண்டுச் செல்லக்கருதிய தலைமகன் தன்னுள்ளே சொல்லியது.

(பி - ம்:) மூ. அசையியல். (௪)

௧௭௫. எமக்குநயந் தருளினை யாயிற் பணைத்தோ
ணன்னுத லரிவையொடு மென்மெல வியலி
வந்திசின் வாழியோ மடந்தை
தொண்டி யன்னநின் பண்புபல கொண்டே.

எ - து, பாங்கற்கூட்டக்கூடி நீங்குந் தலைமகன் இனிவருமிடத்து

நின்தோழியோடும் வரவேண்டுமெனத் தலைமகட்குச் சொல்லியது.

(பி - ம்:) மூ. தமக்குநயந்தருளினை. ஒண்ணுதலரிவையொடு. (௫)



கள௬. பண்பும் பாயலுங் கொண்டன டொண்டித்
தண்கமழ் புதுமலர் நாறு மொண்டொடி
யைதமைந் தகன்ற வல்குற்
கொய்தளிர் மேனி கூறுமதி தவறே.

எ - து, தலைமகளும் தோழியும் ஒருங்குநின்றுழிச் சென்றதலைமகன், 'இவள் என்னை இவைகோடற்குக் காரணம் என்' என்று தோழியைவினவியது.

(ப - ரை:) கொண்டனளென்றது, தலைவியையெனக் கொள்க.

(பி - ம்:) மூ. பண்பும்பாலும். கருத். வினயது. (௬)

களஎ. தவறில ராயினும் பனிப்ப மன்ற
விவறுதிரை திளைக்கு மிடுமணை னெடுங்கோட்டு
முண்டக நறுமலர் கமழுந்
தொண்டி யன்னோ டோளுற் றோரே.

எ - து, தலைமகளும் தோழியும் ஒருங்குநின்றுழி 'இவள் என்னைவருத்துதற்குச் செய்த தவறு என்' என்று வினவிய தலைமகற்குத் தோழி நகையாடிச் சொல்லியது.

(ப - ரை:) இதன் இறைச்சி:— நீரருநிலத்து முண்டகநறுமலர் கமழும் தொண்டி யன்னோளென்றது, இவள் நாமணுகி நுகர்தற்கரியள் எ - று. தோளுற்றோ ரென்றது, தோளை எதிர்ப்பட்டோர். எ - று. (எ)

களஅ. தோளுங் கூந்தலும் பலபா ராட்டி
வாழ்த லொல்லுமோ மற்றே செங்கோற்
குட்டுவன் றொண்டி யன்ன
வெற்கண்டு நயந்துநீ நல்காக் காலே.

எ - து, தலைமகன் தோழியை யிரந்து குறையுறுவான் சொல்லியது.

(ப - ரை:) 'செங்கோற்குட்டுவன் தொண்டியன்ன என்' என்றது, தன்னைத் தேறுதற்பொருட்டுத் தன்செப்பம் கூறியவாறு.

(பி - ம்:) மூ. கண்மெயங்கிச்.                                                    (அ)

கஎகூ. நல்குமதி வாழியோ நளிநீர்ச் சேர்ப்ப
அலவன் றாக்கத் துறையிருப் பிறழு
மின்னொளித் தொண்டி யற்றே
நின்னல தில்லா விவள்சிறு நுதலே.

## கக௬.—நெய்தற் பத்து.                                                    ௫௫

எ - து, குறியிடத்துவந்து புணர்ந்துநீங்குந் தலைமகனைத்தோழி எதிர்ப்பட்டு வரைவுகடாயது.

(ப - ரை:) 'அலவன் தாக்கத் துறையிருப் பிறழும்' என்றது, இவ்வொழுக்கம் புறத்தார்க்குப் புலனாகியஞான்று இவள் உயிர்வாழா ளென்பதாம்.                                                    (கூ)

கஅ0. சிறுநனி வரைந்தனை கொண்மோ பெருநீர்
வலைவர் தந்த கொழுமீன் வல்சிப்
பறைதபு முதுகுரு கிருக்குந்
துறைகெழு தொண்டி யன்னவிவ ளலனே.

எ - து, தாழ்த்து வரையக்கருதிய தலைமகனைத் தோழி நெருங்கிக் கடிதின் வரையவேண்டுமெனச் சொல்லியது.

(ப - ரை:) வலைவர்தந்த கொழுமீன் வல்சிக்கண்ணே பறத்தல்கெட்ட முதுகுருகு இருக்குமென்றது, நொதுமலர்க்கு மகட்பேச வந்திருக்கின்ற சான்றோருள ரென்பதாம்.

(பி - ம்:) மூ. சிறுநணி, தொழுமீன்.

கருத். தாழ்ந்துவரைய. கடிதினிவரையவேண்டும். (க0)

இவைபத்தும் சொல்வகையால் தொடர்ச்சிபெறுதலே யன்றிக் கிளவிவகையால் தொடர்ச்சி யுடையவாறும் அறிக.

### தொண்டிப்பத்து முற்றிற்று.



## கக௬.—நெய்தற் பத்து.

௧௮௧. நெய்த லுண்க ணேரிறைப் பணைத்தோட்
பொய்த லாடிய பொய்யா மகளிர்
குப்பை வெண்மணற் குரவை நிறூஉந்
துறைகெழு கொண்க னல்கி
னுறைவினி தம்மவிவ் வழுங்க லூரே.

எ - து, இக்களவொழுக்கம் நெடிதுசெல்லின் இவ்வூர்க்கண் அலர் பிறக்குமென்று அஞ்சியிருந்த தலைவி, 'தலைமகன் வரைந்துகொள்ளத் துணிந்தான்' என்று கூறிய தோழிக்குச் சொல்லியது.



(ப - ரை:) சிறைப்புறம்: 'மகளிர்...........குரவை நிறூஉந் துறைகெழு கொண்கன்' என்றது, மகளிர் தங்காதலரோடாடும் இவ்வூரிடத்துத் தனித்தல் அரிதென்பதாம்.

(பி - ம்:) ௫. அவ்வழுங்கலூரே. (௧)

௧௮௨. நெய்த னறுமலர் செருந்தியொடு விரைஇக்
கைபுனை நறுந்தார் கமழு மார்ப
னருந்திறற் கடவு ளல்லன்
பெருந்துறைக் கண்டிவ ளணங்கி யோனே.

எ - து, தலைமகன் மெலிவுகண்டு தெய்வத்தா லாயிற்றெனத் தமர் நினைந்துழித் தோழி அறத்தொடு நின்றது. (௨)

௧௮௩. கணங்கொ ளருவிக் கான்கெழு நாடன் அகம் - 22
குறும்பொறை நாட னல்வய லூரன்
றண்கடற் சேர்ப்பன் பிரிந்தெனப் பண்டையிற்
கடும்பகல் வருதி கையறு மாலை
கொடுங்கழி நெய்தலுங் கூம்பக்
காலை வரினுங் களைஞரோ விலரே. *

எ - து, வரைவிடைவைத்துப் பிரிந்துழி ஆற்றாளாகிய தலைமகள் மாலைக்குச் சொல்லியது.

(ப - ளா:) 'பண்டையிற் கடும்பகல்வருதி' என்றது, பண்டு வருங்காலத்திலே வந்தாற்போலப் பிறர்க்குத்தோன்றக் கடும்பகற்கண்ணே வாராநின்றாய். எ - று.

(பி - ம்:) மூ. வருந்திக் கையறு மாறு, மாலை நெய்தலுங் கூம்ப. (௫)

கஅச. நெய்த லிருங்கழி நெய்த னீக்கி
மீனுண் குருகிளங் கான லல்குந்
கடலணிந் தன்றவ ரூரே
கடலினும் பெரிதெமக் கவருடை நட்பே.

எ - து, வாயில்வேண்டிவந்தார் தலைமகன் அன்புடைமை கூறியவழி வாயின்மறுக்குந்தலைமகள் சொல்லியது.

(ப - ளா:) நெய்தனீக்கி மீனுண்குருகு இளங்கானலில் அல்குமென்றது, பொதுமகளிரிடத்து ஊடனீக்கி இன்பநுகர்ந்து ஆண்டுத் தங்குவானென்பதாம்.

(பி - ம்:) மூ. இருங்கழி. குருகினங்கானலல்கும். (௪)

---

* இச்செய்யுளின் முதலிரண்டடி சிலபிரதிகளிற் காணப்படவில்லை.

## கக.—நெய்தற் பத்து. ருள

கஅரு. அலங்கிதழ் நெய்தற் கொற்கை முன்றுறை
யிலங்குமுத் துறைக்கு மெயிறுகெழு துவர்வா
யரம்போ ழவ்வளைக் குறுமக
ளரம்பார்த் தன்ன தீங்கிள வியளே.

எ - து, 'ஆயமகளிருள் நின்னால் நயக்கப்பட்டாள் யாவள்' என வினவிய தோழிக்குத் தலைமகன் சொல்லியது.

(பி - ம்:) மூ. அலங்கிறை நெய்தல். (௬)

கஅசு. நாரை நல்லினங் கடுப்ப மகளிர்
நீர்வார் கூந்த லுளரு துறைவ
பொங்குகழி நெய்த லுறைப்ப வித்துறைப்
பல்கால் வருதந் தேரெனச்
செல்லா தீமோ வென்றனள் யாயே.

எ - து, பகற்குறிக்கண்வந்து நீங்குந்தலைமகனைத் தோழி செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது.

(ப - ரை:) காரையினங்கடுப்ப மகளிர் நீர்வார்கூந்தலை உளருந்துறைவ வென்றது, தம்மிடத்துக் குற்றம் நீக்கும் மகளிரையுடைய துறைவ. எ - று.

(பி - ம்:) மூ. சொல்லாதீமோ.

கஅஎ. நொதுமலாளர் கொள்ளா ரிவையே
எம்மொடு வந்து கடலாடு மகளிரு
நெய்தலம் பகைத்தழைப் பாவை புனையா
ருடலகங் கொள்வோ ரின்மையிற்
றொடலைக் குற்ற சிலபூ வினரே.

எ - து, தோழி கையுறை மறுத்தது.

(ப - ரை:) 'நொதுமலாளர் கொள்ளாரிவையே' என்றது, நீயல்லாதாரில் இப்பூப்பறிப்பாரில்லை. எ - று. எம்மொடு வந்து கடலாடுமகளிரும் இந்நெய்தற்றழையாற் பாவைபுனையார்; தொடலைதொடுப்பாரும் இதனிற் சிலபூக் கொள்வதல்லது இப்பூத்தன்னையே தொடலையாகப் புனைவாரில்லை. எ - று.

(பி - ம்:) மூ. எம்மொடுவந்த, எம்மொடுகலந்த, மகளிர். (எ)
அ



கஅஅ. இருங்கழிச் சேயிறு வினப்புள் ளாருங்
கொற்கைக் கோமான் கொற்கையம் பெருந்துறை
வைகறை மலரு நெய்தல் போலத்
தகைபெரி துடைய காதலி கண்ணே.

எ - து, விருந்துவாயிலாகப் புகுந்த தலைமகன் தலைவி இல்வாழ்க்கைச் சிறப்புக்கண்டு மகிழ்ந்து சொல்லியது.

(ப - ரை:) விடியற்காலை மலரும் நெய்தலைக் கண்ணிற்கு உவமையாகக் கூறிற்று, வந்தபொழுதே மலர்ந்த சிறப்புநோக்கி யெனக்கொள்க. 'இருங்கழிச் சேயிறு இனப்புள் ளாரும்' என்றது, விருந்தினர்நுகர்ச்சி கூறியவாறெனக் கொள்க.

(பி - ம்:) மூ. வைகறைவருநெய்தல். (அ)

கஅகூ. புன்னை நுண்டா துறைத்தரு நெய்தல்
பொன்படு மணியிற் பொற்பத் தோன்று
மெல்லம் புலம்பன் வந்தென
நல்ல வாயின தோழியென் கண்ணே.

எ - து, வரைவிடைவைத்துப் பிரிந்த தலைமகன் வரைவான் வந்துழிக் கண்டு உவகையோடு வந்த தோழி, 'நின் கண்மலர்ச்சிக்குக் காரணம் என்' என்றுவினவிய தலைவிக்குச் சொல்லியது.

(ப - ரை:) 'புன்னை நுண்டாது உறைத்தருநெய்தல் பொன்படுமணியிற் றோன்றும்' என்றது, நின்குடிப்பிறப்புப் பண்டையினும் சிறத்தற்குக் காரணமாயிற்றென்று அவன்வரைவுகூறியவாறும்.

(பி - ம்:) கருத். நகையொடுவந்த. (கூ)

ககூ0. தண்ணறு நெய்தற் றளையவிழ் வான்பூ
வெண்ணெ லரிநர் மாற்றின ரறுக்கு
மெல்லம் புலம்பன் மன்றவெம்
பல்லித ழுண்கண் பனிசெய் தோனே.

எ - து, தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது.

(ப - ரை:) அரிவோர் நெய்தற்பூவைநீக்கி வெண்ணெல்அரியுமென்றது, தனக்கு அடுத்தது செய்தலன்றிப் பிறர்க்கு வருத்தஞ் செய்யானெனத் தலைமகன் குணம் கூறியவாறும்.

(பி - ம்:) மூ. ஒண்ணெல். (க0)

## நெய்தற்பத்து முற்றிற்று.





## உ0.—வளைப் பத்து.



கககூக. கடற்கோடு செறிந்த வளைவார் முன்கைக்
கழிப்பூத் தொடர்ந்த விரும்பல் கூந்தற்
கானன் ஞாழற் கவின்பெறு தழையள்
வரையர் மகளிரி னரியளென்
னிறையரு நெஞ்சங் கொண்டொளித் தோளே.

எ - து, 'நின்னாற் காணப்பட்டவள் எவ்விடத்து எத்தன்மையள்' என்று வினவிய பாங்கற்குத் தலைமகன் கூறியது.

(பி - ம்:) மூ. மயிர்வார்முன்கை. கொண்டொழித்தோளே. (க)

கககூஉ. கோடுபுலங் கொட்பக் கடலெழுந்து முழங்கப்
பாடிமிழ் பனித்துறை யோடுகல முகைக்குந்
துறைவன் பிரிந்தென நெகிழ்ந்தன
வீங்கின மாதோ தோழியென் வளையே.

எ - து, வரைவிடைவைத்துப் பிரிந்த தலைமகன்வந்துழித் தலைவி முனிந்துகூறுவாள்போலத் தன்மெலிவு நீங்கினமை தோழிக்குச் சொல்லியது.

(ப - ரை:) 'கோடுபுலம் கொட்பக் கடலெழுந்து முழங்கப் பாடு இமிழ் பனித்துறை ஓடுகலமுகைக்கும்' என்றது, நொதுமலர் அகல நம்சுற்றத்தார் மகிழ அலர்கூறும் அயலார்சிதைய அவர்தேர் வந்ததென்பதாம். (உ)

கககூங. வலம்புரி யுழுத வார்மண லடைகரை
யிலங்குகதிர் முத்த மிருள்கெட விமைக்குந்
துறைகெழு கொண்கநீ தந்த
வறைபுனல் வால்வளை நல்லவோ தாமே.

எ - து, வரையாது வந்தொழுகுந் தலைமகன் தலைமகட்கு வளைகொண்டு வந்து கொடுத்துழி, 'பண்டைவளை போலாவாய் மெலிந்துழி நீங்கா நலனுடையவோ இவை' எனத் தலைமகள் மெலிவுசொல்லித் தோழி வரைவுகடாயது.

(ப - ரை:) முத்தம் இருணீங்க இமைக்குந்துறைவனாதலின், இவட்கு வருகின்ற தீங்கைக் கடிதின் நீக்கி வரைந்துகொளவேண்டுமென்பதாம்.

(பி - ம்:) மூ. கொண்கனீ. கருத். பண்டையிவள்வளை. ப. வரைந்து கொளவேணும். (ங)



கககூச. கடற்கோ டறுத்த வரம்போ ழவ்வளை

யொண்டொடி மடவரற் கண்டிகுங் கொண்க
நன்னுத லின்றுமால் செய்தெனக்
கொன்னொன்று கடுத்தன னன்னையது நிலையே.

என்-து, பகற்குறிக்கண் வந்துநீங்குந் தலைமகனைத் தோழி எதிர்ப்பட்டு மனைக்கண் நிகழ்ந்தது கூறிச் செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது.

(பி-ம்:) கருத். செறிப்பறிஇவரைவு. (௪)

கக௫. வளைபடு முத்தம் பரதவர் பகருங்
கடல்கெழு கொண்கன் காதன் மடமகள்
கெடலருந் துயர நல்கிப்
படலின் பாயல் வௌவி யோளே.

என்-து, வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிந்த தலைமகன் தனித்துறைய ஆற்றுனுச் சொல்லியது.

(உ-ரை:) பெறுதற்கரியமுத்தைப் பரதவர்விற்கும் கடல்கெழுகொண்கனென்றது, அவர்கள் தாராதாரல்லர்; யாம் அவர்களுக்கு வேண்டுவனகொடுத்துக் கொள்ளமாட்டாது வருந்துகின்றேமென்பதாம்.

(பி-ம்:) மூ. வறுவியோளே. (௫)

கக௬. கோடீ ரெல்வளைக் கொழும்பல் கூந்த
லாய்தொடி மடவரல் வேண்டுதி யாயிற்
றெண்கழிச் சேயிறாப் படூஉந்
தண்கடற் சேர்ப்ப வரைந்தனை கொண்மோ.

என்-து, குறைமறுக்கப்பட்டதலைமகன் பின்னும் குறைவேண்டியவழித் தோழி சொல்லியது.

(உ-ரை:) தெண்கழிச் சேயிறாப்படூஉஞ் சேர்ப்பவென்றது, நினைத்தன அகப்படுத்தும்துறைவ, என்-று.

(பி-ம்:) மூ. கொழுமணிக்கூந்தல். (௬)

கக௭. இலங்குவளை தெளிர்ப்ப வலவ னாட்டி
முகப்புதை கதுப்பின ளிறைஞ்சிநின் றோளே
புலம்புகொண் மாலை மறைய
நலங்கே ழாக நல்குவ ளெனக்கே.

என்-து, தலைமகன் இடந்தலைப்பாட்டின்கண் தலைவியது நிலைமைகண்டு சொல்லியது.

(பி-ம்:) மூ. கதுப்பின ளாயத்து நின்றோளே. (௭)

௧௯அ. வளையணி முன்கை வாலெயிற் றமர்நகை
யிளைய ராடுந் தளையவிழ் கானற்
குறுந்துறை வினவி நின்ற
நெடுந்தோ ளண்ணற் கண்டிகும் யாமே.

எ - து, பரத்தையர்மனைக்கட் பன்னாட்டங்கிப் பின்பு ஆற்றாமையே வாயிலாக வந்த தலைமகனை எதிர்ப்பட்டதோழி தலைமகட்குச் சொல்லியது.

(ப - ரை:) குறுந்துறை வினவிநின்ற நெடுந்தோளண்ணலென்றது, களவுக்காலத்து நிகழ்ந்ததனைக் கூறிற்று, தலைமகள் புலவி நீங்குதற்கும் யான் நெடுநாட்பிரிந்தமை கூறுகின்றவாறென்று அவன் வருந்துதற்குமெனக் கொள்க.

(பி - ம்:) மூ. வளையறை. இன்னகை. விருந்தெனவினவி. நெடுந்தேரண்ணல். (அ)

௧௯௯. கானலம் பெருந்துறைக் கலிதிரை திளைக்கும்
வானுயர் நெடுமணன் மேறியா ணுது
காண்கம் வம்மோ தோழி
செறிவளை நெகிழ்த்தோ னெறிகட லூரே.

எ - து, தலைமகன் ஒருவழித் தணந்துழி ஆற்றாளாகிய தலைமகளை ஆற்றுவிக்குந்தோழி சொல்லியது.

(பி - ம்:) மூ. நெடுவரையேறி. (௯)

௨௦௦. இலங்குவீங் கெல்வளை யாய்நுதல் கவினப்
பொலந்தேர்க் கொண்கன் வந்தன னினியே
விலங்கரி நெடுங்கண் ஞெகிழ்மதி
நலங்கவர் பசலையை நகுக நாமே.

எ - து, உடன்போக்குத்துணிந்தவழி அதற்கு இரவின்கண் தலைமகன் வந்ததறிந்ததோழி தலைமகளைப் பாயலுணர்த்திச் சொல்லியது.

(பி - ம்:) மூ. நுதல்கவின்பெற. கொண்கனும். நெடுங்கண்ணனந்த தீர்மதி. நலங்கிளர். நகுகம்யாமே. (௧௦)

வளைப்பத்து முற்றிற்று.



நெய்தல் முற்றிற்று.

# ௩.—குறிஞ்சி.

## ௨௧.—அன்னாய்வாழிப் பத்து.

௨0௧. அன்னாய் வாழிவேண் டன்னை யென்னை
தானு மலைந்தா னெமக்குந் தழையாயின
பொன்வீ மணியரும் பினவே
யென்ன மரங்கொலவர் சார லவ்வே.

எ - து, நொதுமலர் வரைவின்கட் செவிலிகேட்குமாற்றால் தலைமகள் தோழிக்கு அறத்தொடுநிலை குறித்து உரைத்தது.

(பி - ம்:) மூ. தரினுமலைந்தான். (௧)

௨0௨. அன்னாய் வாழிவேண் டன்னை நம்மூர்ப்
பார்ப்பனக் குறுமகப் போலத் தாமுங்
குடுமித் தலைய மன்ற
நெடுமலை நாட னூர்ந்த மாவே.

எ - து, தலைமகன் வரைதல் வேண்டித் தானேவருகின்றமை கண்ட தோழி உவந்தவுள்ளத்தளாய்த் தலைமகட்குக் காட்டிச் சொல்லியது. (௨)

௨0௩. அன்னாய் வாழிவேண் டன்னைநம் படப்பைத்
தேன்மயங்கு பாலினு மினிய வவர்நாட்
டுவலைக் கூவற் கீழ
மானுண் டெஞ்சிய கலிழி நீரே.

எ - து, உடன்போய் மீண்டதலைமகள், 'நீ சென்றநாட்டு நீர் இனிய வல்ல; நீ எங்ஙனநுகர்ந்தாய்' எனக் கேட்டதோழிக்குக் கூறியது.

(பி - ம்:) கருத். நுகர்ந்தவாறெனக்கேட்ட. (௯)

உ0௪. அன்னாய் வாழிவேண் டன்னையஃ தெவன்கொல்
வரையர மகளிரி னிரையுடன் குழீஇப்
பெயர்வுழிப் பெயர்வுழித் தவிராது நோக்கி
நல்ல னல்ல னென்ப
தீயேன் றில்ல மலைகிழ வோர்க்கே.

## உக.—அன்னாய்வாழிப் பத்து. ௬௩

எ - து, வரையாது வந்தொழுகுந் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

(பி - ம்:) மூ. மகளிர்நிரை. மலைகிழவோற்கே. (௰)

உ0௫. அன்னாய் வாழிவேண் டன்னையென் றோழி
நனிநா ணுடைய ளின்னு மஞ்சு
பொலிவெள் ளருவி யோங்குமலை நாடன்
மலர்ந்த மார்பிற் பாயற்
றுஞ்சிய வெய்ய ளோமே.

எ - து, நொதுமலர் வரைவுவேண்டிவிட்டுழித் தலைமகட்கு உளதாகிய வருத்தநோக்கி, 'இவள் இவ்வாறுதற்குக் காரணம் என்னை' என்று வினவிய செவிலிக்குத் தோழி அறத்தொடு நின்றது.

(பி - ம்:) மூ. அன்னை தோழி. நின்னினுமஞ்சும்.
மார்பிற் பாயிற், றுஞ்சி வெய்யள். (௫)

உ0௬. அன்னாய் வாழிவேண் டன்னை யுவக்காண்
மாரிக் குன்றத்துக் காப்பா ளன்ன
தூவலி னனைந்த தொடலை யொள்வாட்
பாசி சூழ்ந்த பெருங்கழற்
றண்பனி வைகிய வரிக்கச் சினனே.

எ - து, இரவுக்குறிக்கண் தலைமகன்வந்து குறியிடத்து நின்றமை யறிந்ததோழி தலைமகட்குச் சொல்லியது.

(பி - ம்:) மூ. காப்பானன்ன. பாசிதூர்ந்த. (௬)

உ0எ. அன்னாய் வாழிவேண் டன்னை நன்று
முணங்கல கொல்லோநின் றினையே யுவக்கா

ணிணம்பொதி வழுக்கிற் றேன்று
மழைதலை வைத்தவர் மணிநெடுங் குன்றே.

எ - து, 'மழையின்மையால் தினை உணங்கும்; விளையமாட்டா; புனங் காப்பச் சென்று அவரை எதிர்ப்படலாமென்று எண்ணியிருந்தஇது கூடா தாயிற்று' என வெறுத்திருந்த தலைமகட்குத் தோழி சொல்லியது.

(பி - ம்:) ௸. அன்னைகன்றும். ணம்பொதி.

கருத். விளையமாட்டாதபுனம். எதிர்ப்பட்டாலாமென்று.



உ0அ. அன்னாய் வாழிவேண் டன்னை கானவர்
கிழங்ககழ் நெடுங்குழி மல்க வேங்கைப்
பொன்மலி புதுவீத் தாஅ மவர்நாட்டு
மணிநிற மால்வரை மறைதொறிவ
ளறைமலர் நெடுங்க ணார்ந்தன பனியே.

எ - து, செவிலிக்கு அறத்தொடுநின்றதோழி அவளால் வரைவுமாட்சி மைப்பட்டபின்பு, 'இவள் இவ்வாறுபட்ட வருத்தமெல்லாம் நின்னிற்றீர்ந் தது' என்பது குறிப்பிற்றேன்ற அவட்குச்சொல்லியது.

(ப - ரை:) கிழங்ககழ் குழிநிறைய வேங்கைமலர் பரக்குமென்றது, கொள்வார்க்குப் பயன்பட்டுத் தமக்குவந்த குறையைத் தம்புகழ் நிறைக்கும் பெருமையுடையாரென்பதாம். (அ)

உ0௯. அன்னாய் வாழிவேண் டன்னை நீமற்
றியானவர் மறத்தல் வேண்டுதி யாயிற்
கொண்ட லவ்வரைப் பூவி னன்ன
வெண்டலை மாமழை சூடித்
தோன்றலா னாதவர் மணிநெடுங் குன்றே.

எ - து, வரைவிடைவைத்துப் பிரிவின்கண் அவனை நினைவுவிடாது ஆற்றுளாகியவழி, 'சிறிதுமறந்து ஆற்றவேண்டும்' என்றதோழிக்குத் தலை மகள் கூறியது.

(ப - ரை:) 'வெண்டலை.........லானது' என்றது, மழைபெய்தற்குக் கால்வீழ்ந்த இருட்சியால் மறையப்பெறாது விளங்கித் தோன்றுதலைநோக்கி

யெனக் கொள்க. (கூ)

உகல. அன்னாய் வாழிவேண் டன்னைநம் படப்பைப்
புலவுச்சேர் துறுகல் லேறி யவர்நாட்டுப்
பூக்கெழு குன்ற நோக்கி நின்று
மணிபுரை வயங்கிழை நிலைபெறத்
தணிதற்கு முரித்தவ ணூற்ற நோயே.

எ - து, காப்புமிகுதிக்கண் தலைமகள் மெலிவுகண்டு தெய்வத்தினாயிற் றென்று வெறியெடுப்புழித் தோழி செவிலிக்கு அறத்தொடுநின்றது.

(ப - ரை:) 'புலவுச்சேர் துறுகல்' என்றது, யாவும் தெய்வத்தினாயின வென்று மறிமுதலாயினகொன்று புலவுநாறும் நக்குன்றென்பதாம். (கல)

அன்னாய்வாழிப்பத்து முற்றிற்று.

உஉ.—அன்னாய்ப் பத்து. கூ௫

உஉ.—அன்னாய்ப் பத்து.

உகக. நெய்பொடு மயக்கிய வுழுந்துநூற் றன்ன
வயலையஞ் சிலம்பின் றலையது
செயலையம் பகைத்தழை வாடு மன்னாய்.

எ - து, தலைமகன் ஆற்றாமைகண்டு கையுறையேற்றதோழி தலைமகள் குழையேற்கவேண்டிக் கூறியது.

(பி - ம்:) மூ. உழுந்து தூற்றன்ன. (க)

உகஉ. சாந்த மரத்த பூழி லெழுபுகை
கூட்டுவிரை கமழு நாட
னறவற் றெவனோ நாமகல் வன்னாய்.

எ - து, வரைவெதிர்கொள்ளார் தமர் அவன்மறுத்தவழித் தோழி செவிலிக்கு அறத்தொடுநின்றது.

(ப - ரை:) சாந்தமரத்தின் இடைநிலத்து உளவாகிய அகில்சுடுபுகை அச் சந்தனப்பூநாற்றத்தோடு கமழுநாடனென்றது, தனக்கு வந்த வருத்தம் பாராது தனக்குத்துணையாயினார் நலத்தொடுங்கூடி எல்லார்க்கும் பயன்பட

ஒழுகும் ஒழுக்கத்தை யுடையானென்பதாம்.

(பி - ம்:) கருத். தமர்மறுத்தவழி. (உ)

உகங. நறுவடி மாஅத்து மூக்கிறு புதிர்ந்த
வீர்ந்தண் பெருவடுப் பாலையிற் குறவ
ருறைவீ யாலியிற் றொகுக்குஞ் சாரல்
மீமிசை நன்னாட் டவர்வரின்
யானுயிர் வாழ்தல் கூடு மன்னோ.

எ - து, 'வரைவொடுவருதலைத் துணிந்தான்' என்பது தோழிகூறக் கேட்ட தலைமகள் சொல்லியது.

(ப - ரை:) மாவின்மூக்கு இற்று உதிர்ந்த வடுக்களை ஆலிபோலத் தொகுக்கும் நாட்டையுடையாரென்றது, விரும்புவனவற்றுக்குத் தாமாக முயலாது பெற்றுழிப்பேணும் இயல்பையுடையார். எ - று.

(பி - ம்:) மூ. கூடலாமன்னாய். (௩)

க



உகச. சாரற் பலவின் கொழுந்துணர் நறும்பழ
மிருங்கல் விடரளை வீழ்ந்தென வெற்பிற்
பெருந்தே னிறாஅல் கீறு நாடன்
பேரமர் மழைக்கண் கலிழத்தன்
சீருடை நன்னாட்டுச் செல்லு மன்னாய்.

எ - து, தலைமகன், 'ஒருவழித்தணப்பல்' என்றுகூறியவதனை அவன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குத் தோழிசொல்லியது.

(ப - ரை:) பலவின்பழம் பிறர்க்குப்பயன்படாது கல்லளையில் வீழ்கின் றுழி அவ்விடத்துளதாகிய தேனிறாலினையும் சிதைக்குமென்றது, தன்னாற் பெற்றநலம் எங்கள் இயற்கைநலத்தினையும் சிதைக்கின்றதென்பதாம். இது கேட்டுக் கடிதின்வரைவானாவது பயன்.

(பி - ம்:) மூ. வீழ்ந்தன. இறாலொடுகீறுநாடன். (௪)

உகரு. கட்டளை யன்ன மணிநிறத் தும்பி
பிட்டுப குயின்ற துறைவயிற் றொலீஇயர்
தட்டைத் தண்ணுமைப் பின்ன ரியவர்

நீங்குழ லாட்பளி னினிய விமிரும்
புதல்மலர் மாலையும் பிரிவோ
ரதனினுங் கொடிய செய்குவ ரன்னாய்.

எ - து, இரவுக்குறிநயந்த தலைமகள் பகற்குறிக்கண் வந்து நீங்குந்தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லியது. (௫)

உகா. குறுங்கை யிரும்புலிக் கோள்வ லேற்றை
நெடும்புதற் கானத்து மடப்பிடி யீன்ற
நடுங்குநடைக் குழவி கொளீஇய பலவின்
பழந்தூங்கு கொழுநிழ லொளிக்கு நாடற்குக்
கொய்திடு தளிரின் வாடிநின்
மெய்பிறி தாதல் வெவ்வெ னன்னாய்.

எ - து, வரைவுநீட ஆற்றாளாகிய தலைமகட்குத் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிகூறியது.

(ப - ரை:) புலியேற்றை பிடியீன்றகுழவியைக் கொள்ளவேண்டிக் காலம்பார்த்து மறைந்திருக்கும்நாடனென்றது, தன்வஞ்சனையாலே நின் பெண்மையை வௌவுகின்றானென்பதாம்.

(பி - ம்:) மூ. ஒலிக்குநாடு. (௬)

## உஉ.—அன்னாய்ப் பத்து. ௬௭

உகஎ. பெருவரை வேங்கைப் பொன்மரு ணறுவீ
மானினப் பெருங்கிளை மேய லாருங்
கானக நாடன் வரவுமிவண்
மேனி பசப்ப தெவன்கொ லன்னாய்.

எ - து, வரைவிடைவைத்துப் பிரிந்த தலைமகன்மீட்சியுணர்ந்ததோழி ஆற்றாளாகியதலைமகட்குச் சொல்லியது.

(ப - ரை:) இவணென்றது, இவ்விடத்து. எ - று. வேங்கைப்பூவை மானினமாருமென்றது, அவன்மனைப்பெருஞ்செல்வம் நின்கிளையாகிய நாங்களும் நின்னோடு நுகர்வேமென்பதாம்.

(பி - ம்:) மூ. பசப்பதைவது. (௭)

உகஅ. நன்மனை நுருவத்த பன்னாறு நாடு

மயிர்வார் முன்கை வளையுஞ் செறாஅடங்
களிறுகோட் பிழைத்த கதஞ்சிறந் தெழுபுலி
யெழுதரு மழையிற் குழுமும்
பெருங்க லாடன் வருங்கொ லன்னாய்.

எ - து, தலைமகன் வரைவுவேண்டிவிடத் தமர் மறுத்துழி அதுகேட்டு, 'இஃது என்னாங்கொல்' என்று ஆற்றாளாகிய தலைமகட்குத் தோழி தனக்கு நற்குறிசெய்யக்கண்டு, 'கடிதின்வந்து வரைவான்' எனச்சொல்லியது.

(ப - ரை:) தன்னாற்கொள்ளப்பட்ட களிறுதப்பி[illegible]தற்குப் புலி கதஞ்சிறந்து குழுமுமென்றது, நினைத்தனவற்றிற்குக் குறைவரின் அதற்கு வெகுண்டுமுடிப்பான். எ - று.

(பி - ம்:) மூ. வளையுஞ்செற்றும். கருத். வரைவு வேண்டியவிடத் துத் தமர். (அ)

உக௯. கருங்கால் வேங்கை மாத்தகட் டொள்வீ
யிருங்கல் வியலறை வரிப்பத் தாஅம்
நன்மலை நாடன் பிரிந்தென
வொண்ணுதல் பசப்ப தெவன்கொ லன்னாய்.

எ - து, வரைவிடைவைத்துப்பிரிந்த அணுமைக்கண்ணே ஆற்றாளாகிய தலைமகட்குத் தோழிகூறியது.

(ப - ரை:) வேங்கைமலர் கல்லறையிலே பரக்குநாடனென்றது, நம் பொல்லாவொழுக்கமறைய நல்லொழுக்கம் நமக்கு உதவும் நன்மையையுடையானென்பதாம்.

(பி - ம்:) மூ. தாஅய. (௯)



உஉ0. அலங்குமழை பொழிந்த வகன்க ணருவி
யாடுகழை யடுக்கத் திழிதரு நாடன்
பெருவரை யன்ன திருவிறல் வியன்மார்பு
முயங்காது கழிந்த நாளிவண்
மயங்கிதழ் மழைக்கண் கலிழு மன்னாய்.

எ - து, கொதுமலர்வரைவின்கண் தோழி செவிலிக்கு அறத்தொடுநின்றது.

(ப - ரை:) இவண்மேல்வைத்த தண்ணளி நம்மிடத்தும்வந்து இடையறுது ஒழுகும். எ - று. (க0)

அன்னாய்ப்பத்து முற்றிற்று.



## உ௩.—அம்மவாழிப் பத்து.



உ௨௧. அம்ம வாழி தோழி காதலர்
பாவை யன்னவென் னாய்கவின் றொலைய
நன்மா மேனி பசப்பச்
செல்வ லென்பதம் மலைகெழு நாடே.

எ - து, 'ஒருவழித்தணந்து வரைதற்குவேண்டுவன முடித்துவருவல்' என்று தலைமகன் கூறக்கேட்ட தலைமகள் அவன் சிறைப்புறத்தானாய்க் கேட்பத் தோழிக்குச் சொல்லியது.

(ப - ரை:) கடிதின்வரைதல்பயன்.

(பி - ம்:) மூ. செல்வனென்ப. (௧)

உ௨௨. அம்ம வாழி தோழி நம்மூர்
நளிந்துவந் துறையு நறுந்தண் மார்ப
னிவணினி வாரா மாறுகொல்
சின்னிரை யோதியென் னுதல்பசப் பதுவே.

எ - து, குறியிரண்டன்கண்ணும்வந்து ஒழுகுந்தலைமகன் இடையிட்டு வந்து சிறைப்புறத்துநின்றுழி, 'நின்னுதல் பசத்தற்குக்காரணம் என்னை' என்றதோழிக்குத் தலைமகள் சொல்லியது.

(பி - ம்:) மூ. மார்வன், (௨)

உ௨௩. அம்ம வாழி தோழி நம்மலை
வரையா மிழியக் கோட னீடக்
காதலர்ப் பிரிந்தோர் கையற நலியுந்
தண்பனி வடந்தை யச்சிர
முந்துவந் தனர்நங் காத லோரே.

எ - து, வரைவிடைவைத்துப் பிரிந்ததலைமகன் குறித்தபருவத்திற்கு முன்னே வருகின்றமையறிந்ததோழி தலைமகட்கு மகிழ்ந்துசொல்லியது.

(பி - ம்:) மூ. அற்சிரம். அர்ச்சிரம். (௩)

உ௨௪. அம்ம வாழி தோழி நம்மலை
மணிநிறங் கொண்ட மாமலை வெற்பிற்
றுணிநீ ரருவி நம்மோ டாட
லெளிய மன்ற வைர்க்கினி
யரிய வாகுதன் மருண்டனென் யானே.

எ - து, இற்செறிப்புணர்ந்ததலைமகள் ஆற்றாளாய்த் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லியது. (௪)

உ௨௫. அம்ம வாழி தோழி பைஞ்சுனைப்
பாசடை நிவந்த பனிமலர்க் குவளை
யுள்ளகங் கமழுங் கூந்தன் மெல்லிய
லேரி யொண்ணுதல் பசத்த
லோரார் கொன்னங் காத லோரே.

எ - து, மெலிவுகூறி வரைவுகடாவக்கேட்ட தலைமகன் தான் வரைதற் பொருட்டால் ஒருவழித்தணந்து நீட்டித்தானாக, ஆற்றாளாகியதலைமகட்குத் தோழி கூறியது. (௫)

உ௨௬. அம்ம வாழி தோழி நம்மலை
நறுந்தண் சிலம்பி னறுகுலைக் காந்தட்
கொங்குண் வண்டிற் பெயர்ந்து புறமாறிநின்
வன்புடை விறற்கவின் கொண்ட
வன்பி லாளன் வந்தன னினியே.

எ - து, வரைவிடைவைத்துப் பிரிந்த தலைமகன் நீட்டித்து வந்துழித் தோழி தலைமகட்குச்சொல்லியது.

(பி - ம்;) மூ. ,வனப்புடை,                                                    (௬)



௨௨௭. அம்ம வாழி தோழி நாளு
நன்னுதல் பசப்பவு நறுந்தோண் ஞெகிழவு
மாற்றலம் யாமென மதிப்பக் கூறி
நப்பிரிந் துறைந்தோர் மன்றநீ
விட்டனை யோவவ ருற்ற சூளே.

எ - து, ஒருவழித்தணந்துவந்ததலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குத் தோழி சொல்லியது.

(பி - ம்;) மூ. தோணெகிழவும்,                                                    (௭)

௨௨௮. அம்ம வாழி தோழி நம்மூர்
நிரந்திலங் கருவிய நெடுமலை நாட
னிரந்து குறையுறுஅன் பெயரி
னென்னு வதுகொனம் மின்னுயிர் நிலையே.

எ - து, தலைமகன் வரைவுவேண்டிவிடத் தமர் மறுத்தழி அவர் கேட்கு மாற்றால் தலைமகட்குச்சொல்லுவாளாய்த் தோழி அறத்தொடுநின்றது.

(ப - ரை:) ‘நிரந்து இலங்கு அருவிய நெடுமலைநாடன்’ என்றது, சேர்ந்தாருடன் இடையறாத நட்பையுடையான். எ - று.                                                    (அ)

௨௨௯. அம்ம வாழி தோழி நாமழப்
பன்னாள் பிரிந்த வறனி லாளன்
வந்தன னோமற் றிரவிற்
பொன்போல் விறற்கவின் கொள்ளுநின் னுதலே.

எ - து, வரைவிடைவைத்துப்பிரிந்த தலைமகன் மீண்டானென்பது கேட்டுத் தலைமகட்கு எய்திய கவினைத் தோழி தான் அறியாதாள்போன்று அவளை வினவியது.                                                    (௯)

௨௩0. அம்ம வாழி தோழி நம்மொடு
சிறுதினைக் காவல னாகிப் பெரிதுநின்
மென்றோண் ஞெகிழவுந் திருநுதல் பசப்பவும்
பொன்போல் விறற்கவின் றொலைத்த
குன்ற நாடற் கயர்வர்நன் மணனே.

எ - து, தலைமகன் வரைவுவேண்டித்தமரைவிடுத்தழி மறுப்பர்கொல்லோ வென்று அச்சமுறுகின்ற தலைவிக்குத் தோழி சொல்லியது.                                                    (௧0)

அம்மவாழிப்பத்து முற்றிற்று.





## உ௪.—தெய்யோப் பத்து.



உ௪க. யாங்குவல் லுநையோ வோங்கல் வெற்ப
விரும்பல் கூந்தற் றிருந்திழை யரிவை
திதலை மாமை தேயப்
பசலை பாயப் பிரிவு தெய்யோ.

எ - து, ஒருவழித் தணந்துவந்த தலைமகற்குத் தோழிகூறியது.

(பி - ம்:) மூ. வல்லுனையோ. வல்லினையோ. (க)

உ௪உ. போதார் கூந்த லியலணி யழுங்க
வேதி லாளனை நீபிரிந் ததற்கே
யழலவிர் மணிப்பூ ணனையப்
பெயலா னாவென் கண்ணே தெய்யோ.

எ - து, ஒருவழித் தணந்துவந்த தலைமகன், 'நான்பிரிந்தநாட்கண் நீர் என்செய்தீர்' எனக்கேட்கத் தோழி அவற்குச் சொல்லியது.

(பி - ம் :) மூ. ஏதிலாளனே. (உ)

உ௪௩. வருவை யல்லை வாடைநனி கொடிதே
யருவரை மருங்கி னாய்மணி வரன்றி
யொல்லென விழிதரு மருவியின்
கல்லுடை நாட்டுச் செல்ல றெய்யோ.

எ - து, 'ஒருவழித் தணந்து வரையவேண்டும்' என்ற தலைமகற்குத் தோழி சொல்லியது.

(ப - ரை:) 'ஆய்மணிவரன்றி ஒல்லென இழிதருமருவியின்கல்லுடை நாட்டு' என்றது, 'செல்லின் வரைதற்கு வேண்டுவன கொண்டு வருவாயாக' என்று உணர்த்தியவாறு.

(பி - ம்:) மூ. வாடைகொடிதே. அருவிநுன்.
செல்லே றெய்யோ. (௯)

உ௩௪. மின்னவிர் வயங்கிழை ஞெகிழச் சாஅய்
நன்னுதல் பசத்தல் யாவது துன்னிக்
கனவிற் காணு மிவளே
நனவிற் காணுநின் மார்பே தெய்யோ.



எ - து, இடைவிடாது வந்து ஒழுகாநின்றே களவுநீடாமல் வரைதற்கு முயல்கின்ற தலைமகன் தலைமகள் வேறுபாடுகண்டு, 'இதற்குக் காரணம்' என்னென்றுவினவியவழி, 'நின்னைக்கனவிற்கண்டு விழித்துக்காணளாய் வந்தது' எனத் தோழிசொல்லி வரைவுமுடுக்கியது. (௪)

உ௩௫. கையுற வீழ்ந்த மையில் வானமொ
டரிது காதலர்ப் பொழுதே யதனாற்
றெரியிழை நெகிழ்ப்ப முயங்கிப்
பிரியல மென்கமோ வெழுகமோ தெய்யோ.

எ - து, உடன்போக்குநேர்வித்தபின்பு, தலைமகன் உடன்கொண்டுபோவான் இடையாமத்துவந்துழித் தலைமகட்குத் தோழிசொல்லியது.

(பி - ம்:) மூ. காதலர் பொழுதே. (௫)

உ௩௬. அன்னையு மறிந்தன ளலருமா யின்று
நன்மனை நெடுநகர் புலம்புகொள வுறுதரு
மின்னு வாடையு மலையு
நும்மூர்ச் செல்க மெழுகமோ தெய்யோ.

எ - து, களவொழுக்கம் வெளிப்பட்டமையும் நம் மெலிவுமுணர்த்தித் தோழி உடன்போக்குநயந்தாள்போன்று வரைவுகடாயது. (௬)

உ௩௭. காமங் கடவ வுள்ள மினைப்ப
யாம்வந்து காண்பதோர் பருவ மாயி
னோங்கித் தோன்று முயர்வரைக்
கியாங்கெனப் படுவது நும்மூர் தெய்யோ.

எ - து, அல்லகுறிப்பட்டு நீங்கிய தலைமகனை வந்திலனாகக்கொண்டு அவன் பின்புவந்துழி அவற்குத் தோழிசொல்லியது.

(பி - ம்:) மூ. உள்ளமினைய. உள்ளமிளைப்ப. (௭)

உ௩௮. வார்கோட்டு வயந்தகர் வாரா து மாறினுங்

குருமயிர்ப் புருவை யாசையி னல்கு
மாஅ லருவித் தண்பெருஞ் சிலம்ப
நீயிவண் வருஉங் காலை
மேவரு மாதோவிவ ணலனே தெய்யோ.

எ - து, வரையாது வந்தொழுகுந் தலைமகனுக்கு 'இவள்கவின் நீ வந்த காலத்து வருதலால் நீ போனகாலத்து அதன்செறிலைவு உனக்கு அறியப் படாது' எனத் தோழிசொல்லி வரைவுகடாயது.

## உரு.—வெறிப் பத்து. எங

(ப - ரை:) வார்கோட்டு வயத்தகர் வாராது மாறினும் பின்பு வரக்கூடு மென்னும் ஆசையாலே புருவை தங்குமென்றது, இவளும் இவ்வாறே நின்னைக் காணலாமென்னும் ஆசையாலே உயிரோடு வாழாநின்றுளென்பதாம்.

(பி - ம்:) மூ நீயவண். (அ)

உஙகூ. கரும்புணக் களித்த புகர்முக வேழம்
இரும்பிணர்த் துறுகற் பிடிசெத் தழூஉ-நின்
குன்றுகெழு நன்னாட்டுச் சென்ற பின்றை
நேரிறைப் பணைத்தோ ளென்னெகிழ
வாரா யாயின் வாழ்ந் தெய்யோ.

எ - து, வரைவிடைவைத்துப் பிரிவலென்றதலைமகற்குத் தோழி கூறியது.

(ப - ரை:) மதவேழம் துறுகல்லைப் பிடியென்றுதழுவுநாடனுதலால் நினக்குத் தகுதியல்லாதாளொருத்தியைத் தகுதியுடையாளென்று வரையவுங்கூடுமென நகையாடிக்கூறியது.

(பி - ம்:) மூ. கரும்புணக்களித்த. (க)

உசo. அறிய மல்லே மறிந்தன மாதோ
பொறிவரிச் சிறைய வண்டின மொய்ப்பச்
சாந்த நாறு நறியோள்
கூந்த னாறுநின் மார்பே தெய்யோ.

எ - து, தலைமகற்குப் புறத்தொழுக்கமுளதாணமை யறிந்து தலைமகள் புலந்தவழி, அவன் அதனை இல்லையென்று மறைத்தானாகத் தோழி சொல்லியது.

(பி - ம்:) மூ. அறியேமல்லோம். மார்பேஎ.

தெய்யோப்பத்து முற்றிற்று.

## உரு.—வெறிப் பத்து.

உசக. நம்முறு துயர நோக்கி யன்னை
வேலற் றந்தா ளாயினவ் வேலன்
வெறிகமழ் நாடன் கேண்மை
யறியுமோ தில்ல செறியெயிற் றோயே.
௧௦

௭௪ ஐங்குறுநூறு.

எ - து, இற்செறித்தவழித் தலைமகட்கு எய்திய மெலிவுகண்டு, 'இஃது எற்றினானாயிற்று' என்று வேலனைக்கேட்பத்துணிந்தவழி, அறத்தொடுநிலை துணிந்ததோழி செவிலிகேட்குமாற்றால் தலைமகட்குச்சொல்லியது.

(பி - ம்:) ௩. எயிற்றாயே. (௧)

உசஉ. அறியா மையின் வெறியென மயங்கி
யன்னையு மருந்துய ருழந்தன ளதனா
லெய்யா து விடுதலோ கொடிதே நிரையித
ழாய்மல ருண்கண் பசப்பச்
சேய்மலை நாடன் செய்த நோயே.

எ - து, தலைமகள் அறத்தொடுநிலை நயப்பவேண்டித் தோழி அவட்குச் சொல்லியது.

(ப - ரை:) சேய்மலைநாடன்செய்த நோயை அன்னை அறியாதுவிடுதல் கொடிது; அறிவிக்கவேண்டு மென்பதாம்.

(பி - ம்:) ௩. அதனை, னறியாதுவிடுதலோ. (௨)

உசங. கறிவளர் சிலம்பிற் கடவுட் பேணி
யறியா வேலன் வெறியெனக் கூறு
மதுமனங் கொள்குவை யனையிவள்
புதுமலர் மழைக்கண் புலம்பிய நோய்க்கே.

எ - து, தாயுடையறியாமைகூறித் தோழி வெறிவிலக்கியது.

(ப - ரை:) அறியாவேலன் யாதுகேட்பினும் வெறியெனக்கூறும்; அவனை

இதற்கும் கேட்க மனக்கொள்ளா யின்றாய். எ - று.

(பி - ம்:) மூ. கொன்வையன்னையிவள். (௩)

உ௪௪. அம்ம வாழி தோழி பன்மலர்
நறுந்தண் சோலை நாடுகெழு நெடுந்தகை
குன்றம் பாடா னாயி
னென்பயஞ் செய்யுமோ வேலற்கவ் வெறியே.

எ - து, வெறியாட றுணிந்தவழி விலக்கலுறுந்தோழி செவிலிகேட்குமாற்றால் தலைமகட்குச் சொல்லியது.

(பி - ம்:) மூ. புனமலர். வேலற்குவெறியே. (௪)

## உரு.—வெறிப் பத்து. எரு

உ௪௫. பொய்யா மரபி னூர்முது வேலன்
கழங்குமெய்ப் படுத்துக் கன்னந் தூக்கி
முருகென மொழியு மாயிற்
கெழுதகை கொல்லிவ ளணங்கி யோற்கே.

எ - து, தலைமகன்சிறைப்புறத்தானாக வெறியறிவுறீஇத் தோழி வரைவு கடாயது.

(ப - ரை:) கன்னமென்பது *நோய்தணித்தற்குப் பண்ணிக்கொடுக்கும் படிமம். கெழுதகையென்பது, உரிமை; இவளை அணங்கியோற்கு வெறியாட்டு உரிமையன்றென்பதாம்.

(பி - ம்:) மூ. மொழியுமாகின். (ரு)

உ௪௬. வெறிசெறித் தனனே வேலன் கறிய
கன்முகை வயப்புலி கழங்குமெய்ப் படூஉ
மெய்ம்மை யன்ன பெண்பாற் புணர்ந்து
மன்றிற் பையுள் தீருங்
குன்ற நாட னுறீஇய நோயே.

எ - து, வரையாது வந்தொழுகுந் தலைமகன் சிறைப்புறத்தானாய்நின்றுழி அவன் கேட்குமாற்றால் வெறிங்கழாநின்றமை தோழி தலைமகட்குச் சொல்லியது.

(ப - ரை:) பயிர்விளைப்பார் விலங்குகள் நலியாமைக்குக் கழலைக் கண்ணுகவுறுத்திப் பொய்ம்மைவகையாற் பண்ணிவைத்த பெண்பாற்புலியைப்

புணர்ந்து புலிப்போத்துப் படப்பைநீவே துயரந்தீருமென்றது, வரைந்து கொளநினையாது இக்களவிற்புணர்கின்ற மாயப்புணர்ச்சியானே இன்பம் முடிய நுகர்கின்றானென்பதாம். (சு

உஎஎ. அன்னை தந்த தாகுவ தறிவென்
பொன்னகர் வரைப்பிற் கன்னந் தூக்கி
முருகென மொழியு மாயி
னருவரை நாடன் பெயர்கொலோ வதுவே.

எ - து, வெறிவிலக்கலுறுந்தோழி தமர்கேட்பத் தலைமகளை வினவுவாளாய்ச் சொல்லியது. (எ)

உஎஅ. பெய்ம்மணன் முற்றங் கவின்பெற வியற்றி
மலைவான் கொண்ட சினைஇய வேலன்
கழங்கினு னறிகுவ தென்று
னன்று லம்ம நின்றவிவ ணலனே.



எ - து, தலைமகள்வேறுபாடு கழங்கினாற்றெரியுமென்று வேலன்கூறிய வழி, அதனைப் பொய்யென இகழ்ந்ததோழி வெறிவிலக்கிச் செவிலிக்கு அறத்தொடுநின்றது.

(ப - ரை:) நின்றவிவள்நலனென்றது, கற்புடைமையை.

(பி - ம்:) மூ. கழங்குதானறிகுவது.
கரு. அறத்தொடுநிற்பான்கூறியது. (அ)

உஎகூ. பெய்ம்மணல் வரைப்பிற் கழங்குபடுத் தன்னைக்கு
முருகென மொழியும் வேலன் மற்றவன்
வாழிய விலங்கு மருவிச்
சூர்மலை நாடனை யறியா தோனே.

எ - து, வேலன்கூறியமாற்றத்தை மெய்யெனக்கொண்ட தாய் கேட்பத் தலைமகட்குத் தோழிகூறியது. (கூ)

உஅ0. பொய்படு பறியாக் கழங்கே மெய்யே
மணிவரைக் கட்சி மடமயி லாலுநம்
மலர்ந்த வள்ளியங் கானங் கிழவோ
னாண்டகை விறல்வே லல்லனிவள்
பூண்டாங் கிளமுலை யணங்கி யோனே.

எ - து, தலைமகட்குவந்தநோய் முருகனால் வந்தமை இக்கழங்குகூறிற்

றென்று வேலன்சொன்னனென்பது சேட்டதோழி அக்கழங்கிற்குஉரைப் பாளாய்ச் செவிலி கேட்குமாற்றால் அறத்தொடுநிலைகுறித்துச் சொல்லியது.

(பி - ம்:) மூ. பொய்படுபெழியா. மடமயிலாயகம். வளர்ந்தவள்ளி. (க0)

## வெறிப்பத்து முற்றிற்று.



## உசு.—குன்றக்குறவன் பத்து.



உருக. குன்றக் குறவ னார்ப்பி னெழிலி
நுண்ப லழிதுளி பொழியு நாட
நெடுவரைப் படப்பை நம்மூர்க்
கடுவர லருவி காணினு மழுமே,

**உசு.—குன்றக்குறவன் பத்து.** எஎ

எ - து, வரையாதுவந்தொழுகுந் தலைமகற்கு வரைவுவேட்டதோழி கூறியது.

(உ - ரை:) 'நம்மூர்க் கடுவரல் அருவி காணினும் அழுமே' என்றது, அது நின்மலையினின்றும் வீழ்கின்றவருவியென்று அதுகொண்டு அதற்குநின் கொடுமைகூறி இவள் அழும். எ - று. குறவன் உழவுமுதலாகிய வினைக்கு ஆர்ப்பின், அதற்கு இன்றியமையாதநீரை நுண்மழைபொழியும் நாடனாகி வைத்தும் எம்வேட்கையறிந்து அதற்குத்தக ஒழுகுகின்றிலையென்பதாம். (க)

உருஉ. குன்றக் குறவன் புல்வேய் குரம்பை
மன்று டளமழை மறைக்கு நாடன்
புரையோன் வாழி தோழி விரைபெய
லரும்பனி யளைஇய கூதிர்ப்
பெருந்தண் வாடையின் முந்துவந் தனனே.

எ - து, வரைவிடைவைத்துப் பிரிந்ததலைமகன் குறித்தபருவத்திற்கு முன்னே வந்தானாக உவந்ததோழி தலைமகட்குச் சொல்லியது.

(உ - ரை:) குறவனது புல்வேய்குரம்பைப் பொல்லாங்கினை இளமழை

மறைக்கும் நாடனென்றது, பிரிவின்கண் தங்கட்குவந்த துன்பத்தை இவன் மறைத்ததுநோக்கிக் கூறியவாறு.

(பி - ம்:) மூ. குறவர்புல், புரைவன். விரையல். கருத். உவந்துதோழி. (உ)

உ0௩. குன்றக் குறவன் சாந்த நறும்புகை
தேங்கமழ் சிலம்பின் வரையகங் கமழுங்
கானக நாடன் வரையின்
மன்றலு முடையள்கொ றோழி யாயே.

எ - து, வரைவிடைவைத்துப் பிரிந்ததலைமகன் வரைவொடு புகுதரா நின்றானென்பது தோழிகூறக்கேட்ட தலைமகள் அவட்குச் சொல்லியது.

(ப - ரை:) தேன்நாறுகின்ற மலைக்கண்ணே குறவன்சாந்தநறும்புகை கமழுமென்றது, நம்மனைக்கட்செல்கின்ற சிறப்புக்குமேலே மணவினையால் அவர்செய்யுஞ்சிறப்பு மிகும்வண்ணம் விளைப்பான்கொல். எ - று.

(பி - ம்:) மூ. கானநாடன். உடையகொறோழியானே.
ப. சிறப்புப்பெறும்வண்ணம், (௩)

எஅ ஐங்குறுநூறு.

உ0௪. குன்றக் குறவ ணா மறுத்தென
நறும்புகை சூழ்ந்து காந்த ளூறும்
வண்டிமிர் சுடர்நுதற் குறுமகள்
கொண்டனர் செல்வர்தங் குன்றுகெழு நாட்டே.

எ - து, உடன்போக்கு உடன்படவேண்டிய தோழி தலைமகட்குச்சொல் லியது. (௪)

உ0௫. குன்றக் குறவன் காதன் மடமகள்
வரையர மகளிர்ப் புரையுஞ் சாயலள்
ஐய ளரும்பிய முலையள்
செய்ய வாயினள் மார்பினள் சுணங்கே.

எ - து, 'நின்னாற்காணப்பட்டவள் எத்தன்மையள்' என்றபாங்கற்குத் தலைமகன் சொல்லியது.

(பி - ம்:) மூ. மகளிர்புரையும். செய்யவாயள். (௫)

உ0௬. குன்றக் குறவன் காதன் மடமகள்
வண்டுபடு கூந்தற் றண்டழைக் கொடிச்சி

வளையண் முளை வா ளெயிற்
றிளைய ளாயினு மாரணங் கினளே.

எ - து, 'நீ கூறுகின்றவள் நின்னை வருத்தும்பருவத்தளல்லள்' என்ற தோழிக்குத் தலைமகன் சொல்லியது.

(பி - ம்:) ௬. முளைவாய் வாளெயிற், றிளையள்.
முளைவாயெயிற்றள். மன்னணங்கினளே. (௬)

உறு௭. குன்றக் குறவன் கடவுட் பேணி
யிரந்தனன் பெற்ற வெல்வளைக் குறுமக
ளாயரி நெடுங்கண் கலிழச்
சேய்த்தாற் றெய்யநீ பிரியு நாடே.

எ - து, வரைவிடைவைத்துப் பிரிவலென்ற தலைமகற்குத் தோழி உடன்படாது கூறியது. (௭)

உறு௮. குன்றக் குறவன் காதன் மடமக
ளணிமயி லன்ன வசைநடைக் கொடிச்சியைப்
பெருவரை நாடன் வரையு மாயிற்
கொடுத்தனெ மாயினோ நன்றே
யின்னு மானாது நன்னுத றுயரே.

## உ௭.—கேழற் பத்து. ௭௬

எ - து, வரைவுவேண்டிவிட மறுத்துழித் தமர்க்குரைப்பாளாய் வரையாதுவந்தொழுகுந் தலைமகற்குத் தோழி அவன்மலைகாண்டலேபற்றுகத் தாங்கள் உயிர்வாழ்கின்றமைதோன்றச் சொல்லியது. (௮)

உறு௯. குன்றக் குறவன் காதன் மடமகண்
மன்ற வேங்கை மலர்சில கொண்டு
மலையுறை கடவுள் குலமுதல் வழுத்தித்
தேம்பலிர் செய்த வீர்நறுங் கையள்
மலர்ந்த காந்த ணாறிக்
கலிழ்ந்த கண்ணளெம் மணங்கி யோளே.

எ - து, வரையத்துணிந்த தலைமகன் வரைவுமுடித்தற்குத் தலைமகள் வருந்துகின்றவருத்தம் தோழிகாட்டக்கண்டு இனி அது கடுகமுடியுமென உவந்தவுள்ளத்தனாய்த் தன்னுள்ளே சொல்லியது. (௯)

உ௬0. குன்றக் குறவன் காதன் மடமகள்

வெண்மேற் கொடிச்சியைப் பெறற்கரி தில்ல
பைம்புறப் படுகிளி யோப்புவவர்
புன்புல மயக்கத்து விளைந்தன தினையே.

எ - து, பகற்குறிக்கண்வந்த தலைமகனைத் தோழி 'இனிப் புனங்காவற்கு வாரோம்' எனக்கூறி வரைவுகடாயது.

(ப - ரை:) விளைந்தனவென்றது முற்றினவென்றவாறு.

(பி - ம்:) மூ. பெறற்கரிதில்ல. (௧0)

## குன்றக்குறவன்பத்து முற்றிற்று.



## உ௭.—கேழற் பத்து.



உ௬௧. மென்றினை மேய்ந்த தறுகட் பன்றி
வன்க லடுக்கத்துத் துஞ்சு நாட
னெந்தை யறித லஞ்சிக்கொ
லதுவே மன்ற வாரா மையே.

எ - து, அல்லகுறிப்பட்டுத் தலைமகன்நீங்கினமை அறியாதான்போன்று தோழி, பிற்றைஞான்று அவன் சிறைப்புறத்தானாய்நிற்பத் தலைமகட்குச் சொல்லியது.



(ப - ரை:) தினைமேய்ந்தபன்றி கல்லடுக்கத்துத் துஞ்சும்நாடனென்றது, தான்வேண்டின இன்பநுகர்ந்து இனிது கண்படுதலல்லது வரைதற்கு வேண்டுவன முயலாதான், எ - று.

(பி - ம்:) மூ. சிறுகட்பன்றி. அதுவேசெய்ய. (௧)

உ௬உ. சிறுதினை மேய்ந்த தறுகட் பன்றி
துறுக லடுக்கத்துத் துணையொடு வதியு
மிலங்குமலை நாடன் வரூஉ
மருந்து மறியுங்கொ றோழியவன் விருப்பே.

எ - து, 'வரைந்துகொள்ளநினைக்கிலன்' என்று வேறுபட்டதலைமகள், 'அவன் நின்மேல் விருப்பமுடையன், நீ நோகின்றது என்னை' என்றதோழிக்குச்சொல்லியது.

(ப - ரை:) சிறுதினைமேய்ந்த தறுகட்பன்றி துறுகல் அடுக்கத்துத் துணையொடுவதியுநாடனென்றது, களவொழுக்கத்தான் வரும் சிற்றின்பமின்றியே வரைந்துகொண்டு நின்னோடு ஒழுகுவனெனத் தோழிகூறியவதனைத் தலைமகள்கொண்டுகூறிற்றெனக்கொள்க. (உ)

உ௬௩. நன்பொ னன்ன புனிறுதீ ரேனல்
கட்டளை யன்ன கேழன் மாந்துங்
குன்றுகெழு நாடன் றானும்
வந்தனன் வந்தன்று தோழியென் னலனே.

எ - து, வரைவிடைவைத்துப்பிரிந்ததலைமகன் மீண்டமையறிந்ததலைமகள், 'நீ தொலைந்தநலம் இன்று எய்தியகாரணம் என்னை' என்றதோழிக்குச் சொல்லியது.

(ப - ரை:) பொன்போன்றதினையைக் கேழல் மாந்துநாடனென்றது, தன்னாட்டுவாழும் விலங்குகளும் தனக்குவேண்டுவன குறைவின்றிப்பெற்று இன்பநுகரும் நாடன். எ - று. (௩)

உ௬௪. இளம்பிறை யன்ன கோட்ட கேழல்
களங்கனி யன்ன பெண்பாற் புணரு
மயந்திகழ் சிலம்ப கண்டிகும்
பயந்தன மாதோநீ நயந்தோள் கண்ணே.

எ - து, வரையாதுவந்தொழுகுந் தலைமகனைப் பகற்குறிக்கண் எதிர்ப்பட்டுத் தோழி வரைவுகடாயது.

(ப - ரை:) கேழல் பிணவைப்புணருமென்றது, அறிவில்லாதனவொழுகுமொழுக்கமும் நின்மாட்டுக் கண்டிலேம். எ-று. (௪)

## உஎ.—கேழற் பத்து. அக

உ௬௫. புலிகொல் பெண்பாற் பூவரிக் குருளை
வளைவெண் மருப்பிற் கேழல் புரக்குங்
குன்றுகெழு நாடன் மறந்தனன்
பொன்போற் புதல்வனோ டென்னீத் தோனே. ௫

எ - து, பரத்தையிடத்தானாக ஒழுகுகின்ற தலைமகன்விடுத்த வாயின்மாக்கட்குத் தலைமகள்சொல்லியது.

(ப - ரை:) புலியாற்கொல்லப்பட்ட தன் பிணவின்குட்டியைத் தந்தை

யாகியகேழல் புரக்கும்நாடனென்றது, பாத்தையர்காரணமாக யானிறந்தால் தன்புதல்வனைத் தானேவளர்க்கத்துணிக்கு என்னை நீத்தானென்பதாம்.

(பி - ம்:) மூ. புலிகொள். நாடன்மன்றதன். (ஞ)

உ-கூ௬. சிறுகட் பன்றிப் பெருஞ்சின வொருத்தலொடு
குறுக்கை யிரும்புலி பொரூஉ நாட
நனிநா ணுடைமைய மன்ற
பனிப்பயங் தனநீ நயந்தோள் கண்ணே.

எ - து, நொதுமலர்வரைவு பிறந்துழித் தலைமகட்கு உளதாகிய வேறுபாடு தோழிகூறித் தலைமகனை வரைவுகடாயது.

(ப - ரை:) பன்றியொருத்தலொடு புலிபொருமென்றது, நினக்கு நிகரல்லாதார் வந்துதலைப்படவும் அதனைநீக்காது இடங்கொடுத்து ஒழுகாநின்று யென்பதாம்.

(பி - ம்:) மூ. நனிநாணுடையைமன்றதன். (சு)

உ-கூஎ. சிறுகட் பன்றிப் பெருஞ்சின வொருத்த
றுறுகல் லடுக்கத்து வில்லோர் மாற்றி
யைவனங் கவருங் குன்ற நாடன்
வண்டுபடு கூந்தலைப் பேணிப்
பண்பில சொல்லுந் தேறுதல் செத்தே.

எ - து, தலைமகளைத் தலைமகன் வரைவலெனத் தெளித்தானென்று அவள்கூறக்கேட்டதோழி அவன் சிறைப்புறத்தானாகச் சொல்லியது.

(ப - ரை:) பண்பிலசொல்லுமென்றது, பொய்ம்மொழிகளைச் சொல்லும். எ - று. பன்றியொருத்தல் காவலரையோட்டி ஐவனநெற் கவருமென்றது, களவினிற் காவலரைவென்று பெறும் இன்பமே விரும்புவான். எ - று. தேறுதல் செத்தேயென்றது, தான்சொன்ன வார்த்தைகளை இவள் மெய்யாகக்கொள்ளுமென்பது கருதி. எ - று.

(பி - ம்:) மூ. பண்பிலசெல்லும். (எ)

கக



உ-கூஅ. தாஅ யிழந்த தழுவரிக் குருளையொடு
வளமலைச் சிறுதினை யுணீஇக் கானவர்

வரையோங் குயர்சிமைக் கேழ லுறங்கு
நன்மலை நாடன் பிரித
லென்பயக் கும்போ நம்விட்டுத் துறந்தே.

எ - து, 'அவன்குறிப்பிருந்தவாற்ருல் நம்மைப் பிரிந்துவந்தல்லது வரையமாட்டான்போன்றிருந்தது' எனத் தலைமகள் கூறக்கேட்ட தோழி அவட்குத் தலைமகன் சிறைப்புறத்தானுகச் சொல்லியது.

(ப - ரை:) தாயிழந்தகுருளையோடே இளையையுண்டு கேழல் உறங்குகின்ற இத்தன்மையையுடைய நாடனுதலால், இவ்வாறுநிகழ்தல் கூடாதென்பதாம்.

(பி - ம்:) மூ. வளமலிசிறுதினையுணீஇயகானவர். (அ)

உசுகூ. கேழ லுழுதெனக் கிளர்ந்த வெருவை
விளைந்த செறுவிற் றோன்று நாடன்
வாரா தவனுறை நீடி னேர்வளை
யிணையிரோதி நீயழத்
துணைநனி யிழக்குவென் மடமை யானே.

எ - து, குறைநயப்பக்கூறித் தலைமகளைக் கூட்டியதோழி அவன் இடையிட்டுவந்து சிறைப்புறத்தாகின்றுழித் தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.

(ப- ரை:) 'துணைநனியிழக்குவென் மடமையான்' என்றது, நீ எனக்குத்துணையாதலையிழப்பேன் யான், அவனைத்தேறி முன்செய்த மடமையான் எ - று. இறந்துபடுவேனென்பதாம். நீ அழ வாராது அவனுறை நீடினெனக் கூட்டுக. கேழலுழுததாக எருவை நெல்விளைந்தசெறுப்போலத் தோன்றுமென்றது, வேட்கைநலியத் தனக்குவந்த வருத்தத்தானே தலைசாய்த்து நல்லாணைப்போல ஒழுகியதுணையேயுள்ளதென்பதாம்.

(பி - ம்:) மூ. இழக்குவன்மடமையோனே.
கருத். தலைமகனைக் கூட்டிய. (க)

உஎ0. கிழங்ககழ் கேழ லுழுத சிலம்பிற்
றலைவிளை கானவர் கொய்தனர் பெயரும்
புல்லென் குன்றத்துப் புலம்புகொ ணெடுவரை
காணினுங் கலிழுநோய் செத்துத்
தாம்வந் தனர்நங் காத லோரே.

## உஅ.—குரக்குப் பத்து.

எ - து, வரைவுகாரணமாக நெட்டிடைகழிந்து பொருள்வயிற்போகிய தலைமகன் வந்தமையறிந்ததோழி உவந்தஉள்ளத்தளாய்த் தலைமகட்குச் சொல்லியது.

(ப - ரை:) கிழங்ககழ்கேழல் உழுத புழுதிக்கண்ணே வித்தவிளைந்த பயிரைக் கானவர்கொய்யுஞ் சிறப்புடையதேனும் அவன் அவ்விடத்து உறையாமையின் தனக்குப் புல்லென்றுதோன்றுதலாற் புல்லென்குன்றமெனவும், புலம்புகொணெடுவரையெனவும் இழித்துக்கூறப்பட்டதெனக் கொள்க.

(பி - ம்:) மூ. தலைவிதை.

கருத். நெட்டிடைக்கழிந்து. (க ೦)

## கேழற்பத்து முற்றிற்று.



## உ அ.—குரக்குப் பத்து.



உஎக. அவரை யருந்த மந்தி பகர்வர்
பக்கிற் றோன்று நாடன் வேண்டிற்
பசுப்போல் பெண்டிரும் பெறுகுவன்
றொல்கே ளாகலி னல்குமா லிவட்கே.

எ - து, தலைமகன் வரைவுவேண்டிவிடத் தமர்மறுத்துழிச் செவிலிக்குத் தோழி அறத்தொடுநின்றது.

(ப - ரை:) அவரையை நிறையத்தின்றமந்தி பண்டவாணிகர் பைபோலத் தோன்றுநாடனென்றது, ஆண்வொழ்வனவும் மேலாமுணவுகளிற் குறைவின்றி வாழும்நாடன். எ - மு. 'பசுப்போல்பெண்டிரும்' என்றது, வரைவெதிர் கொள்ளாத் தமர்மறுத்த தீங்கினைத் தங்கண்மேலேற்றி, இத்தீங்குசெய்யாது தான் நினைத்தவழியொழுகும் குணமுடைய பெண்டிர்பலரையும் பெறுகுவன், அவனேவேண்டினென்றுகூறியவாறாகக்கொள்க. 'பசுப்போற்பெண்டிரும்' என்றுபாடமோதுவாருமுளர். (க)

உஎஉ. கருவிரன் மந்திக் கல்லா வன்பறழ்

முருவரைத் திந்தே னெடுப்பி யயல
துருகெழு நெடுஞ்சினைப் பாயு நாட
னிரவின் வருத லறியான்
வரும்வரு மென்ப டோழி யாயே.



எ - து, அல்லகுறிப்பட்டுநீங்குந்தலைமகன் சிறைப்புறத்தானாக முன்னை நாள் நிகழ்ந்ததனைத் தோழிக்குச் சொல்லுவாள்போன்று தலைமகள் சொல்லியது.

(ப - ரை:) மந்திக்கு ஒருமகவாகியபார்ப்பு மலைக்கட்பெருந்தேனிறாலைக் கிளர்த்து எழுப்பி ஈக்கு வெருவி அதன் அயற்சிகரத்திலே பாயுமென்றது, தான் நுகரக்கருதிவந்து நம்மையுணர்த்திச் சுற்றத்தார்பலரும் உணர்ந்தவதற் குவெருவிப் பெயர்வான். எ - று.

(பி - ம்:) மூ. அல்ல, துருகெழு. (உ)

உஎங. அத்தச் செயலைத் துப்புற ழொண்டளிர்
புன்றலை மந்தி வன்பறழ் மாரு
நன்மலை நாட நீசெலி
னின்னயந் துறைவி யென்னினுங் கலிழ்மே.

எ - து, வரைவிடைவைத்துப் பிரியுந்தலைமகன், 'நின்றுணைவியை உடம்படுவித்தேன், இனி நீயே இதற்கு உடம்படாது கலிழ்கின்றாய்' என் றாற்குத் தோழிகூறியது.

(ப - ரை:) பிரிவுடம்பட்டாளேயாயினும் நீபிரிந்துழி ஆற்றாளென்பதாம் அசோகந்தளிரை மந்திப்பார்ப்பு அருந்துமென்றது, இளமைகழிவதற்குமுன் னே வரைதல்வேண்டுமென்பதாம்.

(பி - ம்:) மூ. துப்புறழொண்மணி. (ங)

உஎச. மந்திக் கணவன் கல்லாக் கடுவ
னொண்கேழ் வயப்புலி குழூமலின் விரைந்துடன்
குன்றுய ரடுக்கங் கொள்ளு நாடன்
சென்றனன் வாழி தோழியென்
மென்றோட் கவினும் பாயலுங் கொண்டே.

எ - து, வரைவிடைவைத்துப்பிரிந்துழி ஆற்றுவிக்குந்தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

(ப - ரை:) மந்திக்கணவனாகிய கல்லாக்கடுவன் புலிமுழக்கு அஞ்சி வரை

யகத்துப்பாயும் நாடனென்றது, நமக்கு உரியனுயொழுகுகின்றவன் யாம் எம்மைப்பாதுகாத்துரைக்கின்ற உரைக்கு அஞ்சிச்சென்ருனென்பதாம். (௪)

உஎ௫. குரங்கின் றலைவன் குருமயிர்க் கடுவன்
சூரலஞ் சிறுகோல் கொண்டு வியலறை
மாரி மொக்குள் புடைக்கு நாட
யானின் னயந்தன னெனினுமெம்
மாய்நலம் வாடுமோ வருளுதி யெனினே.

## உஅ.—குரக்குப் பத்து. அ௫

எ - து, வரையாதுவந்தொழுகுந்தலைமகன் இடையிட்டுவருதலால் எதிர்ப்பாடுபெருததோழி குறியிடத்து எதிர்ப்பட்டு அவன்கொடுமைகூறி நெருங்கிச் சொல்லியது.

(ப - ரை:) நின்னயந்த எங்நலம்வாடுதல் ஒருதலையன்றே; அங்ஙனமாயினும் நின்னை யாங்கள் நயந்ததனை வெருளாது அருளப்பெறின் எங்நலம் வாடுமோ. எ - று. குரங்கின்றலைவனுகியகடுவன் சூரற்கோலைக்கொண்டு தானே அழிகின்ற மாரிமொக்குளைப் புடைத்து அழிக்குநாடனென்றது, நின்னைநயந்த எங்கணலம் நீவரையாமலே அழிகின்றவிதனை நீ இவ்விடையிட்டஒழுக்கத்தாலே அழியாநின்ருயென்பதாம். (௫)

உஎ௬. மந்திக் காதலன் முறிமேய் கடுவன்
றண்கமழ் நறைக்கொடி கொண்டு வியலறைப்
பொங்கு மனமழை புடைக்கு நாட
நயவா யாயினும் வரைந்தனை சென்மோ
கன்முகை வேங்கை மலரு
நன்மலை நாடன் பெண்டெனப் படுத்தே.

எ - து, வரையாதுவந்தொழுகுந்தலைமகனைத் தோழி நெருங்கிச் சொல்லியது.

(ப - ரை:) மேல் கருக்கொண்டு முற்றிப் பயன்படுவதாய இளமுகிலை மந்தி நறைக்கொடிகொண்டு புடைக்கும் நாடனென்றது, வரைந்து மகப்பெறுதற்கு உரியளாகிய இவளை இம்மறைந்தவொழுக்கத்தாலே கொலைசூழ்கின்ருயென்பதாம். கல்முகை வேங்கைமலரும் நாடனென்றதனுல், வரைதற்

குரியபருவமும் கூறியவாறுயிற்று. (௬)

உ௭௭. குறவர் முன்றின் மாதீண்டு துறுகற்
கல்லா மந்தி கடுவனே டுகளுங்
குன்ற நாடநின் மொழிவ லென்றும்
பசப்ப நீத்த லென்னிவள்
கயத்துவளர் குவளையி னயர்ந்த கண்ணே.

எ - து, வரையாதுவந்தொழுகுந்தலைமகன் புணர்ந்துநீங்குழி எதிர்ப்பட்டதோழி வரைவுகடாயது.

(ப - ரை:) குறவர்முன்றிலில் மாதீண்டுதுறுகற்கண்ணே நாணுது மந்தி கடுவனேடு உகளும்நாடவென்றது, சுற்றத்தார்நடுவே இவ்வொழுக்கம் புலனுகிய ஞான்று விளையும் ஏதத்திற்கு நாணுதோயென்பதாம்.

(பி - ம்;) மூ. கடுவனெடுக்கும், நாடனின்மொழிவல். (௭)

அ௬ ஐங்குறுநூறு.

உ௭அ. சிலம்பின் வெதிரத்துக் கண்விடு கழைக்கோல்
குரங்கின் வன்பறழ் பாய்ந்தென விலஞ்சி
மீனெறி தூண்டிலி னிவக்கு நாட
னுற்றோர் மறவா நோய்தந்து
கண்டோர் தண்டா நலங்கொண் டனனே.

எ - து, வரையாதுவந்தொழுகுந் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகள் தோழிக்குச்சொல்லியது.

(ப - ரை:) குரங்கு தன்மேலிருந்துழிவளைந்து அது பாய்ந்துபோவுழி நிமிர்கின்றமூங்கிற்கோல் மீனெறிதூண்டில்போல ஓங்குநாடனென்றது, தன்னெஞ்சத்து அன்புளதாகியகாலத்து வளைந்து வளைத்தொழுகி அன்பற்ற காலத்துப் பணிவின்றித் தலைமைசெய்து நங்கலங்கொண்ட தன்கொடுமை தோன்ற ஒழுகுகின்றுனென்பதாம்.

(பி - ம்;) மூ. கனைக்கோல். கணைக்கோல். (அ)

உ௭௯. கல்லிவ ரிற்றி புல்லுவன வேறிக்
குளவி மேய்ந்த மந்தி துணையொடு
வரைமிசை யுகளு நாட நீவரிற்
கல்லகத் ததுவெம் மூரே
யம்பற் சேரி யலராங் கட்டே.

எ - து, இரவுக்குறிவேண்டுந்தலைமகனைத் தோழி வரவருமைகூறி மறுத்தது.

(ப - ரை:) 'கல்லகத்ததுவெம்மூர்' என்றது, சூழ்ந்த மலைகளின்நடுவகத்தது எம்மூர். எ - று. இற்றிமேற்படர்ந்த குளவித்தளிரை மேய்ந்து வரையகத்திலே மந்தி கடுவனோடுகேளும் நாடனாதலான், இதற்குமுன்பு இவள் நின்னோடுநுகர்ந்ததேகொண்டு இனி இவள் நின்பதிக்கண் வாழ்தல்வேண்டுமென்பதாம்.

(பி - ம்:) மூ. கல்லிவரித்தி. (கூ)

உஅ0. கருவிரன் மந்திக் கல்லா வன்பார்ப்
பிருவெதி ரீங்கழை யேறிச் சிறுகோன்
மதிபுடைப் பதுபோற் றோன்று நாட
வரைந்தனை நீயெனக் கேட்டியா
னுரைத்தனெ னல்லெனோ வஃதென் யாய்க்கே.

உகூ.—கிள்ளைப் பத்து. அஎ

எ - து, புணர்ந்துடன்போகிய தலைமகன் தலைமகளைக் கரணவகையான் வரைந்தானாக, எதிர்சென்றதோழிக்கு 'இனி யான்இவளைவரைந்தமை நுமர்க்கு உணர்த்தவேண்டும்' என்றானாக அவள்சொல்லியது.

(ப - ரை:) குரக்கின் இளம்பார்ப்பு இருவெதிர்ங் கழையேறி மதிபுடைப் பதுபோற்றோன்றுநாடவென்றது, தீங்குசெய்வாயைப்போலத் தோன்றுவதல்லது உண்மைவகையாற் செய்யாயென்பதாம்.

(பி - ம்:) மூ. இளம்பார்ப்பீ; வெதிரங்கழை. (க0)

குரக்குப்பத்து முற்றிற்று.



## உகூ.—கிள்ளைப் பத்து.



உஅக. வெள்ள வரம்பி னூழி போகியுங்
கிள்ளை வாழிய பலவே யொள்ளிழை
யிரும்பல் கூந்தற் கொடிச்சி
பெருந்தோட் காவல் காட்டி யவ்வே.

எ - து, ஆயத்தோடு விளையாட்டுவிருப்பினாற் பொழிலகம்புகுந்த தலைவியை எதிர்ப்பட்டு ஒழுகுகின்றதலைமகன் அவள் புனங்காவற்கு உரியளாய் நின்றதுகண்டு மகிழ்ந்துசொல்லியது.

(பி - ம்:) மூ. ஊழிபோயும். (க)

உஅஉ. சாரற் புறத்த பெருங்குரற் சிறுதினைப்
பேரமர் மழைக்கட் கொடிச்சி கடியவுஞ்
சோலைச் சிறுகிளி யுன்னு நாட
வாரிருள் பெருகின வாரல்
கோட்டுமா வழங்குங் காட்டக நெறியே.

எ - து, இரவுக்குறிநேர்ந்ததோழி தலைமகன்வந்து புணர்ந்துநீங்குழி அவனையெதிர்ப்பட்டுச் சொல்லியது.

(ப - ரை:) கொடிச்சி கடியவும் சோலைச்சிறுகிளி தினையையுன்னுநாடவென்றது, காவலர் காத்தொழுகவும் களவொழுக்கத்தையே விரும்பாநின்றாயென்பதாம்.

(பி - ம்:) மூ. உண்ணுநாட, வாரால். (உ)



உஅந. வன்கட் கானவன் மென்சொன் மடமகள்
புன்புல மயக்கத் துழுத வேனற்
பைம்புறச் சிறுகிளி கடியு நாட
பெரிய கூறி நீப்பினும்
பொய்வலைப் படூஉம் பெண்டுதவப் பலவே.

எ - து, தோழி வாயின்மறுக்கவும் தலைமகன் ஆற்றாமைகண்டு தலைமகள் வாயில்நேர அவன்பள்ளியிடத்தானுயிருந்துழிப் புக்க தோழிகூறியது.

(ப - ரை:) தினைப்புனத்துப் பலவகைப்படிகின்ற கிளிகளை ஒருத்தி தன்னாற்காக்கமுடியாதாயினும் அவற்றை அவள் கடியமுயலுநாடவென்றது, நின்னோடு இன்பநுகர்ச்சி விரும்புமகளிரை யாங்கள் விலக்கமுயல்கின்றது முடியாதென்பதாம். 'பெரிய கூறி நீப்பினும் பொய்வலைப்படூஉம் பெண்டுதவப்பலவே' என்றது, தந்தமரரயுள்ளார் நின்குறைபலவுங்கூறி நீப்பினும் நின்பொய்வலைப்படூஉம் பெண்டிர்பலர். எ - று. இவளும் அவருள் ஒருத்தியென்பதாம்.

(பி - ம்:) மூ. நாடன். (ங)

உஅச. அளிய தாமே செவ்வாய்ப் பைங்கிளி

குன்றக் குறவர் கொய்தினைப் பைங்கா
லிருவி நீள்புனங் கண்டும்
பிரிதறேற்றாப் பேரன் பினவே.

எ - து, தினையரிந்தழிக் கிளியைநோக்கிக்கூறுவாள்போற் சிறைப்புறமாக ஒம்படுத்தது.

(பி - ம்:) மூ. பிரிதறேற்ற.　　(௪)

உ௮௫. பின்னிருங் கூந்த னன்னுதற் குறமகண்
மென்றினை நுவணை யுண்டு தட்டையி
னைவனச் சிறுகிளி கடியு நாட
வீங்குவளை நெகிழப் பிரிதல்
யாங்குவல் லுநையோ வீங்கிவட் டுறந்தே.

எ - து, ஒருவழித் தணந்துவந்ததலைமகற்குத் தோழி கூறியது.

(ப - ரை:) குறமகள் தினைப்பிண்டியையுண்டு ஐவனச்சிறுகிளிகடியும் நாடவென்றது, நின்னோடு இக்காலத்து இன்பநுகர்ந்து பின்பு நின்மனைச் செல்வமும் பிறமகளிரொழியத் தானேநுகரும்வேட்கையுடையாளைப் பிரிந்து ஒழுகுகின்றாயென்பதாம்.

(பி - ம்:) மூ. நுவனை. விலங்குவளை. வல்லினையோ.　　(௫)

## உ௯.—கிள்ளைப் பத்து.　　அ௯

உ௮௬. சிறுதினை கொய்த விருவி வெண்காற்
காய்த்த வவரைப் படுகிளி கடியும்
யாண ராகிய நன்மலை நாடன்
புகரின்று நயந்தனன் போலும்
கவருந் தோழியென் மாமைக் கவினே.

எ - து, உடன்போக்குத் துணிந்த தலைமகன் அஃதொழிந்து தானே வரைவிடைவைத்துப் பிரியநினைந்ததனைக் குறிப்பினானுணர்ந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது; தலைமகன் வரைவிடைவைத்துப் பிரிவலென்ற வழித் தலைமகள் தோழிக்குச் சொல்லியதூஉமாம்.

(ப - ரை:) புகரென்றது உடன்போதலை. தினையிற்கடிந்த கிளியைத் தினையரிகாற்கண்விளைந்த அவரைக்கண்ணுங்கடியும் நாடனென்றது, வரையா

தொழுதலன்றி உடன்போதலையும் நம்மை விலக்காநின்றனென்பதாம்.

(பி - ம்:) மூ. புகரின்றய்ந்தனன். (சு)

உஅஎ. நெடுவரை மிசையது குறுங்கால் வருடை
திணைபாய் கிள்ளை வெரூஉ நாட
வல்லை மன்ற பொய்த்தல்
வல்லாய் மன்றநீ யல்லது செயலே.

எ - து, இன்னநாளில் வரைவலெனக்கூறி அந்நாளில் வரையாது பின் அவ்வாறுகூறும் தலைமகற்குத் தோழிகூறியது.

(ப - ரை:) தமக்கு ஒரிடையூறுஞ்செய்யாத நெடுவரைக்கண்ணே வாழும் வருடையைத் தினைமேய்கின்றகிள்ளை வெரூஉம் நாடவென்றது, நீசொன்ன போழ்தே எஞ்சுற்றத்தார் வரைவிற்கு இடையூறு செய்யாரென்பதறியாது வெருவுகின்றாயென்பதாம்.

(பி - ம்:) மூ. வல்லைமன்றம்ம. வல்லாய்மல்லல். (எ)

உஅஅ. நன்றே செய்த வுதவி நன்றுதெரிந்
தியாமெவன் செய்குவ நெஞ்சே காமர்
மெல்லியற் கொடிச்சி காப்பப்
பல்குர லேனற் பாத்தருங் கிளியே.

எ - து, கிளிகள் புனத்தின்கட் படியாநின்றனவென்று தலைவியைக் காக்கவேவியவழி அதனையறிந்த தலைமகன் உவந்து தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

(பி - ம்:) மூ. நன்றிதிரிந்து. (அ)

கஉ



உஅகூ. கொடிச்சி யின்குரல் கிளிசெத் தடுக்கத்துப்
பைங்குர லேனற் படர்தருங் கிளியெனக்
காவலுங் கடியுநர் போல்வர்
மால்வரை நாட வரைந்தனை கொண்மோ.

எ - து, இற்செறித்தபின்னர்த் தோழி வரைவுகடாவுழி முதிர்ந்த தினைப்புனம் இவள்காத்தொழிந்தால் வரைவலென்றற்கு அவள்சொல்லியது.

(பி - ம்:) மூ. யலைந்தனைகொண்மோ.
கருத். வரைபவென்றற்கு. (கூ)

௨௯௦. அறம்புரி செங்கோன் மன்னனிற் றாஅய்
சிறந்தன போலுங் கிள்ளை பிறங்கிய
பூக்கமழ் கூந்தற் கொடிச்சி
நோக்கவும் படுமவ ளோப்பவும் படுமே.

எ - து, காவன்மிகுதியான் இரவுக்குறி மறுக்கப்பட்டு நீங்கியதலைமகன் வந்துழி அவன்கேட்டுவெறுப்புத் தீர்த்தற்பொருட்டால் தினைப்புனங்காவல் தொடங்காநின்றாளென்பது தோன்றத் தோழிகூறியது.

(ப - ரை:) மன்னனென்றது, தலைமகனை. (௧௦)

## கிள்ளைப்பத்து முற்றிற்று.



## ௯௦.—மஞ்ஞைப் பத்து.



௨௯௧. மயில்க ளாலக் குடிஞை யிரட்டுந்
துறுகல் லடுக்கத் ததுவே பணைத்தோ
ளாய்தழை நுடங்கு மல்குற்
காதலி யுறையு நனிநல் லூரே.

எ - து, வரைவிடைவைத்துப் பிரிந்து மீள்கின்றதலைமகன் சொல்லியது. (௧)

௨௯௨. மயில்க ளாலப் பெருந்தே னிமிரத்
தண்மழை தழீஇய மாமலை நாட
நின்னினுஞ் சிறந்தன ளெமக்கே நீநயந்து
நன்மனை யருங்கடி யயர
எந்நலஞ் சிறப்பயா மினிப்பெற் றோளே.



எ - து, பின்முறையாக்கிய பெரும்பொருள்வதுவை முடித்தவளை இல்லத்துக் கொண்டுபுகுந்துழித் தலைமகன் உவந்துசொல்லியது.

(ப - ரை:) மழைப்பருவம் வேண்டியிருக்கின்ற மயில்கள் ஆலத் தேன்கள் இமிர மழைபெய்யுநாடவென்றது, யாங்கள் கருதியிருக்கின்ற பெரும்பொருளை உவப்ப முடித்தனை. எ - று.

(பி - ம்:) மூ. யாயினிப்பெற்றேனே. (உ)

உகூ௩. சிலம்புகமழ் காந்த ணறுங்குலை யன்ன
நலம்பெறு கையினென் கண்புதைத் தோயே
பாய லின்றுணை யாகிய பணைத்தோட்
டோகை மாட்சிய மடந்தை
நீயல துளரோ வென் னெஞ்சமர்ந் தோரே.

எ - து, பகற்குறியிடம்புக்க தலைமகன் தலைவி பின்னாக மறையவந்து கண்புதைத்துழிச் சொல்லியது.

(ப - ரை:) 'நீயல்லது உளரோவென்னெஞ்சமர்ந்தோரே' என்றது, நீயல்லது பிறருளராயினன்றே நான்கூறுவது அறிதல்வேண்டிக் கண் புதைக்கற்பாலது; அஃதில்லாதவழிப்புதைப்பது என்னென்று அவள்பேதைமை யுணர்த்தியதாம்.

(பி - ம்:) மூ. எங்கண்புதைத். உளனோ. நெஞ்சயர்ந்தோரே. நெஞ்சமர்ந்தோனோ. கருத். அவனதுகண்புதைத்துழி. (௩)

உகூ௪. எரிமருள் வேங்கை யிருந்த தோகை
யிழையணி மடந்தையிற் றோன்று நாட
னினிதுசெய் தனையா லுந்தை வாழியர்
நன்மனை வதுவை யயரவிவள்
பின்னிருங் கூந்தன் மலரணிக் தோயே.

எ - து, வதுவைசெல்லாநின்றுழித் தலைமகற்குத் தோழிகூறியது.

(ப - ரை:) வதுவையில் தலைவிக்கு மலரணியக்கண்டதோழி 'இவ்வாறும்படி அன்றேசூட்டினை' எனச் சொல்லியவாறும். மலர்ந்தவேங்கைக் கணிருந்த தோகை பொன்னணிமடந்தையில் தோன்றுநாடவென்றது, நீவரையாதொழுகுகின்ற ஞான்று நின்றமர் பொன்னணிந்த இன்றுபோலச் சிறப்பவொழுகினையென்பதாம். (௪)



உகூ௫. வருவது கொல்லோ தானே வாரா
தவணுறை மேவலி னமைவது கொல்லோ
புனவர் கொள்ளியிற் புகல்வரு மஞ்ஞை
யிருவி யிருந்த குருவி வருந்துறப்
பந்தாடு மகளிரிற் படர்தரும்

குன்றுகெழு நாடனொடு சென்றவென் னெஞ்சே.

எ - து, தலைமகன் வரைவிடைவைத்துப் பிரிந்து நீட்டித்துழி உடன் சென்றநெஞ்சினைத் தலைமகள் நினைந்துகூறியது.

(ப - ரை:) புனவர்கொள்ளிக்கு அஞ்சித் தன்புகலிலேசெல்லும் மயில் புனங்கொய்தபின்பு அரிதாளிலேயிருந்தகுருவி எழுந்துவிழுவதாய் வருந்துறச் சிறகைவிரித்து ஆடிச்செல்லும்நாடனென்றது, பின்பு வரைந்துகொள்ளக்கருதாதே அலரஞ்சித் தன்மனைவயிற்சென்றவன் இக்காலத்து யானும் என்னுயத்தாரும்வருந்துறப் பிரிந்தானென்பதாம்.

(பி - ம்:) மூ. கலவமஞ்ஞை. குருவிவருத்துற. குருவிவெருவுற. குன்றநாடனொடு. (௫)

உ௯௬. கொடிச்சி காக்கும் பெருங்குரலேனை
 யடுக்கல் மஞ்ஞை கவரு நாட
 நடுநாட் கங்குலும் வருதி
 கடுமா தாக்கி னறியேன் யானே.

எ - து, இரவுக்குறிவருகின்ற தலைமகற்குத் தோழி ஆற்றாமைகூறி மறுத்தது.

(ப - ரை:) 'அறியேன்யான்' என்றது, இதனால்விளைவன யானறியேனென்பதாம். குறத்திகாக்குந்தினையை மஞ்ஞை கவருநாடவென்றது, நின்னூட்டுக்குத்தக்க களவினுகர்ச்சியே விரும்புகின்றாயென்பதாம். (௬)

உ௯௭. விரிந்த வேங்கைப் பெருஞ்சினைத் தோகை
 பூக்கொய் மகளிரிற் றோன்று நாட
 பிரியினும் பிரிவ தன்றே
 நின்னொடு மேய மடந்தை நட்பே.

எ - து, ஒருவழித்தணந்து வரையவேண்டுமென்ற தலைமகற்குத் தோழி கூறியது.

(ப - ரை:) மலர்ந்த வேங்கைச்சினைக்கணிருந்த தோகை மலர்கொய்யு மகளிரைப்போலத் தோன்றுநாடவென்றது, நீ மனத்தால் எங்கட்கு நல்லது புரியாயெனினும் நன்மைசெய்கின்றாய்போலத் தோன்றுகின்றாயென்பதாம்.

(பி - ம்:) மூ. பிரியாயன்றே. (எ)

## ௩௦.—மஞ்ஞைப் பத்து. ௯௯

உ௯அ. மழைவர வறியா மஞ்ஞை யாலு
 மடுக்க னல்லூ ரசைநடைக் கொடிச்சி

தானெம் மருளா ளாயினும்
யாந்தன் னுள்ளுபு மறந்தறி யேமே.

எ - து, தலைமகற்குக் குறைநேர்ந்ததோழி தலைமகட்குணர்த்தியவழி அவள் நாணத்தினால் மறைத்தொழுகியவதனைக் கூறக்கேட்ட தலைமகன் சொல்லியது.

(ப - ரை:) மழையினதுவரவையறிந்து மஞ்ஞை ஆலுமென்றது, யான் நின்னிடத்துவருகின்ற வரவினையறிந்து இதற்கு அவள் மகிழாநிற்கும்; நீ கூறுகின்றது பொய்யென்பதாம்.

(பி - ம்:) மூ. வரலறியா. யான்றனுள்ளுபு. அறியேனே. (அ)

உ கூகூ. குன்ற நாடன் குன்றத்துக் கவாஅற்
பைஞ்சுனைப் பூத்த பகுவாய்க் குவளையு
மஞ்சி லோதி யசைநடைக் கொடிச்சி
கண்போன் மலர்தலு மரிதிவ
டன்போற் சாயன் மஞ்ஞைக்கு மரிதே.

எ - து, இயற்கைப்புணர்ச்சிபுணர்ந்து நீங்கியகாலைமைக்கண் தலைமகள் ஆயவெள்ளத்தோடுகூடி நிற்கக்கண்ட தலைமகன் மகிழ்ந்தவுள்ளத்தனுய்த் தன்னுள்ளேசொல்லியது.

(ப - ரை:) குன்றநாடனென்றது, அந்நிலத்துக்குரியனாகிய முருகனை.

(பி - ம்:) மூ. அசையியல். (கூ)

கூ00. கொடிச்சி கூந்தல் போலத் தோகை
யஞ்சிறை விரிக்கும் பெருங்கல் வெற்பன்
வந்தன னெதிர்ந்தனர் கொடையே
யந்தீங் கிளவி பொலிகநின் சிறப்பே.

எ - து, தலைமகன்றானே வரைவவேண்டிவிடச் சுற்றத்தார் கொடை நேர்ந்தமை தலைமகட்குத் தோழிசொல்லியது.

(ப - ரை:) கொடிச்சிகூந்தல் போலவேண்டி மஞ்ஞை சிறகைவிரிக்கும் வெற்பனென்றது, நின்மகிழ்ச்சிக்குத்தக நின்தமர் மகிழ்ச்சிகூர்ந்தாரென்பதாம். (க0)

## மஞ்ஞைப்பத்து முற்றிற்று.

### குறிஞ்சி முற்றிற்று.

### கபிலர்.

# ச.—பாலை.

## ஙக.—செலவழுங்குவித்த பத்து.

ங0க. மால்வெள் ளோத்திரத்து மையில் வாலிண
ரருஞ்சுரஞ் செல்வோர் சென்னிக் கூட்டு
மவ்வரை யிறக்குவை யாயின்
மைவரை நாட வருந்துவள் பெரிதே.

எ - து, பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைமகற்குச் சொல்லியது.

(ப - ரை:) வெள்ளிலோத்திரத்துக் குளிர்ச்சியையுடைய மலரை ஆற்றின்வெம்மைதீரச் செல்வோர் அணிந்துசெல்வரென்றமை வெம்மை கூறிய வாறாயிற்று. (க)

ங0உ. அரும்பொருள் செய்வினை தப்பற்கு முரித்தே
பெருந்தோ ளரிவை தகைத்தற்கு முரியள்
செல்லா யாயினோ நன்றே
மெல்லம் புலம்ப விவளழப் பிரிந்தே.

எ - து, பொருள்வயிற்பிரியுந் தலைமகன் பிரிவுடன்படுத்தவேண்டுமென் றுஞைக, அவற்குத் தோழிசொல்லியது.

(பி - ம்:) மூ. தப்பற்குமுரியள். கருத். பிரிவுடன்படுக்க. (உ)

ங0ங. புதுக்கலத் தன்ன கனிய வாலம்
போகிறனைத் தடுக்கும் வேனி லருஞ்சுரந்
தண்ணிய வினிய வாக
வெம்மொடுஞ் சென்மோ விடலை நீயே.

எ - து, சுரத்தருமைகூறி உடன்செலவுமறுக்கும் தலைமகற்குத் தோழி சொல்லியது.

(பி - ம்:) மூ. போகினினை. அடுஞ்சுரம். (ங)

ங0ச. கல்லாக் கோவலர் கோலிற் றோண்டிய

வானீர்ப் பத்தல் யானை வௌவுங்

கல்லதர்க் கவலை செல்லின் மெல்லியற்
புயனெடுங் கூந்தல் புலம்பும்
வயமான் றோன்றல் வல்லா தீமே.

## கூக.—செலவழுங்குவித்த பத்து. கூரு

எ - து, இது பொருள்வயிற்பிரியலுற்ற தலைமகற்குத் தோழி சொல்லியது.

(ப - ரை:) 'வல்லாதீமே' என்றது, எல்லாம்வல்லாயாயினும் இது மாட்டாயாதற்குமேற்பட்ட தலைமையில்லை. எ - று.

(பி - ம்:) மூ. வானீர்ப்பதலை. செலவின்மெல்லியற். செல்லுமெல்லியல். சொல்லுமெல்லியல். (ச)

கூ0௫. களிறு பிடிதழீஇப் பிறபுலம் படாது
பசித்தின வருந்தும் பைதறு குன்றத்துச்
சுடர்த்தொடிக் குறுமகளி னைய
வெனைப்பயஞ் செய்யுமோ விடலைநின் செலவே.

எ - து, உடன்போக்கொழித்துத் தனித்துச்செல்வலென்ற தலைமகற்குத் தோழிகூறியது.

(பி - ம்:) மூ. புலம்படாந்து. சுடர்க்கொடி. (௫)

கூ0௬. வெல்போர்க் குரிசினீ வியன்சுர னிறப்பிற்
பல்கா ழல்குல் லவ்வரி வாடக்
குழலினு மினைகுவள் பெரிதே
விழவொலி கூந்தன் மாஅ யோளே.

எ - து, பிரியுந்தலைமகற்குத் தோழி தலைமகள்பிரிவாற்றாமை கூறியது.

(பி - ம்:) மூ. அவிழொலிகூந்தல். (௬)

கூ0௭. ஞெலிகழை முழங்கழல் வயமா வெரூஉங்
குன்றுடை யருஞ்சுரஞ் செலவயர்ந் தனையே
நன்றில் கொண்கநின் பொருளே
பாவை யன்னநின் றுணைப்பிரிந்து வருமே.

எ - து, பொருள்வயிற் பிரியக்கருதியதலைமகன் அதன்சிறப்புக்கூறிய வழித் தோழி அதனை இழித்துக்கூறியது.

(பி - ம்:) மூ. என்றுணைப்பிரிந்து. (௭)

கூ0அ. பல்லிருங் கூந்தன் மெல்லிய லோள்வயிற்
பிரியா யாயினு நன்றே விரியிணர்க்
காலெறு ழொள்வீ தாஅய
முருகமர் மாமலை பிரிந்தெனப் பிரியே.



எ - து, 'பிரிவல்' என்ற தலைமகற்குத் தோழி, 'பிரியாதொழியப் பெறின் நன்று' 'பிரிவையாயின் இப்பருவத்து இம்மாமலை எங்களைவிட்டுப் பிரிந்தாற் பிரி' எனச் சொல்லியது.

(பி - ம்:) மூ. காலுறழொள்வீ. முருகமாமலை. (அ)

கூ0கூ. வேனிற் றிங்கள் வெஞ்சுர மிறந்து
செலவயர்ந் தனையா லீயே நன்று
நின்னயந் துறைவி கடுஞ்சூற் சிறுவன்
முறுவல் காண்டலி னினிதோ
விறுவரை நாடநீ யிறந்துசெய் பொருளே.

எ - து, 'பொருள்வயிற்பிரிவல்' என்ற தலைமகற்குத் தோழிசொல்லியது.

(பி - ம்:) மூ. விரைந்துசெய்பொருளே. (கூ)

கூக0. பொலம்பசும் பாண்டிற் காசுநிரை யல்குல்
இலங்குவளை மென்றோ ளிழைநிலை நெகிழப்
பிரிதல் வல்லுவை யாயின்
அரிதே விடலையிவ ளாய்நுதற் கவினே.

எ - து, பிரிகின்றதலைமகற்குத் தோழி, 'நீ நினைக்கின்றகருமம் முடித்தாயாயினும் இவள்நலம் மீட்டற்கு அரிது' எனச்சொல்லிச் செலவழுங்குவித்தது. (க0)

## செலவழுங்குவித்தபத்து முற்றிற்று.



## கூஉ.—செலவுப் பத்து.



கூகக. வேங்கை கொய்யுநர் பஞ்சுரம் விளிப்பினு
மாரிடைச் செல்வோ ராறுநனி வெரூஉங்

காடிறந் தனரே காதலர்
நீடுவர் கொல்லென நினையுமென் னெஞ்சே.

எ - து, 'ஆற்றதுஅருமைநினைந்து நீ ஆற்றுயாதல்வேண்டா; அவர் அவ்வழி முடியச்சென்றார்' என்றதோழிக்குத் தலைமகள்சொல்லியது.

(பி - ம்:) மூ. பைஞ்சுரம். (க)

## ௩௨.—செலவுப் பத்து. ௬௭

௩௧௨. அறஞ்சா லியரோ வறஞ்சா லியரோ
வறனுண் டாயினு மறஞ்சா லியரோ
வாள்வனப் புற்ற வருவிக்
கோள்வ லென்னையை மறைத்த குன்றே.

எ - து, உடன்போயினதலைமகள் மீண்டுவந்துழி, 'நின் ஐயன்மார் பின் தொடர்ந்துவந்தவிடத்து நிகழ்ந்தது என்னை' என்ற தோழிக்கு நிகழ்ந்ததுகூறித் தலைமகன் மறைதற்கு உதவிசெய்த மலையை வாழ்த்தியது.

(பி - ம்:) மூ. வாள்வயப்புற்ற. கோள்வருமென்னையை. (உ)

௩௧௩. தெறுவ தம்ம நும்மகள் விருப்பே
யுறுதுய ரவலமொ டுயிர்செலச் சாஅய்ப்
பாழ்படு நெஞ்சம் படரடக் கலங்க
நாடிடை விலங்கிய வைப்பிற்
காடிறந் தனணங் காத லோளே.

எ - து, தலைமகள் புணர்ந்துடன்போகியவழிச் செவிலியாற்றுமைகண்ட நற்றாய் அவட்குச் சொல்லியது.

(ப - ரை:) 'தெறுவது' என்றது, யான் அவள்மேல்வைத்தகாதல் என்னால் தெறப்படுவது. எ - று.

(பி - ம்:) மூ. என்மகள். சாஅய, கலங்கா.
நம்மணங்கியோளே. எங்காதலோளே. (௩)

௩௧௪. அவிர்தொடி கொட்பக் கழுதுபுக வயரக்
கருங்கட் காக்கையொடு கழுகுவிசும் பகவச்
சிறுகண் யானை யாள்வீழ்த்துத் திரிதரு

நீளிடை யருஞ்சுர மென்பநந்
தோளிடை முனிநர் சென்ற வாறே.

எ - து, தலைமகன்பிரிந்துழி அவனுடன்போய் மீண்டார் வழியதருமை தங்களிற் கூறக்கேட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

(பி - ம்:) மூ. நீரிடை. (அ)

நகசு. பாயல் கொண்ட பனிமலர் நெடுங்கட்
பூசல் கேளார் சேய ரென்ப
விழைநெகிழ் செல்ல லுறீஇக்
கழைமுதிர் சோலைக் காடிறந் தோரே.



எ - து, சொல்லாது தலைமகன்பிரிந்துழித் தலைமகள்வேறுபாகண்ட தோழி இரங்கிச் சொல்லியது.

(ப - ரை:) 'பாயல்கொண்டபனிமலர் நெடுங்கட்பூசல்' என்றது, அவர் போகின்றகாலத்து விலக்காதவகை துயின்றீரெனக் கண்ணொடு புலந்து கூறு கின்றபூசல். எ - று. (கூ)

நகரு. பொன்செய் பாண்டிற் பொலங்கல நந்நத்
தேரக லல்கு லவ்வரி வாட
விறந்தோர் மன்ற தாமே பிறங்குமலைப்
புல்லரை யோமை நீடிய
புலிவழங் கதர கானத் தானே.

எ - து, தலைமகள்மெலிவிற்கு நொந்து, தலைமகன்பிரிவின்கண் தோழி கூறியது.

(பி - ம்:) மூ. கானகத்தானே. (சு)

நகஎ. சூழ்கம் வம்மோ தோழிபாழ் பட்டுப்
பைதற வெந்த பாலை வெங்காட்
டருஞ்சுர மிறந்தோர் தேஎத்துச்
சென்ற நெஞ்சம் நீடிய பொருளே.

எ - து, தலைமகன்பிரிந்து நீட்டித்துழி, நெஞ்சினைத் தூதுவிட்டதலை மகள் அது வாராதுதாழ்த்துழித் தோழிக்குச் சொல்லியது.

(பி - ம்:) மூ. சூழ்கவம்மோ. ஈட்டியபொருள்.

நீட்டியபொருள். (எ)

௲அ. ஆய்நலம் பரப்ப வரும்படர் நலிய
வேய்மருள் பணைத்தோள் வில்லிழை நெகிழ
நசைநனி கொன்றோர் மன்ற விசைநிமிர்ந்
தோடெரி நடந்த வைப்பிற்
கோடுயர் பிறங்கன் மலையிறந் தோரே.

எ - து, 'நம்மைப் பிரியார்' என்று கருதியிருந்ததலைமகள் அவன்பிரிந்துழி இரங்கிச் சொல்லியது.

(பி - ம்:) மூ. ஓடரிநடந்த. கருத். பிரியானென்று. (அ)

## ௩௫.—இடைச்சுரப் பத்து. ௯௯

௲௯௯. கண்பொர விளங்கிய கதிர்தெறு வைப்பின்
மண்புரை பெருகிய மரமுளி கான
மிறந்தன ரோநங் காதலர்
மறந்தன ரோதி மறவா நம்மே.

எ - து, தலைமகன் பிரிந்துழி அவன் உணர்த்தாது பிரிந்தமைகூறிய தோழிக்குத் தலைமகள் சொல்லியது. (௯)

௲௨௦. முள்ளரை யிலவத் தொள்ளிணர் வான்பூ
முழங்கழ லைசைவளி யெடுப்ப வானத்
துருமுப்படு கனலி னிருநிலத் துறைக்குங்
கவலை யருஞ்சுரம் போயினர்
தவலி லருநோய் தலைத்தந் தோரே.

எ - து, தலைமகன்பிரிந்துழிச் சுரத்துவெம்மைநினைந்து தலைமகள்சொல்லியது. (௧௦)

## செலவுப்பத்து முற்றிற்று.



## ௩௩.—இடைச்சுரப் பத்து.



௲௨௧. உலறுதலைப் பருந்தி னுளிவாய்ப் பேடை
யலறுதலை யோமை யங்கவட் டேறிப்

புலம்புகொள விளிக்கு நிலங்காய் கானத்து
மொழிபெயர் பன்மலை யிறப்பினு
மொழிதல் செல்லா தொண்டொடி குணனே.

எ - து, பிரிந்துபோகாநின்ற தலைமகன் இடைச்சுரத்துத் தலைமகள் குணம் நினைந்து இரங்கிச்சொல்லியது.

(ப - ரை:) 'மொழிபெயர்பன்மலையிறப்பினும்' என்றது, பின்னும் செல்லும்வழியைநோக்கி. எ - று. (க)

நூஉஉ. நெடுங்கழை முளிய வேனி னீடிக்
கடுங்கதிர் ஞாயிறு கல்பகத் தெறுதலின்
வெய்ய வாயின முன்னே யினியே
யொண்ணுத லரிவையை யுள்ளுதொறுந்
தண்ணிய வாயின சுரத்திடை யாறே.



எ - து, இடைச்சுரத்துக்கண் தலைமகன் தலைமகள்குணம் நினைத்தலில் தனக்குற்ற வெம்மைநீங்கியதுகண்டு சொல்லியது.

(பி - ம்:) மூ. நீட. தண்ணளியாயின. தண்ணளியவாயின.
கருத். நீக்கியதுகண்டு. (உ)

நூஉநூ. வள்ளெயிற்றுச் செந்நாய் வயவுறு பிணவிற்குக்
கள்ளியங் கடத்திடைக் கேழல் பார்க்கும்
வெஞ்சுரக் கவலை நீந்தி
வந்த நெஞ்சநீ நயந்தோள் பண்பே.

எ - து, இடைச்சுரத்துத் தலைமகள்குணம்நினைந்த தலைமகன், 'அவள் பண்புவந்தன' என உவந்து தன்னெஞ்சிற்குச் சொல்லியது. (நூ)

நூஉச. எரிகவர்ந் துண்ட வென்றாழ் நீளிடைச்
சிறிதுகண் படுப்பினுங் காண்குவென் மன்ற
நள்ளென் கங்கு னளிமனை நெடுநகர்
வேங்கை வென்ற சுணங்கிற்
றேம்பாய் கூந்தன் மாஅ யோளே.

எ - து, பிரிந்துவந்ததலைமகன் தலைமகளை நலம்பாராட்டக்கண்டதோழி

'இவள்குணத்தினைமறந்து அமைந்தவாறு யாது' என வினவினாற்கு அவன் சொல்லியது. (௪)

௩௨௫. வேனி லரையத் திலையொலி வெரீஇப்
போகில்புகா வுண்ணாது பிறிதுபுலம் படரும்
வெம்பலை யருஞ்சுர நலியா
தெம்வெங் காதலி பண்புதுணைப் பெற்றே.

எ - து, 'பிரிந்துவந்ததலைமகன், 'சுரத்தின்வெம்மை எங்ஙனமாற்றினீர்' என்ற தோழிக்குச்சொல்லியது.

(பி - ம்:) மூ. துணைபெற்றே. (௫)

௩௨௬. அழலவிர் நனந்தலை நிழலிடம் பெறாது
மடமா னம்பிணை மறியொடு திரங்க
நீர்மருங் கறுத்த நிரம்பா வியவி
னின்னா மன்ற சுரமே
யினிய மன்றயா னொழிந்தோள் பண்பே.

எ - து, இடைச்சுரத்துவெம்மை ஆற்றானாகியதலைமகன் தலைமகள் குணம்நினைந்து நொந்து சொல்லியது. (௬)

## ௩௩.—இடைச்சுரப் பத்து. ௧0௧

௩௨௭. பொறிவரித் தடக்கை வேத லஞ்சிச்
சிறுகண் யானை நிலந்தொடல் செல்லா
வெயின்முளி சோலைய வேயுயர் சுரனே
யன்ன வாரிடை யானும்
தண்மை செய்தவித் தகையோள் பண்பே.

எ - து, பிரிந்ததலைமகன் இடைச்சுரத்தின்கண் தலைமகள்குணம்நினைந்து இரங்கிச் சொல்லியது.

(ப - ரை:) 'சிறுகண்யானைநிலந்தொடல்செல்லா' என்பதுமுற்று.

(பி - ம்:) மூ. வேகல், வெயின்முனி. (௭)

௩௨௮. நுண்மழை தளித்தென நறுமலர் தாஅய்த்
தண்ணிய வாயினும் வெய்ய மன்ற
மடவர லின்றுணை யொழியக்

கடமுதிர் சோலைய காடிறந் தேற்கே.

எ - து, 'மழைவீழ்தலாற் சுரம் தண்ணென்றது, இனி வருத்தமின்றிப் போகலாம்' என்ற உழையர்க்குத் தலைமகன் சொல்லியது.

(பி - ம்:) மூ. காடிறந்தோற்கே. (அ)

ஙஉகூ. ஆள்வழக் கற்ற பாழ்படு நனந்தலை
வெம்முனை யருஞ்சுர நீந்தி நம்மொடு
மறுதரு வதுகொ றுனே செறிதொடி
கழிந்துகு நிலைய வாக
வொழிந்தோள் கொண்டவெ னுரங்கெழு நெஞ்சே.

எ - து, இடைச்சுரத்தின்கண் மீளலுறும்நெஞ்சினைநொந்து தலைமகன் உழையர்க்குச் சொல்லியது.

(பி - ம்:) மூ. வுரங்கெழுநெஞ்சே. (கூ)

ஙங0. வெந்துக ளாகிய வெயிற்கட நீந்தி
வந்தன மாயினு மொழிகினிச் செலவே
யழுத கண்ண ளாய்நலஞ் சிதையக்
கதிர்தெறு வெஞ்சுர நினைக்கு
மவிர்கோ லாய்தொடி யுள்ளத்துப் படரே.

எ - து, பிரிந்ததலைமகன் இடைச்சுரத்தின்கண் தன் நெஞ்சிற்குச் சொல்லியது. (க0)

## இடைச்சுரப்பத்து முற்றிற்று.





## ஙச.—தலைவியிரங்கு பத்து.

(பி - ம்:) இரங்குப்பத்து.



௩௩௧. அம்ம வாழி தோழி யவிழிணர்க்
கருங்கான் மராஅத்து வைகுசினை வான்பூ
வருஞ்சுரஞ் செல்லுந ரொழிந்தோ ருள்ள
வினிய கமழும் வெற்பி
னின்னா தென்ப வவர்சென்ற வாறே.

எ - து, தலைமகன்பிரிந்துழி, 'செல்லும்வழியிடத்து மலையின் உள தாகியநாற்றத்தால் நம்மைநினைத்து முடியச்செல்லார், மீள்வரோ' எனக்கேட்ட தலைவிக்கு 'அவர் முடியச்சென்றார்' என்பதறிந்து இரங்கத் தோழிகூறியது.

(ப - ரை:) சென்றசுரம் பிரிந்தார் தத்தந்துணைவியரை நினையும்படி வெறிகமழும் மலையையுடைத்தாகலும் செலற்கருமையால் இன்னாமையுடைமையும் தலைவி இரங்குதற்குக் காரணமாயின. எ - று.

(பி - ம்:) மூ. வெஞ்சினைவான்பூ. ப. காரணமாயிற்று. (௧)

௩௩௨. அம்ம வாழி தோழி யென்னதூஉ
மறனில மன்ற தாமே விறன்மிசைக்
குன்றுகெழு கானத்த பண்பின் மாக்கணங்
கொடிதே காதலிப் பிரிதல்
செல்லல் ஐய வென்னா தவ்வே.

எ - து, பிரிந்ததலைமகன், 'சுரத்திடைக்கழியச்சென்றான்' என்பது கேட்ட தலைமகள் அங்குள்ளமாக்களை நொந்து தோழிக்குச் சொல்லியது.

(பி - ம்:) மூ. மான்கணம். என்னுவவ்வே. (௨)

௩௩௩. அம்ம வாழி தோழி யாவதும்
வல்லா கொல்லோ தாமே யவண
கல்லுடை நன்னாட்டுப் புள்ளினப் பெருந்தோ
டியாஅந் துணைபுணர்ந் துறைதும்
யாங்குப் பிரிந்துறைதி யென்னாதவ்வே.

எ - து, புட்களை நொந்து சொல்லியது.

(பி - ம்:) மூ. வல்லார் கொல்லோ. என்னு வவ்வே. உறைதியென்னு மாறே. (௩)

௩௩௪. அம்ம வாழி தோழி சிறியிலை
நெல்லி நீடிய கல்காய் கடத்திடைப்
பேதை நெஞ்சம் பின்செலச் சென்றோர்
கல்லினும் வலியர் மன்ற
பல்லித ழுண்க ணழப்பிரிந் தோரே.

எ - து, பிரிவுநீட ஆற்றாளாகிய தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

(ப - ரை:) 'பல்லிதழுண்கண் அழப்பிரிந்தோர்' என்றது, தாம் குறித்த எல்லைக்கண்வாராது நீட்டித்தாரென்பதாம்.

(பி - ம்:) மூ. பின்படச்சென்றோர். (௪)

௩௩௫. அம்ம வாழி தோழி நம்வயி
னெய்த்தோ ரன்ன செவ்விய வெருவை
கற்புடை மருங்கிற் கடுமுடை யார்க்குங்
காடுநனி கடிய வென்ப
நீடி யிவண்வருநர் சென்ற வாறே.

எ - து, தலைமகன் சென்ற சுரத்தினிடத்துக் கொடுமை பிறர்கூறக்கேட்ட தலைமகள் ஆற்றாது தோழிக்குச்சொல்லியது.

(பி - ம்:) மூ. இவண்வருவர் சென்றவாறே.
கருத். கடுமைபிறர். (௫)

௩௩௬. அம்ம வாழி தோழி நம்வயிற்
பிரியலர் போலப் புணர்ந்தோர் மன்ற
நின்றதில் பொருட்பிணி முற்றிய
வென்றூழ் நீடிய சுரனிறந் தோரே.

எ - து, பிரிவதற்குமுன்பு தங்களுடன் அவனொழுகியதிறம் நினைந்து தலைமகள் தோழிக்குச்சொல்லியது. (௬)

௩௩௭. அம்ம வாழி தோழி நம்வயின்
மெய்யுற விரும்பிய கைகவர் முயக்கினு
மினிய மன்ற தாமே
பனியிருங் குன்றஞ் சென்றோர்க்குப் பொருளே.

எ - து, தலைமகன் பொருள்வயிற்பிரிந்துழித் தன்முயக்கினும் அவற்

குப் பிற்காலத்துப் பொருள்சிறந்ததெனத் தலைவிஇரங்கித் தோழிக்குச் சொல்லியது. (எ)



நடுஅ. அம்ம வாழி தோழி சார
லிலையில மலர்ந்த வோங்குநிலை யிலவ
மலையுறு தீயிற் சுரமுதற் றோன்றும்
பிரிவருங் காலையும் பிரித
லரிதுவல் லுநர்நங் காத லோரே.

எ - து, தலைமகன்பிரிந்துழி, 'இக்காலத்தேபிரிந்தார்' எனத் தலைமகள் இரங்கிச் சொல்லியது.

(பி - ம்:) மூ. வல்லினர். (அ)

நடுகூ. அம்ம வாழி தோழி சிறியிலைக்
குறுஞ்சினை வேம்பி னறும்பழ முணீஇய
வாவ லுகக்கு மாலையு
மின்றுகொ றோழியவர் சென்ற நாட்டே.

எ - து, தலைமகன் குறித்த பருவவரவின்கண் மாலைப்பொழுதுகண்டு ஆற்றாளாகியதலைமகள் தோழிக்குச் சொல்லியது.

(பி - ம்:) மூ. உகுக்குமாலை. உவக்குமாலை. இன்றுகொல்காதலவர். (கூ)

நடுசுo. அம்ம வாழி தோழி காதல
ருள்ளார் கொன்னு மருளூற் றனங்கொல்
விட்டுச் சென்றனர் நம்மே
தட்டைத் தீயி னூரல ரெழவே.

எ - து, தலைமகன் பிரிந்துழி, 'கடிதின்வருவர்' என ஆற்றியிருந்த தலைவி அவன் நீட்டித்துழி ஆற்றாது தோழிக்குச்சொல்லியது.

(பி - ம்:) கருத். அவர்நீட்டித்துழி. (கo)

## தலைவியிரங்குபத்து முற்றிற்று.



## நடு.—இளவேனிற் பத்து.



௩௪௧. அவரோ வாரார் தான்வந் தன்றே
குயிற்பெடை யின்குர லகவ
வயிர்க்கேழ் நுண்ணற னுடங்கும் பொழுதே.

## ௩௫.—இளவேனிற் பத்து. ௧0௫

எ - து, தலைமகன்பிரிந்துழிக் குறித்தபருவம் வரக்கண்ட தலைமகள் சொல்லியது.

இனி வருகின்றபாட்டு ஒன்பதிற்கும் இஃது ஒக்கும்.

(பி - ம்:) மூ. அறலடங்கும். (௧)

௩௪௨. அவரோ வாரார் தான்வந் தன்றே
சுரும்புகளித் தாலு மிருஞ்சினைக்
கருங்கா னுணவங் கமழும் பொழுதே. (௨)

௩௪௩. அவரோ வாரார் தான்வந் தன்றே
திணிநிலைக் கோங்கம் பயந்த
வணிமிகு கொழுமுகை யுடையும் பொழுதே. (௩)

௩௪௪. அவரோ வாரார் தான்வந் தன்றே
நறும்பூங் குரவம் பயந்த
செய்யாப் பாவை கொய்யும் பொழுதே. (௪)

௩௪௫. அவரோ வாரார் தான்வந் தன்றே
புதுப்பூ வதிர றுஅய்க்
கதுப்பற லணியுங் காமர் பொழுதே.

(பி - ம்:) மூ. புதுப்பூ வகிரா றுஅய்க். (௫)

௩௪௬. அவரோ வாரார் தான்வந் தன்றே
யஞ்சினைப் பாதிரி யலர்ந்தெனச்
செங்க ணிருங்குயி லறையும் பொழுதே.

(பி - ம்:) மூ. பாதிரியலர்த்தென. (௬)

௩௪௭. அவரோ வாரார் தான்வந் தன்றே
யெயிற்றகை யிளமுலை பொலியப்
பொரிப்பூம் புன்கின் முறிதிமிர் பொழுதே.

(பி - ம்:) மூ. பொரியபூம் புன்கின். (௭)

௩௪௮. அவரோ வாரார் தான்வந் தன்றே

வலஞ்சுரி மராஅம் வேய்ந்துநம்
மணங்கமழ் தண்பொழின் மலரும் பொழுதே. (அ)
கச



கூசகூ. அவரோ வாரார் தான்வந் தன்றே
பொரிகான் மாஞ்சினை புதைய
வெரிகா லிளந்தளி ரீனும் பொழுதே. (கூ)

கூருo. அவரோ வாரார் தான்வந் தன்றே
வேப்பி னொண்பூ வுறைப்பத்
தேப்படு கிளவியவர் தெளிக்கும் பொழுதே. (கo)

## இளவேனிற்பத்து முற்றிற்று.



## கூகூ.—வரவுரைத்த பத்து.



கூருக. அத்தப் பலவின் வெயிறின் சிறுகா
யருஞ்சுரஞ் செல்வோ ரருந்தினர் கழியுங்
காடுபின் னொழிய வந்தனர் தீர்கினிப்
பல்லித ழுண்கண் படந்தைநின்
னல்லெழி லல்குல் வாடிய நிலையே.

எ - து, பிரிந்த தலைமகன்வரவுணர்ந்த தோழி தலைமகட்குச் சொல்லியது.

(பி - ம்:) மூ. சுரன்செல்வோர்வருந்தினர்கழியும். (க)

கூருஉ. விழுத்தொடை மறவர் வில்லிடத் தொலைந்தோ
ரெழுத்துடை நடுகல் லன்ன விழுப்பிணர்ப்
பெருங்கை யானை யிருஞ்சின முறைக்கும்
வெஞ்சுர மரிய வென்னார்
வந்தனர் தோழிநங் காத லோரே.

இதுவுமது.

(ப - ரை:) 'வெஞ்சுரம் அரிய என்னார் வந்தனர்' என்றது, இன்று இடையிலே தங்காது வந்தனர். எ - று. (உ)

கூ௫கூ. எரிக்கொடிக் கவைஇய செவ்வரை போலச்
சுடர்ப்பூண் விளங்கு மேந்தெழி லகல
நீயினிது முயங்க வந்தனர்
மாயிருஞ் சோலை மலையிறந் தோரே.

இதுவுமது. (௩)

## ௯௯.—வரவுரைத்த பத்து. ௧௦எ

கூ௫௪. ஈர்ம்பிணவு புணர்ந்த செந்கா யேற்றை
மறியுடை மான்பிணை கொள்ளாது கழியு
மரிய சுரன்வந் தனரே
தெரியிழை யரிவைநின் பண்புதர விரைந்தே.

இதுவுமது. (௪)

கூ௫௫. திருந்திழை யரிவை நின்னல முள்ளி
யருஞ்செயற் பொருட்பிணி பெருந்திரு வுறுகெனச்
சொல்லாது பெயர்தந் தேனே பல்பொறிச்
சிறுகண் யானை திரிதரு
நெறிவிலங் கருஞ்சுர கானந் தானே.

எ - து, நினைந்த எல்லைபளவும் பொருண்முற்றிக்லாது பெற்றபொருள் கொண்டு தலைவியைநினைந்து மீண்ட தலைமகன் அவட்குச் சொல்லியது.

(ப - ரை:) 'பொருட்பிணி பெருந்திருவுறுக' என்றது, மேல் உளதாகும் பொருட்பிணி திருவுறுவதாகவெனக் குறிப்பின் வெகுண்டுரைத்தது. 'சொல்லாது பெயர்தந்தேனே' என்றது, உடன்சென்றோர் விலக்குவரெனச் சொல்லாது மீண்டேன். எ - று.

(பி - ம்:) மூ. செல்லாது. கானந்தானே. (௫)

கூ௫௬. உள்ளுதற் கினிய மன்ற செல்வர்
யானை பிணித்த பொன்புனை கயிற்றி
னொள்ளெரி மேய்ந்த சுரத்திடை
யுள்ளம் வாங்கத் தந்தநின் குணனே.

எ - து, வினைமுற்றி மீண்டுவந்ததலைமகன் தலைவிக்கு அவள்குணம் புகழ்ந்து கூறியது.

(ப - ரை:) 'உள்ளம்வாங்கத் தந்த நின்குணன்' என்றது, என்னுள்ளம் வாங்குதற்பொருட்டு நீ தந்தகுணங்கள். எ - று.

(பி - ம்:) மூ. உள்ளற்கினிய. (௬)

௩௫௭. குரவ மலர மரவம் பூப்பச்
சுரனணி கொண்ட கானங் காணூஉ
அழுங்குக செய்பொருட் செலவென விரும்பிநின்
னங்கலிழ் மாமை கவின
வந்தனர் தோழிநங் காத லோரே.



எ - து, பொருள்வயிற்பிரிந்து ஆண்டுறைகின்ற தலைமகன் குறித்த பருவவரவுகண்டு கடிதின்மீண்டுவந்தமை தோழி தலைமகட்குச் சொல்லியது.

(ப - ரை:) 'அழுங்குக செய்பொருட்செலவு' என்றது, மேலுளதாகும் பொருட்பிணிச்செலவும் இனிக் கெடுவதாக. எ - று. (எ)

௩௫௮. கோடுயர் பன்மலை யிறந்தன ராயினு
நீட விடுமோ மற்றே நீடுநினைந்து
துடைத்தொறுந் துடைத்தொறுங் கலங்கி
யுடைத்தெழு வெள்ள மாகிய கண்ணே.

எ - து, தலைமகள் ஆற்றாமைகண்டு, பிரிந்ததலைமகன் வந்தனனாகத் தோழிசொல்லியது.

(பி - ம்:) மூ. உடைத்தருவெள்ளம். (அ)

௩௫௯. அரும்பொருள் வேட்கைய மாகிநிற் றுறந்து
பெருங்க லதரிடைப் பிரிந்த காலைத்
தவநனி நெடிய வாயின வினியே
யணியிழை யுள்ளியாம் வருதலி
னணிய வாயின சுரத்திடை யாறே.

எ - து, மீண்டுவந்த தலைமகன் அவளைப் பிரிகின்றகாலத்துச் சுரத்துச் சேய்மையும் வருகின்றகாலத்து அதன் அணிமையுங்கூறியது. (௯)

௩௬௦. எரிகவர்ந் துண்ட வென்றாழ் நீளிடை
யரிய வாயினு மெளிய வன்றே
யவவுறு நெஞ்சங் கவவுநனி விரும்பிக்
கடுமான் றிண்டேர் கடைஇ
நெடுமா னோக்கிநின் னுள்ளியாம் வரவே.

எ - து, வினைமுற்றி மீண்டுவந்ததலைமகன், 'சுரத்தருமைநோக்காது வந்தவாறு என்னை' என வினவியதலைமகட்குச் சொல்லியது.

(பி - ம்:) மூ. கவவநனி விரும்ப. தேர்கடவி. (௧௦)

## வரவுரைத்தபத்து முற்றிற்று.





## ௩௭.—முன்னிலைப் பத்து.



௩௬௧. உயர்கரைக் கான்யாற் றவிர்மண லகன்றுறை
வேனிற் பாதிரி விரிமலர் குவைஇத்
தொடலை தைஇய மடவரன் மகளே
கண்ணினுங் கதவநின் முலையே
முலையினுங் கதவநின் றடமென் றோளே.

எ - து, புணர்ந்துடன்போகிய தலைமகன் இடைச்சுரத்துக்கண் விளையாட்வேகையாற் பூத்தொடுக்கின்ற தலைமகளைக்கண்டு புகழ அவள் அதற்கு நாணிக் கண்புதைத்தவழிச் சொல்லியது.

(பி – ம்:) மூ. உயரறற் கான்யாற் றவிரறல். (௧)

௩௬௨. பதுக்கைத் தாய வொதுக்கருங் கவலைச்
சிறுகண் யானை யுறுபகை நினையா
தியாங்குவந் தனையோ பூந்தார் மார்ப
வருள்புரி நெஞ்ச முய்த்தர
விருள்பொர நின்ற விரவி னானே.

எ - து, சேணிடைப்பிரிந்த தலைமகன் இடைநிலத்துத்தங்காது இரவின்கண்வந்துழித் தோழிசொல்லியது.

(பி - ம்:) மூ. பதுக்கைதாய. (௨)

௩௬௩. சிலைவிற் பகழிச் செந்துவ ராடைக்

கொல்லி லெயினர் தங்கைநின் முலைய
சுணங்கென நினைதி நீயே
யணங்கென நினையுமென் னணங்குறு நெஞ்சே.

எ - து, புணர்ந்துடன்செல்கின்ற தலைமகன் இடைச்சுரத்துத் தலைமகளை நலம்பாராட்டியது.

(பி - ம்:) மூ. கொலைவல்லெயினர். நினைத்தி. (க)

நூ.சுச. முளவுமா வல்சி யெயினர் தங்கை
யிளமா வெயிற்றிக்கு நின்னிலை யறியச்
சொல்லினே னிரக்கு மளவை
வெண்வேல் விடலை விரையா தீமே.



எ - து, உடன்போக்கு நயந்த தலைமகன் அதனைத்தோழிக்குணர்த்த அவள் முடிப்பாளாய்ச் சொல்லியது.

(பி - ம்:) மூ. நின்னிலையறிய. (உ)

நூ.சுரு. கணமா தொலைச்சித் தன்னையர் தந்த
நிணவூன் வல்சிப் படுபுள் ளோப்பு
நலமா ணெயிற்றி போலப் பலமிகு
நன்னல நயவர வுடையை
யென்னோற் றனையோ மாவின் றளிரே.

எ - து, வரைவிடைவைத்துப் பிரிந்து மீள்கின்றான் இடைச்சுரத்துக் குழைத்த மாவின்றளிர்கண்டு சொல்லியது.

(பி - ம்:) மூ. நிணவூண்வல்சி. அலமர லெயிற்றி போல நலமிக. (ந)

நூ.சுசு. அன்னாய் வாழிவேண் டன்னையென் றோழி
பசந்தனள் பெரிதெனச் சிவந்த கண்ணை
கொன்னே கடவுதி யாயி னென்னதூஉம்
மறிய வாகுமோ மற்றே
முறியிணர்க் கோங்கம் பயந்த மாறே.

எ - து, தலைமகளைநோக்கி, 'இவ்வேறுபாடு எற்றினாயிற்று' என்று வினவியசெவிலிக்குத் தோழி அறத்தொடுநின்றது.

(ப - ரை:) இது முன்னாள் அவன்தந்த கோங்கம்பூவால் விளைந்ததெனப் பூத்தருபுணர்ச்சி கூறியவாறாயிற்று. இது கருப்பொருளாற் பாலை.

(பி - ம்:) மூ. அரியவாகுமோ. பயந்தமார்பே. (௬)

௩௬எ. பொரியரைக் கோங்கின் பொன்மருள் பசுவீ
விரியிணர் வேங்கையொடு வேறுபட மிலைச்சி
விரவுமல ரணிந்த வேனிற் கான்யாற்றுத்
தேரொடு குறுக வந்தோன்
பேரொடு புணர்ந்தன் றன்னையிவ ளுயிரே.

எ - து, நொதுமலர் வரைவின்கண் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது.

(ப - ரை:) 'கான்யாற்றுத்தேரொடு குறுகவந்தோன்' என்றது, கான் யாற்று யாங்கள் அழுந்துழிக் குறுகவந்தோன். எ - று. எனவே புனறரு புணர்ச்சி கூறியவாறாயிற்று. 'பேரொடு புணர்ந்தன்று இவளுயிர்' என்றது, அன்றுதொட்டு இன்னான் தந்த உயிரென அவன்பேரொடுபட்டது இவளுயிர். எ - று. இது காலத்தாற் பாலை.

(பி - ம்:) மூ. வேறுபட்டுமிலேச்சி. இவள் கவினே. (எ)

## ௩எ.—முன்னிலைப் பத்து.



௩௬அ. கரிப்பூ விலைக் தூழ்கழி பன்மலர்
பொரிப்பூம் புன்கின் புகர்நிழல் வரிக்குந்
தண்பத வேனி லின்ப நுகர்ச்சி
யெம்மொடு கொண்மோ பெருமநின்
னம்மெ லோதி யழிவில ளெனினே.

எ - து, 'வேனிற்காலத்து நம்மொடு விளையாட்டுநுகர வருவல்' என்று பருவங்குறித்துப் பிரியலுற்றதலைமகற்குத் தோழி கூறியது.

(ப - ரை:) 'அம்மெலோதி அழிவிலளெனின் இன்பநுகர்ச்சி எம்மொடு கொண்மோ' என்றது, நீ வருந்துணையும் இவள் ஆற்றியுளளாயின், எம்மொடு நுகர்ச்சி கொள்வீராமினென மறுத்தவாறு.

(பி - ம்:) மூ. சூழ்கழிபன்மலர். அழிவிலளெனவே. (அ)

௩௬௯. வளமலர் ததைந்த வண்டுபடு நறும்பொழில்

முளைதிரை முறுவ லொருத்தியொடு நெருநற்
குறிநீ செய்தனை யென்ப வலரே
குரவ நீள்சினை யுறையும்
பருவ மாக்குயிற் கௌவையிற் பெரிதே.

எ - து, பரத்தையொருத்தியுடன் பொழிலகத்துத் தங்கிவந்த தலைமகன் தலைமகள் வினயவழி, 'யாரையும் அறியேன்' என்றானாக அவள் கூறியது.

(ப - ரை:) இது பாலைக்குரித்தாகிய வேனிற்கண் நிகழும் குரவும் குயிலும் கூறுதலாற் பாலையாயிற்று.

(பி - ம்:) மூ. நெருனை. நீள்சினையறையும். (கூ)

கூஎ0. வண்சினைக் கோங்கின் றண்கமழ் படலை
யிருஞ்சிறை வண்டின் பெருங்கிளை மொய்ப்ப
நீநயந் துறையப் பட்டோள்
யாவ ளோவெம் மறையா தீமே.

எ - து, பரத்தையொருத்திக்குப் பூவணிந்தானென்பது கேட்ட தலைமகள், 'அஃதில்லை' என்று மறைக்குந்தலைமகற்குக் கூறியது.

(ப - ரை:) இது, பாலைக்குரிய கருப்பொருளாகிய கோங்குகூறினமையால், பாலையாயிற்று.

(பி - ம்:) மூ. நயந்துலைய. யாரளோ. (௧0)

## முன்னிலைப்பத்து முற்றிற்று.





## கூஅ.—மகட்போக்கியவழித் தாயிரங்கு பத்து.

(பி - ம்:) தாயிரங்கியபத்து. தாயிரங்குப்பத்து.



* கூஎக. மள்ளர் கொட்டின் மஞ்ஞை யாலு
முயர்நெடுங் குன்றம் படுமழை தலைஇச்
சுரநனி யினிய வாகுக தில்ல
வறநெறி யிதுவெனத் தெளிந்தவென்

பிறைநுதற் குறுமகள் போகிய சுரனே. ௧௪௭

(பி - ம:) மூ. கொட்மெஞ்ஞை. (௧)

௩௭௨. என்னு முள்ளினள் கொல்லோ தன்னை
நெஞ்சுணத் தேற்றிய வஞ்சினக் காளையொ
டழுங்கன் மூதூ ரலரெழச்
செழும்பல் குன்ற மிறந்தவென் மகளே.

(பி - ம:) மூ. அழுங்கின்மூதூர். (௨)

௩௭௩. நினைத்தொறுங் கலிழு மிடும்பை யெய்துக
புலிக்கோட் பிழைத்த கவைக்கோட்டு முதுகலை
மான்பிணை யணைதர வாண்குரல் விளிக்கும்
வெஞ்சுர மென்பக ளுய்த்த
வம்பமை வல்வில் விடலை தாயே.

எ - து, தலைமகளைத் தலைமகன் கொண்டுகழிந்த கொடுமைநினைந்து நற்றாய் சொல்லியது.

(ப - ரை:) இவட்காக யான் பட்டதுயரம் அவன்றாயும் படவேண்டும். எ - று. (௩)

௩௭௪. பல்லூழ் நினைப்பினு நல்லென் றூழ
மீளி முன்பிற் காளை காப்ப
முடியகம் புகாஅக் கூந்தலள்
கடுவனு மறியாக் காடிறந் தோளே.

---

* ஆழ்வார்திருநகரி ஸ்ரீ தேவர்பிரான்கவிராயரவர்கள்வீட்டுக் கையெழுத்துப்பிரதியில் இந்தச்செய்யுளும் அடுத்தசெய்யுளும் காணப்படவில்லை; இவைகள் இருத்தற்குரிய இடத்தில் "வயக்குகதிர் ஞாயிறு திருகலி னீரறுபு, கயந்துக ளாகிய வியந்தபு கொள்கையொ, டின்னு வாயினு மினிய வாகுக, காதல னயந்துபா ராட்டவென், மாதர் மடப்பிடி போகிய சுரனே." என்னும் செய்யுளொன்றுமே எழுதப்பட்டிருந்தது.

## ௩௮.—மகட்போக்கியவழித் தாயிரங்குபத்து. ௧௧௩

எ - து, தலைமகள் உடன்போயவழி அவள் இளமைநினைந்து இரங்கித் தாய் கூறியது. (௪)

௲எரு. இதுவென் பாவை பாவை,யிதுவென்
னலமரு நோக்கி னலம்வரு சுடர்நுதற்
பைங்கிளி யெடுத்த பைங்கிளி யென்றிவை
காண்டொறுங் காண்டொறுங் கலங்க
நீங்கின ளோவென் பூங்க ணோளே.

எ - து, சேரியும் அயலும் தேடிக் காணாதுவந்தாரைக் கண்டு தலைமகள் தாய் சொல்லியது.

(பி - ம்:) மூ. "இதுவென் பாவைக் கினியநன் பாவை, யிதுவென் பைங்கிளி யெடுத்த பைங்கிளி, யிதுவென் பூவைக் கினியசொற் பூவையென், றலம்வரு நோக்கி னலம்வருஞ் சுடர்நுதல், காண்டொறுங் காண்டொறுங் கலங்கி, நீங் கின ளோவென் பூங்க ணோளே." (௫)

௲எசு. நாடொறுங் கலிழு மென்னினு மிடைநின்று
காடுபடு தீயிற் கனலியர் மாதோ
நல்வினை நெடுநகர் கல்லெனக் கலங்கப்
பூப்புரை யுண்கண் மடவரற்
போக்கிய புணர்த்த வறனில் பாலே.

எ - து, தலைமகள் போயவழி நற்றாய் விதியைவெகுண்டு சொல்லியது.

(பி - ம்:) மூ. கனலிய. போகிய. (௬)

௲எஎ. நீர்நசைக் கூக்கிய வுயவல் யானை
யியம்புணர் தூம்பி னுயிர்க்கு மத்தம்
சென்றனண் மன்றவென் மகளே
பந்தும் பாவையுங் கழங்குமெமக் கொழித்தே.

எ - து, தலைமகள் உடன்போயவழி அவள் பந்துமுதலாகியகண்ட நற்றாய் கலங்கிச் சொல்லியது.

(பி - ம்:) மூ. பந்துபாவையும். கருத். போகியவழி. (எ)

௲எஅ. செல்லிய முயலிப் பாஅய சிறகர்
வாவ லுகக்கு மாலையாம் புலம்பப்
போகிய வவட்கோ நோவேன் றேபொழித்
துணையிலள் கலிழு நெஞ்சி
னிணையே ருண்க ணிவட்குநோ வதுவே.

எ - து, தலைமகள் உடன்போயவழி அவள்தோழியாற்றாமைகண்டநற்றாய் சொல்லியது.

(பி - ம்:) மூ. முயலின். உவக்குமாலை. (அ)

நூஎகூ. தன்னமர ராயமொடு நன்மண நுகர்ச்சியி
னினிதாங் கொல்லோ தனக்கே பனிவரை
யினக்களிறு வழங்குஞ் சோலை
வயக்குறு வெள்வே லவற்புணர்ந்து செலவே.

எ - து, புணர்ந்துடன்போகியவழித் தோழி அறத்தொடுநிற்பக்கேட்டநற்றாய், 'அதனை முன்னேயறிவித்து நாம் மணம்புணர்த்த ஒழுகாது போயினள்' என நொந்து சொல்லியது. (க)

நூஅ0. அத்த நீளிடை யவனொடு போகிய
முத்தேர் வெண்பன் முகிழ்நகை மடவர
றாய ரென்னும் பெயரே வல்லா
றெடுத்தேன் மன்ற யானே
கொடுத்தோர் மன்றவவ ளாயத் தோரே.

எ - து, தலைமகள் உடன்போகியவழித் தெருட்டுவார்க்குச்செவிலித்தாய் சொல்லியது.

(பி - ம்:) மூ. தாய ளென்னும் பெயரே னல்லாறு. (க0)

மகட்போக்கியவழித் தாயிரங்குபத்து முற்றிற்று.



## நூகூ.—உடன்போக்கின்கண் இடைச்சுரத் துரைத்த பத்து.



நூஅக. பைங்காய் நெல்லி பலவுடன் மிசைந்து
செங்கான் மராஅத்த வரிநிழ லிருந்தோர்
யார்கொ லளியர் தாமே வார்சிறைக்
குறுங்கான் மகன்றி லன்ன
வுடன்புணர் கொள்கைக் காத லோரே.

எ - து, உடன்போக்கின்கண் இடைச்சுரத்துக் கண்டார் சொல்லியது.
(பி - ம்:) மூ. குறுங்கானகன்றில். (க)

## கக.—இடைச்சுரத்துரைத்த பத்து. ககரு

௩அ௨. புள்ளொலிக் கமர்ந்த கண்ணள் வெள்வேற்
றிருந்துகழற் காளையொ டருஞ்சுரங் கழிவோ
ளெல்லிடை யசைந்த கல்லென் சீறூர்ப்
புனையிழை மகளிர்ப் பயந்த
மனைகெழு பெண்டிர்க்கு நோவுமார் பெரிதே.

எ - து, தலைமகள் இடைச்சுரத்தினது ஊரின்கண் எல்லிடைத் தங்கிய வழி அவ்வூர்ப்பெண்டிர்பார்த்து இரங்குதல் கண்டார் சொல்லியது. (உ)

௩அ௩. கோட்சுரும் பரற்று நாட்சுரத் தமன்ற
நெடுங்கான் மராஅத்துக் குறுஞ்சினை பற்றி
வலஞ்சுரி வாலிணர் கொய்தற்கு நின்ற
மள்ள னுள்ள மகிழ்கூர்ந் தன்றே
பஞ்சாய்ப் பாவைக்குந் தனக்கு
மஞ்சாய் கூந்த லாய்வது கண்டே.

எ - து, உடன்போகிய தலைமகள் தலைமகன் வளைத்த கொம்பிற்பூக் கொண்டு தனக்கும் பாவைக்கும் வகுக்கக் கண்டார்கூறியது.
(பி - ம்:) மூ. ஆய்வதுகொண்டே. (௩)

௩அ௪. சேட்புல முன்னிய வசைநடை யந்தணிர்
நும்மொன் றிரந்தனென் மொழிவ லெம்மூர்
யாய்நயந் தெடுத்த வாய்நலங் கவின
வாரிடை யிறந்தன ளென்மி
னேரிறை முன்கையென் னுயத் தோர்க்கே.

எ - து, உடன்போகிய தலைமகள் ஆண்டு எதிர்வரும் அந்தணர்க்குச் சொல்லியது.
(பி - ம்:) மூ. விரைநடை. தாய்நயந்தெடுத்த.
நலங்கவின்பெற. (௪)

௩அ௫. கடுங்கட் காளையொடு நெடுந்தே ரேறிக்

கோள்வல் வேங்கை மலைபிறக் கொழிய
வேறுபல் லருஞ்சுர மிறந்தன ளவளெனக்
கூறுமின் வாழியோ வாறுசென் மாக்கள்
நற்றோ ணயந்துபா ராட்டி
யெற்கெடுத் திருந்த வறனில் யாய்க்கே.



எ - து, வரைவுமறுத்துழி உடன்போய தலைமகள் இடைச்சுரத்துக் கண்டாரை, 'யான் போகின்றபடியை யாய்க்கு நீர் கூறவேண்டும்' எனச் சொல்லியது.

(பி - ம்:) மூ. வேங்கையமலை, வேரன்மலருஞ்சுரமிறந்தனளென. (ரு)

௩அசு. புன்கண் யானையொடு புலிவழங் கத்த
நயந்த காதலற் புணர்ந்துசென் றனளே
நெடுஞ்சுவர் நல்லின் மருண்ட
விடுமுலை புறாவிதின் கடுஞ்சூன் மகளே.

எ - து, புணர்ந்துடன்போகிய தலைமகளை இடைச்சுரத்துக் கண்டார் அவள் தாய்க்குச் சென்று கூறியது. (சு)

௩அஎ. அறம்புரி யருமறை நவின்ற நாவிற்
றிறம்புரி கொள்கை யந்தணிர் தொழுவலென்
றொண்டொடி வினவும் பேதையம் பெண்டே
கண்டனெ மம்ம சுரத்திடை யவளை
யின்றுணை யினிதுபா ராட்டக்
குன்றுயர் பிறங்கன் மலையிறந் தோளே.

எ - து, பின்சென்ற செவிலியால் வினவப்பட்ட அந்தணர் அவட்குச் சொல்லியது.

(பி - ம்:) மூ. அவளே. இறந்தோரே. (எ)

௩அஅ. நெருப்பவிர் கனலி யுருப்புச்சினந் தணியக்
கருங்கால் யாத்து வரிநிழ லிரீஇச்
சிறுவரை யிறப்பிற் காண்குவை செறிதொடிப்
பொன்னேர் மேனி மடந்தையொடு

வென்வேல் விடலை முன்னிய சுரனே.

எ - து, தேடிச்சென்ற செவிலிக்கு இடைச்சுரத்துக்கண்டார் அவளைக் கண்டதிறம் கூறியது.

(பி - ம்:) மூ. ஒருப்பவிர்கனலி. யாத்தவரிநிழலசைஇ.
காண்டி செறிதளிர். வென்வேலண்ணல். (௯)



௩௮௯. செய்வினைப் பொலிந்த செறிகழ னோன்றாண்
மையணற் காளையொடு பைய வியலிப்
பாவை யன்னவென் னாய்தொடி மடந்தை
சென்றன ளென்றி ராய
வொன்றின வோவவ ளஞ்சிலம் படியே.

எ - து, பின்சென்றசெவிலித்தாய், வினவப்பட்டோர், 'கண்டோம்' என்புழிச் சொல்லியது. (௯)

௩௯0. நல்லோ ராங்கட் பரந்துகை தொழுது
பல்லூழ் மறுகி வினவு வோயே
திண்டோள் வல்விற் காளையொடு
கண்டனெ மன்ற சுரத்திடை யாமே.

எ - து, பின்சென்ற செவிலித்தாய் பலரையும் வினவக்கண்டோர் தாம் கண்டவாறு அவட்குக்கூறியது.

(பி - ம்:) மூ. நல்லோரங்கட்பரிந்து. மறுகின். (௧0)

## உடன்போக்கின்கண் இடைச்சுரத்துரைத்தபத்து முற்றிற்று.

---

## ௪0.—மறுதரவுப் பத்து.

௩௯௧. மறுவி லாவிச் சிறுகருங் காக்கை
யன்புடை மரபினின் கிளையோ டாரப்
பச்சூன் பெய்த பைந்திண வல்சி

பொலம்புனை கலத்திற் றருகுவென் மாதோ
வெஞ்சின விறல்வேற் காளையொ
டஞ்சி லோதியை வரக்கரைந் தீமே.

எ - து, உடன்போகிய தலைமகள் மீடற்பொருட்டுத் தாய் காகத்திற்குப் பராய்க்கடன் உரைத்தது.

(பி - ம்:) மூ. கரைந்திடுமே. (௮)



௩௯௨. வேய்வனப் பிழந்த தோளும் வெயிலிறற
வாய்கவின் றொலைந்த நுதலு நோக்கிப்
பரியல் வாழி தோழி பரியி
னெல்லையி லிடும்பை தரூஉ
நல்வரை நாடனொடு வந்த மாறே.

எ - து, உடன்போய் மீண்டுவந்த தலைமகள், வழிவரல்வருத்தங் கண்டு ஆற்றாளாகிய தோழிக்குச் சொல்லியது.

(பி - ம்:) மூ. பிரியல்வாழி. பிரியின். வந்தவாறே. (௨)

௩௯௩. துறந்ததற் கொண்டு துயரடச் சாஅ
யறம்புலந் துறு பழிக்கு மளைக ணாட்டி
யெவ்வ நெஞ்சிற் கேம மாக
வந்தன ளோநின் மகளே
வெந்திறல் வெள்வேல் விடலைமுந் துறவே.

எ - து, உடன்போய்த் தலைமகள் மீண்டுவந்துழி அயலோர் அவள் தாய்க்குச் சொல்லியது.

(பி - ம்:) மூ. துறந்ததற்கொண்டும். உண்கணாட்டி. வெஞ்சினவெள் வேல். (௩)

௩௯௪. மாண்பில் கொள்கையொடு மயங்குதுயர் செய்த
வன்பி லறனு மருளிற் றம்ம
வெஞ்சுர மிறந்த வஞ்சி லோதிப்
பெருமட மான்பிணை யலைத்த
சிறுநுதற் குறுமகட் காட்டிய வம்மே.

எ - து, உடன்போய்த் தலைமகள்வந்துழித் தாய் சுற்றத்தார்க்குச்

சொல்லியது.

(பி - ம்:) மூ. அருளின்று. (௪)

௩௯௫. முளிவயிர்ப் பிறந்த வளிவளர் கூரெரிச்
சுடர்விடு நெடுங்கொடி விடர்முகை முழங்கு
மின்னு வருஞ்சுரந் தீர்ந்தன மென்மெல
வேகுமதி வாழியோ குறுமகள் போதுகலந்து
கறங்கிசை யருவி வீழும்
பிறங்கிருஞ் சோலைநம் மலைகெழு நாட்டே.

ஏ - து, உடன்போய் மீள்கின்ற தலைமகன் தலைமகட்குச் சொல்லியது. ()

## ௪0.—மறுதரவுப் பத்து.



௩௯௬. புலிப்பொறி வேங்கைப் பொன்னிணர் கொய்துநின்
கதுப்பய லணிபு மளவை பைபயச்
சுரத்திடை யயர்ச்சியை யாறுக மடந்தை
கல்கெழு சிறப்பி னம்மூ
ரெல்விருந் தாகிப் புகுக நாமே.

இதுவுமது.

(பி - ம்:) மூ. புலிப் பொலி வேங்கை. (௬)

௩௯௭. கவிழ்மயி ரெருத்திற் செந்நா யேற்றை
குருளைப் பன்றி கொள்ளாது கழியுஞ்
சுரநனி வாரா நின்றன ளென்பது
முன்னுற விரைந்தநீ ருரைமி
னின்னகை முறுவலென் னாயத் தோர்க்கே.

எ - து, உடன்போய் மீள்கின்ற தலைமகள் தன்னூர்க்குச்செல்கின்றா ரைக்கண்டு கூறியது.

(பி - ம்:) மூ. பன்றிக்கொள்ளாது. முன்னுறச்செல்வீருரைமின். (௭)

௩௯௮. புள்ளு மறியாப் பல்பழம் பழுனி
மடமா னறியாத் தடநீர் நிலைஇச்
சுரநனி யினிய வாகுக வென்று
நினைத்தொறுங் கலிழு மென்னினு
மிகப்பெரிது புலம்பின்று தோழிநம் மூரே.

எ - து, தலைமகள் மீண்டுவந்துழி அவட்குத் தோழிகூறியது.

(பி - ம்:) மூ. பல்பழம்பழூஉ. பெரிதாகலங்கின்று. (அ)

நகூகூ. நம்மனைச் சிலம்பு கழீஇ யயரினு
மெம்மனை வதுவை நன்மணங் கழிகெனச்
சொல்லி னெவனோ மற்றே வென்வேன்
மையற விளங்கிய கழலடிப்
பொய்வல் காளையை யீன்ற தாய்க்கே.

எ - து, உடன்கொண்டுபோன தலைமகன் மீண்டு தலைவியைத் தன் இல்லத்துக்கொண்டுபுக்குழி அவன்றாய் அவட்குச் சிலம்புகழிநோன்பு செய்கின்றாளெனக்கேட்ட நற்றாய் ஆண்டுநின்றும்வந்தார்க்குச் சொல்லியது. (கூ)



உ00. மள்ள ரன்ன மரவந் தழீஇ
மகளி ரன்ன வாடுகொடி நுடங்கு
மரும்பதங் கொண்ட பெரும்பத வேனிற்
காதல் புணர்ந்தன ளாகி யாய்கழல்
வெஞ்சின விறல்வேற் காளையொ
டின்றுபுகு தருமென வந்தன்று தூதே.

எ - து, உடன்போய் வதுவையயரப்பட்ட தலைவி, 'தலைவனோடு இன்று வரும்' எனக்கேட்ட செவிலித்தாய் நற்றாய்க்குச் சொல்லியது. (க0)

மறுதரவுப்பத்து முற்றிற்று.



பாலை முற்றிற்று.



ஓதலாந்தையார்.



# ரு.—முல்லை.

## சக.—செவிலி கூற்றுப் பத்து.

சoக. மறிப்பிடைப் படுத்த மான்பிணை போலப்
புதல்வ னடுவண னாக நன்று
மினிது மன்றவவர் கிடக்கை முனிவின்றி
நீனிற வியலகங் கவைஇய
வீனு மும்பரும் பெறலருங் குரைத்தே.

எ - து, கடிமனைச்சென்றுவந்த செவிலி உவந்தவுள்ளத்தளாய் நற்றாய்க்குச் சொல்லியது.

இனி வருகின்றபாட்டு ஒன்பதனுள் முதலெட்டினுக்கும் இஃது ஒக்கும். (க)

சoஉ. புதல்வற் கவைஇய தாய்புற முயங்கி
நசையினன் வதிந்த கிடக்கை பாணர்
நரம்புளர் முரற்கை போல
வினிதா லம்ம பண்புமா ருடைத்தே. (உ)

சoங. புணர்ந்தகா தலியிற் புதல்வன் றலையு
மமர்ந்த வுள்ளம் பெரிதா கின்றே
யகன்பெருஞ் சிறப்பிற் றந்தை பெயரன்
முறுவலி னின்னகை பயிற்றிச்
சிறுதே ருருட்டுந் தளர்நடை கண்டே.

(பி - ம்:) மூ. காதலின். பெயரான். (ங)

சoச. வாணுத லரிவை மகன்முலை யூட்டத்
தானவள் சிறுபுறங் கவையின னன்று
நறும்பூந் தண்புற வணிந்த
குறும்பல் பொறைய நாடுகிழ வோனே. (ச)

௪0௫. ஒண்சுடர்ப் பாண்டிற் செஞ்சுடர் போல
மனைக்குவிளக் காயினண் மன்ற கனைப்பெயற்
பூப்பல வணிந்த வைப்பிற்
புறவணி நாடன் புதல்வன் றாயே. (௫)

௪0௬. பாத ருண்கண் மகன்விளை யாடக்
காதலித் தழீஇ யினிதிருந் தனனே
தாதார் பிரச மூதும்
போதார் புறவி னாடுகிழ வோனே.

(பி - ம்:) மூ. காதலிற்றழீஇ. பிரசமூரலும். (௬)

௪0௭. நயந்த காதலித் தழீஇப் பாணர்
நயம்படு முரற்கையின் யாத்த பயன்றெரிந்
தின்புறு புணர்ச்சி நுகரு
மென்புல வைப்பி னாடுகிழ வோனே. (௭)

௪0௮. பாணர் முல்லை பாடச் சுடரிழை
வாணுத லரிவை முல்லை மலைய
வினிதிருந் தனனே நெடுந்தகை
துனிதீர் கொள்கைத்தன் புதல்வனொடு பொலிந்தே.

(பி - ம்:) மூ. தம்புதல்வன். (௮)

௪0௯. புதல்வற் கவைஇயினன் றந்தை மென்மொழிப்
புதல்வன் றாயோ விருவருங் கவையின
ளினிது மன்றவவர் கிடக்கை
நனியிரும் பரப்பினிவ் வுலகுட னுறுமே.

(பி - ம்:) மூ. நளியிரும்பரப்பு. (௯)

௪௧0. மாலை முன்றிற் குறுங்காட் டின்னகை
மனையோ டுணைவி யாகப் புதல்வன்
மார்பி னூரு மகிழ்நகை யின்பப்
பொழுதிற் கொத்தன் று மன்னே
மென்பிணித் தம்ம பாணன தியாழே.

எ - து, கடிமனைச்சென்ற செவிலி, தலைமகனும் தலைமகளும் புதல்வ

ஞெமி பாடல்கேட்டிருந்தமை கண்டு தன்னுள்ளே உவந்துசொல்லியது. (கo)

செவிலிகூற்றுப்பத்து முற்றிற்று.



## சஉ.—கிழவன் பருவம்பாராட்டுப் பத்து.



சகக. ஆர்குர லெழிலி யழிதுளி சிதறிக்
கார்தொடங் கின்றாற் காமர் புறவே
வீழ்தரு புதுப்புன லாடுகந்
தாழிருங் கூந்தல் வம்மதி விரைந்தே.

எ - து, பருவங்குறித்துப் பிரிந்ததலைமகன் அப்பருவத்திற்கு முன்னே வந்து தலைவியொடுகூடிச் செல்லாநின்றுழிப் பருவம்வந்ததாகத் தான் பருவத்திற்குமுன்னே வந்தமைதோன்றக் கூறுவான் தலைவிக்கு உரைத்தது. (க)

சகஉ. காயா கொன்றை நெய்தன் முல்லை
போதவிழ் தளவமொடு பிடவலர்ந்து கவினிப்
பூவணி கொண்டன்றாற் புறவே
பேரமர்க் கண்ணி யாடுகம் விரைந்தே.

இதுவுமது.

(ப - ம:) விளையாட்டுநயப்புக் கூறியது.

(பி - ம்:) மூ. காயாக்கொன்றை. பிடவமலர்ந்து. (உ)

சகக. நின்னுத லாறு நறுந்தண் புறவி
னின்னே போல மஞ்ஞை யாலக்
கார்தொடங் கின்றாற் பொழுதே
பேரிய லரிவை நாநயத் தகவே.

இதுவுமது. (௩)

சகச. புள்ளு மாவும் புணர்ந்தினி துகளக்
கோட்டவுங் கொடியவும் பூப்பல பழுனி
மெல்லிய லரிவை கண்டிகு
மல்ல லாகிய மணங்கமழ் புறவே.

இதுவுமது. (ச)

சகரு. இதுவே மடந்தைநா மேவிய பொழுதே
யுதுவே மடந்தைநா முள்ளிய புறவே
யினிதுடன் கழிக்கி னிளமை
யினிதா லம்ம வினியவர்ப் புணர்வே.

இதுவுமது.

(பி - ம்:) மூ. இனியவர்புணர்வே. (ரு)



## ஐங்குறுநூறு.

சகசு. போதார் நறுந்துகள் கவினிப் புறவிற்
ருதார்ந்து
களிச்சுரும் பரற்றுங் காமர் புதலின்
மடப்பிடி தழீஇய மாவே
சுடர்த்தொடி மடவரற் புணர்ந்தனம் யாமே.

எ - து, பருவங்குறித்துப் பிரிந்ததலைமகன் பருவத்திற்கு முன்னே வந்து தலைவியொடுகூடிச் செல்லாநின்றுழி அதற்கு இனியனாய்த் தன்னுள்ளே சொல்லுவான்போன்று தலைவி அறியுமாற்றாற் கூறியது. (சு)

சகஎ. கார்கலந் தன்றாற் புறவே பலவுட
னேர்பரந் தனவாற் புனமே யேர்கலந்து
தாதார் பிரச மொய்ப்பப்
போதார் கூந்தன் முயங்கின ளெம்மே.

இதுவுமது. (எ)

சகஅ. வானம் பாடி வறங்களைந் தானு
தழிதுளி தலைஇய புறவிற் காண்வர
வானர மகளோ நீயே
மாண்முலை யடைய முயங்கி யோயே.

எ - து, குறித்தபருவத்திற்கு உதவவாராநின்ற வழிக்கண் உருவுவெளிப்பாடு கண்டதலைமகன் இல்லத்துப்புகுந்துழித் தலைமகட்குச் சொல்லியது. (அ)

சகக. உயிர்கலந் தொன்றிய செயிர்தீர் கேண்மைப்
பிரிந்துறல் றியா விருந்து கவவி
நம்போ லயவரப் புணர்ந்தன
கண்டிகு மடவரல் புறவின் மாவே.

எ - து, இன்பநுகர்ச்சிக்கேற்ற பருவம்வந்துழித் தலைமகளொடு புறவிற் சென்றதலைமகன் அவ்விடத்துமாக்களை அவட்குக்காட்டிச் சொல்லியது.

(பி - ம்:) மூ. பிரிந்துறுவறியா. (கூ)

சஉ0. பொன்னென மலர்ந்த கொன்றை மணியெனத்
தேம்படு காயா மலர்ந்த தோன்றியொடு
நன்னல மெய்தினை புறவே நின்னைக்
காணிய வருதும் யாமே
வாணுத லரிவையொ டாய்நலம் படர்ந்தே,

## சங.—விரவுப் பத்து. கஉரு

எ - து, குறித்தபருவத்து எய்திய அணித்தாகவந்த தலைமகன் பருவத்தால அணிகொண்ட புறவைநோக்கிச் சொல்லியது. (க0)

## கிழவன் பருவம்பாராட்டுப்பத்து முற்றிற்று.



## சங.—விரவுப் பத்து.



சஉக. மாலை வெண்காழ் காவலர் வீச
நறும்பூம் புறவி னொடுங்குமுய லிரியும்
புன்புல நாடன் மடமகள்
ணலங்கிளர் பணைத்தோள் விலங்கின செலவே.

எ - து, வினை பலவற்றிற்கும் பிரிந்தொழுகுந்தலைமகன் பின்பு மனைவயின் நீங்காதொழுகுகின்ற காதலுணர்ந்தோர் சொல்லியது.

(ப - ரை:) வெண்காழென்றது, மாலைக்காலத்து முயலெறியுந்தடியை.

(பி - ம்:) மூ. புன்புனநாடன். (க)

சஉஉ. கடும்பரி நெடுந்தேர்க் கால்வல் புரவி
நெடுங்கொடி முல்லையொடு தளவமல ருதிர
விரையுபு கடைஇநாஞ் செல்லி
னிரைவளை முன்கை வருந்தலோ விலளே.

எ - து, மீள்கின்றான் தேர்ப்பாகன்கேட்பச் சொல்லியது. (உ)

சஉ௩. மாமமழை யிடியூஉத் தளிசொரிந் தன்றே
வாணுதல் பசப்பச் செலவயர்ந் தனையே
யாமே நிற்றுறந் தமையல
மாய்மல ருண்கணு நீர்நிறை நதனவே.

எ - து, கார்ப்பருவத்தே பிரியக்கருதிய தலைமகற்குத் தோழி தலைமகளது ஆற்றாமைகூறிச் செலவழுங்குவித்தது.

(ப - ரை:) இது, கார்ப்பருவத்தே கூறுதலான் முல்லையாயிற்று. (௩)

சஉச. புறவணி நாடன் காதன் மடமக
ளொண்ணுதல் பசப்ப நீசெலிற் றெண்ணீர்ப்
போதவிழ் தாமரை யன்னநின்
காதலம் புதல்வ னழுமினி முலைக்கே.

இதுவுமது.

(பி - ம்;) மூ. அழுமணி. (ச)



சஉ௫. புன்புறப் பேடை சேவ லின்புற
மன்ன ரியவரி னிரங்குங் கானம்
வல்லை நெடுந்தேர் கடவி
னல்ல லருநோ யொழித்தலெமக் கெளிதே.

எ - து, வினைமுற்றி மீளுந்தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.(௫)

சஉ௬. வென்வேல் வேந்த னருந்தொழி றுறந்தினி
நன்னுதல் யானே செலவொழிந் தனனே
முரசுபா டதிர வேவி
யரசுபடக் கடக்கு மருஞ்சமத் தானே.

எ - து, வேந்தற்குத் தானைத்தலைவனாய் ஒழுகும்தலைமகன் பிரிந்து வினைமுடித்துவந்து தலைவியோடு உறைகின்றுழி, 'இன்னும்பிரியுங்கொல்'

என்று கருதிய தலைமகட்குக் கவற்சிதீரச் சொல்லியது. (சு)

சஉஎ. பேரமர் மலர்க்கண் மடந்தை நீயே
காரெதிர் பொழுதென விடலொல் லாயே
போருடை வேந்தன் பாசறை
வாரா னென்னச் செலவழுங் கினனே.

எ - து, 'பிரியுங்கொல்' என்று ஐயுற்று உடன்படாமை மேற்கொண்டு ஒழுகுகின்ற தலைமகட்குத் தான் பிரிவொழிந்ததற்குக் காரணங்கூறித் தேற்றியது.

(பி - ம்:) கருத். தான் இனிப்பிரிவொழிந்த. (எ)

சஉஅ. தேர்செல வழுங்கத் திருவிற் கோலி
யார்கலி யெழிலி சோர்தொடங் கின்றே
வேந்துவிடு விழுத்தொழி லொழிய
யான்றொடங் கினனா னிற்புறந் தரவே.

எ - து, 'பிரியுங்கொல்' என்று ஐயுற்றதலைமகள் ஐயந்தீரத் தலைமகன் சொல்லியது.

(பி - ம்:) மூ. கார்தொடங்கின்றே. புறந்தரலே. (அ)

சஉகூ. பல்லிருங் கூந்தல் பசப்பு நீவிடிற்
செல்வேந் தில்ல யாமே செற்றார்
வெல்கொடி யரண முருக்கிய
கல்லா யானை வேந்துபகை வெலற்கே.

## சச.—புறவணிப் பத்து. கஉஎ

எ - து, குறிப்பினாற் பிரிவுணர்ந்து வேறுபட்டதலைமகள் உடம்படுவாளாக வேந்தற்கு உற்றுழிப்பிரியுந் தலைமகன் சொல்லியது. (க)

சங0. நெடும்பொறை மிசைய குறுங்காற் கொன்றை
யடர்பொன் னென்னச் சுடரிதழ் பகருங்
கான்கெழு நாடன் மகளே
யழுத லான்றிசி னழுங்குவல் செலவே.

எ - து, 'பிரியுங்கொல்' என்று ஆற்றாளாகிய தலைமகட்குத் தலைமகன்

பருவவரவுகூறி 'இதுகாரணத்தாலும் பிரியேன்' எனச் சொல்லியது. (க0)

விரவுப்பத்து முற்றிற்று.

## சுச.—புறவணிப் பத்து.

சுரு௧. நன்றே காதலர் சென்ற வாறே
யணிநிற விரும்பொறை மீமிசை
மணிநிற வுருவின தோகையு முடைத்தே.

எ - து, 'பிரிவுடம்பட்டும் ஆற்றுயாகின்றது என்னை' என்று வினவிய வழி, 'அவர்போனசுரம் போகற்கரிதென்று ஆற்றேனுகின்றேன்' என்ற தலைமகட்கு 'வேனிற்காலங்கழிந்தது; கார்ப்பருவத்தோற்றத்திலே பிரிந்தாராகலான், அச்சுரம் நன்று' எனத் தோழிசொல்லி ஆற்றுவித்தது.

இனி வருகின்றபாட்டு ஒன்பதுக்கும் இஃது ஒக்கும்.

(பி - ம்:) மூ. இரும்புறமீமிசை. அரும்பொறை. உருவின்றேகை. (க)

சுரு௨. நன்றே காதலர் சென்ற வாறே
சுடுபொ னன்ன கொன்றை சூடிக்
கடிபுகு வனர்போன் மள்ளரு முடைத்தே.

(பி - ம்:) மூ. சுடும்பொன். (உ)

சுரு௩. நன்றே காதலர் சென்ற வாறே
நீர்படப் வெழிலி வீசுங்
கார்ப்பெயற் கெதிரிய கானமு முடைத்தே. (௩)

சுரு௪. நன்றே காதலர் சென்ற வாறே
மறிபுடை மான்பிணை யுகளத்
தண்பெயல் பொழிந்த வின்பமு முடைத்தே. (௪)

௧௨அ ஐங்குறுநூறு.

சுரு௫. நன்றே காதலர் சென்ற வாறே
நிலனணி நெய்தன் மலரப்
பொலனணி கொன்றையும் பிடவமு முடைத்தே. (௫)

சருசா. நன்றே காதலர் சென்ற வாறே
நன்பொ னன்ன சுடரிணர்க்
கொன்றையொடு மலர்ந்த குருந்துமா ருடைத்தே. (சு)

சருஎ. நன்றே காதலர் சென்ற வாறே
யாலித் தண்மழை தலைஇய
வாலிய மலர்ந்த முல்லையு முடைத்தே. (எ)

சருஅ. நன்றே காதலர் சென்ற வாறே
பைம்புதற் பல்பூ மலர
வின்புறத் தகுந பண்புமா ருடைத்தே. (அ)

சருகூ. நன்றே காதலர் சென்ற வாறே
குருந்தங் கண்ணிக் கோவலர்
பெருந்தண் ணிலைய பாக்கமு முடைத்தே. (கூ)

சச0. நன்றே காதலர் சென்ற வாறே
தண்பெய லளித்த பொழுதி
னொண்சுடர்த் தோன்றியுந் தளவமு முடைத்தே. (க0)

## புறவணிப்பத்து முற்றிற்று.



## சரு.—பாசறைப் பத்து.



சசக. ஐய வாயின செய்யோள் கிளவி
கார்நா ளுருமொடு கையறப் பிரிந்தென
நோய்நன்கு செய்தன வெமக்கே
யாமுறு துயரமவ ளறியினோ நன்றே.

எ - து, சென்றவினை முடியாமையிற் கார்காலம்வந்தவிடத்து மீளப் பெறாத தலைமகன் தலைமகளுழைநின்றும் வந்த தூதர்வார்த்தைகேட்டு இரங்கியது.

(ப - ரை:) கார்நாளுருமொடு நோய்நன்குசெய்தன, செய்யோள் கிளவி யெனக் கூட்டுக. (க)

சசஉ. பெருஞ்சின வேந்த னருந்தொழி றணியின்
விருந்துநனி பெறுதலு முரியண் மாதோ
விருண்டுதோன்று விசும்பி னுயர்நிலை யுலகத்
தருந்ததி யனைய கற்பிற்
குரும்பை மணிப்பூட் புதல்வன் றாயே.

எ - து, வேந்தற்கு உற்றுழிப்பிரிந்ததலைமகன் வினைமுடியாமையிற் பாசறைக்கணிருந்து பருவவரவின்கட் சொல்லியது.

(பி - ம்:) மூ. மணிப்பூண்டபுதல்வன். (உ)

சசங. நனிசேய்த் தென்னாது நற்றே ரேறிச்சென்
றிலங்கு நிலவி னிளம்பிறை போலக்
காண்குவெந் தில்லவவள் கவின்பெறு சுடர்நுதல்
விண்ணுய ரரண்பல வௌவிய
மண்ணுறு முரசின் வேந்துதொழில் விடினே.

இதுவுமது. (ங)

சசச. பெருந்தோண் மடவரற் காண்குவெந் தில்லை
நீண்மதி லரணம் பாய்ந்தெனத் தொடிபிளந்து
வைந்நுதி மழுகிய தடங்கோட் டியானை
வென்வேல் வேந்தன் பகைதணிந்
தின்னுந் தன்னாட்டு முன்னுதல் பெறினே.

இதுவுமது.

(பி - ம்:) மூ. மழுங்கிய. (ச)

சசரு. புகழ்சால் சிறப்பிற் காதலி புலம்பத்
துறந்துவந் தனையே யருந்தொழிற் கட்டூர்
நல்லேறு தழீஇ நாகுபெயர் காலை
யுள்ளுதொறுங் கலிழு நெஞ்சம்
வல்லே யெம்மையும் வரவிழைத் தனையே.

எ - து, பாசறைக்கணிருந்த தலைமகன் பருவவரவின்கண் தலைமகளை நினைந்து நெஞ்சொடுபுலந்து சொல்லியது.

(பி - ம்:) மூ. தழீஇய. வரவழைத்தனையே. (ரு)

சசசு. முல்லை நாறுங் கூந்தல் கமழ்கொள
நல்ல காண்குவ மாஅ யோயே
பாசறை யருந்தொழி லுதவிநங்
காதனன் னாட்டுப் போதரும் பொழுதே.

எ - து, பாசறைக்கணிருந்த தலைமகன் பருவவரவின்கண் உருவுவெளிப் பாடுகண்டு சொல்லியது. (சு)

சசஎ. பிணிவீடு பெறுக மன்னவன் றொழிலே!
பனிவளர் தளவின் சிரல்வாய்ச் செம்முகை
யாடு சிறைவண் டவிழ்ப்பப்
பாடல் சான்ற காண்கம்வா ணுதலே.

எ - து, வேந்தற்கு உற்றுழிப்பிரிந்த தலைமகன், அவன் வினைமுற்றி மீளும்வேட்கையனாய்ப் பருவவரவின்கண் தலைமகளை நினைந்துச் சொல்லியது.
(பி - ம்:) மூ. சிறைவண்டலைப்ப. (எ)

சசஅ. தழங்குரன் முரசங் காலை யியம்பக்
கடுஞ்சின வேந்தன் றொழிலெதிர்ந் தனனே
மெல்லவன் மருங்கின் முல்லை பூப்பப்
பொங்குபெயற் கனைதுளி காரெதிர்ந் தன்றே
யஞ்சி லோதியை யுள்ளுதொறுந்
துஞ்சா தலமர லெமெதிர்ந் தனமே.

எ - து, வேந்தற்கு உற்றுழிப்பிரிந்த தலைமகன் பருவம்வந்தவிடத்தினும் மீளப்பெறாது அரசன்செய்தியும் பருவத்தின்செய்தியும் தன்செய்தியுங் கூறி ஆற்றானயது.

(பி - ம்:) மூ. தழங்குகுரல். (அ)

சசகூ. முரம்புகண் ணுடையத் திரியுந் திகிரியொடு
பணைநிலை முணைஇய வயமாப் புணர்ந்து
திண்ணிதின் மாண்டன்று தேரே
யொண்ணுதற் காண்குவம் வேந்துவினை விடினே.

எ - து, பாசறைக்கண் வேந்தனொடு வினைப்பொருட்டாற் போந்திருந்த தலைமகன் அவ்வேந்தன் மாற்றுவேந்தர் தருதிறைகொண்டு மீள்வானாகப்

பொருந்துழித் தானும் மீட்சிக்குத் தேர்சமைத்த எல்லைக்கண்ணே அவ்வரசன் பொருத்தந்தவிர்ந்து மீண்டும் வினைமேற்கொண்டானாகச் சொல்லியது.

(பி - ம்:) கருத்.'மீள்வானாகப்பிரிந்துழித் தேர்சமைத்து அழைத்துழைக் கண்ட எல்லைக்கண்ணே, (கூ)

# சசு.—பருவங்கண்டு கிழத்தியுரைத்தபத்து. கசுக

சருo, முரசுமா றிரட்டு மருந்தொழிற் பகைதணிந்து
நாடுமுன் னியரோ பீடுகெழு வேந்தன்
வெய்ய வுயிர்க்குநோய் தலைபயச்
செய்யோ ளிளமுலைப் படூஉமியரென் கண்ணே.

எ - து, வேந்தற்கு உற்றுழிப்பிரிந்த தலைமகன் வினைமுற்றுமையிற் பாசறைக்கணிருந்து தன் மனக்கருத்துரைத்தது.

(பி - ம்:) மூ. முரசமாறு. நோதணிய. இடைமுலை. (சo)

பாசறைப்பத்து முற்றிற்று.



# சசு.—பருவங்கண்டு கிழத்தியுரைத்தபத்து.



சருக. கார்செய் காலையொடு கையறப் பிரிந்தோர்
தேர்தரு விருந்திற் றவிர்குதல் யாவது
மாற்றருந் தானை நோக்கி
யாற்றவு மிருத்தல் வேந்தனது தொழிலே.

எ - து, வேந்தற்கு உற்றுழிப்பிரிந்த தலைமகன்குறித்த பருவநினைந்து ஆற்றியிருந்ததலைமகள் அப் பருவவரவின்கட் பாசறையினின்றும் வந்தார் அரசன்செய்தி கூறக்கேட்டு ஆற்றளாய்ச் சொல்லியது.

(பி - ம்:) மூ. தருதல்யாவது. (க)

சருஉ. வறந்த ஞாலந் தெளிர்ப்ப வீசிக்
கறங்குகுரல் லெழிலி கார்செய் தன்றே
பகைவெங் காதலர் திறைதரு முயற்சி
மென்றோ ளாய்கவின் மறையப்

பொன்புனை யிரத் தலர்செய் தன்றே.

எ - து, குறித்தபருவத்து வாராது தலைமகன் பகைமேல்முயல்கின்ற முயற்சிகேட்ட தலைமகள் கூறியது. (உ)

சருந. அவலூறுந் தேனா தெவிட்ட மிசைதொறும்
வெங்குரற் புள்ளின மொலிப்ப வுதுக்காண்
கார்தொடங் கின்றாற் காலை யதனா
னீர்தொடங் கினவா னெடுங்கணவர்
தேர்தொடங் கின்றா னம்வயி னானே.



எ - து, பருவங்கண்டு ஆற்றாளாகியதலைமகள் தோழிக்குச் சொல்லியது.

(ப - ரை:) 'தேர்தொடங்கின்றால்' என்பது தேர் வரத்தொடங்குதல் இல்லையாயிற்றென்றவாறு. (ந)

சருச. தளவின் பைங்கொடி தழீஇப் பையென
நிலவி னன்ன நேரரும்பு பேணிக்
கார்நயந் தெய்து முல்லையவர்
தேர்நயந் துறையுமென் பரமைக் கவினே.

எ - து, பருவவரவின்கண் தலைமகள் ஆற்றாளாய்த் தோழிக்குச் சொல்லியது. (ச)

சருரு. அரசுபகை தணிய முரசுபடச் சினைஇ
யார்குர லெழிலி கார்தொடங் கின்றே
யளியவோ வளிய தாமே யொளிபசந்து
மின்னிழை நெகிழச் சாஅய்த்
தொன்னல மிழந்தவென் றடமென் றோளே.

எ - து, ஆற்றுவிக்குந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

(ப - ரை:) அரசு பகைதணிந்து எல்லாரும் மீளும்வண்ணம் கார்வந்தது; இத் தோளுக்குரியவரோ போதாரென்றவாறு. (இ)

சருசு. உள்ளார் கொல்லோ தோழி வெள்ளிதழ்ப்
பகன்மதி யுருவிற் பகன்றை மாமலர்
வெண்கொடி யீங்கைப் பைம்புத லணியு
மரும்பனி யளைஇய கூதி
ரொருங்கிவ ணுறைத றெளித்தகன் றோரே.

எ - து, குறித்தபருவம் வரவும் தலைமகன் வ[illegible]ருக, ஆற்றாளாகிய தலைமகள் தோழிக்குச் சொல்லியது. (சு)

சுசுஎ. பெய்பனி நலிய வுய்தல்செல் லாது
குருகினை நரலும் பிரிவருங் காலைத்
துறந்தமை கல்லார் காதலர்
மறந்தமை கல்லாதென் மடங்கெழு நெஞ்சே.

எ - து, பருவவரவின்கண் ஆற்றுவிக்குந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

(பி - ம்:) மூ. பெயர்பனிநலிய. (எ)

## சஎ.—தோழி வற்புறுத்தபத்து. கஙங

சுசுஅ. துணர்க்காய்க் கொன்றை குழற்பழ மூழ்த்தன
வதிர்பெயற் கெதிரிய சிதர்கொ டண்மலர்
பாணர் பெருமகன் பிரிந்தெனை
மாணல மிழந்தவென் கண்போன் றனவே.

எ - து, பருவங்குறித்துப்பிரிந்த தலைமகன்வரவுபார்த்திருந்த தலைமகள் பருவமுதிர்ச்சிகூறி ஆற்றாளாயுரைத்தது.

(ப - ரை:) சிதர் - சிந்துதல். (அ)

சுசுகூ. மெல்லிறைப் பணைத்தோட் பசலை தீரப்
புல்லவு மியைவது கொல்லோ புல்லா
ராரரண் கடந்த சீர்கெழு தானை
வெல்போர் வேந்தனொடு சென்ற
நல்வய லூர னறுந்தண் மார்பே.

எ - து, 'வேந்தன் வினைமுற்றினன்; நின்காதலர் கடுகவருவர்'; எனக் கேட்டதலைமகள் தோழிக்குச் சொல்லியது.

(பி - ம்:) மூ. பசலைநீங்க. இசைவது.

கருத். கேட்டதோழிக்குத் தலைமகள் சொல்லியது. (கூ)

சுஎ0. பெருஞ்சின[illegible] வேந்தனும் பாசறை முனியா
னிருங்கலி வெற்பன் றூதுந் தோன்று
தலைதயிலை வாழை முழுமுத லசைய

விண்ஞ வாடையு மலைக்கு
மென்ஞ குவென்கொ லளியென் யானே.

எ - து, வேந்தற்கு உற்றுழிப்பிரிந்த தலைமகனைப் பருவமுதிர்ச்சியினும் வரக்காணுது தலைமகள் சொல்லியது. (கo)

## பருவங்கண்டு கிழத்தியுரைத்தபத்து முற்றிற்று.

## சஎ.—தோழி வற்புறுத்த பத்து.

சசுக. வான்பிசிர்க் கருவியிற் பிடவுமுகை தகையக்
கான்பிசிர் கற்பக் கார்தொடங் கின்றே
யினையல் வாழி தோழி யெனையது உ-
நிற்றுறந் தமைகுவ ரல்லர்
வெற்றி வேந்தன் பாசறை யோரே.



எ - து, பிரிவிடை வேறுபட்டகிழத்தியைத் தோழி வரவுகூறி, 'உரைத்த பருவம்வந்ததாகலான் அவர்வருவர்' என வற்புறீஇயது.

(ப - ரை:) 'கான்பிசிர்கற்ப' என்றது, மழைபெய்திட்டால் மரம்பெய்யு மென்னும் முறைமைபற்றிக் கூறியவாறு. (க)

சசுஉ. ஏதில பெய்ம்மழை காரென மயங்கிய
பேதையங் கொன்றைக் கோதைநிலை நோக்கி
யெவனினி மடந்தைநின் கலிழ்வே நின்வயிற்
றகையெழில் வாட்டுந ரல்லர்
முகையவிழ் புறவி னாடிறந் தோரே.

எ - து, பருவங்கண்டு வேறுபட்டகிழத்தியைத் தோழி, 'பருவமன்று' என வற்புறீஇயது.

(பி - ம்:) மூ. மயங்கிப். எவனனி. (உ)

சசுங. புதன்மிசை நறுமலர் கவின்பெறத் தொடரிநின்
னலமிகு கூந்த றகைகொளப் புனைய
வாரா தமையலோ விலரே நேரார்
நாடுபடு நன்கலந் தரீஇயர்

நீடினர் தோழிநங் காத லோரே.

எ - து, குறித்தபருவம்வரவும் தலைமகன் தாழ்த்துழித் தோழி காரணங்கூறி வற்புறீஇயது. (௩)

௪௬௪. கண்ணெனக் கருவிளை மலரப் பொன்னென
விவர்கொடிப் பீர மிரும்புதன் மலரு
மற்சிர மறக்குந ரல்லர்நின்
னற்றோண் மறுவரற் குலமரு வோரே.

எ - து, வரைந்த அணிமைக்கண்ணே பிரிந்த தலைமகன்குறித்த பருவம் வந்துழி, 'இதனை மறந்தார்' என்ற தலைமகட்குத் தோழி, 'வரைவதற்குமுன்பு அவரன்புடைமை இதுவாகலான் மறத்தல்கூடாது' எனச்சொல்லி வற்புறீஇயது.

(பி - ம்:) மூ. பீரமிரும்புதல். (௪)

௪௬௫. நீரிகு வன்ன நிமிர்பரி நெடுந்தேர்
கார்செய் கானம் பின்படக் கடைஇ
மட்ங்குமல ரகல நீயினி து முயங்க
வருவர் வாழி தோழி
செருவெங் குருசி றணிந்தனன் பகையே.

## ௪௭.—தோழி வற்புறுத்தபத்து. ௧௬௫

எ - து, பருவங்கண்டு வேறுபட்டதலைமகளை, வேந்தன் வினைமுடித்தானெனக்கேட்டதோழி, 'வருவர்' என வற்புறீஇயது.

(ப - ளா:) நீரிகுவன்னவென்றது ...........

(பி - ம்:) மூ. நீரிரிகுவன்ன. (௫)

௪௬௬. வேந்துவிடு விழுத்தொழி லெய்தி யேந்துகோட்
டண்ணல் யானை யரசுவிடுத் தினியே
யெண்ணிய நாளகம் வருதல் பெண்ணியற்
காமர் சுடர்நுதல் விளங்குந்
தேமொழி யரிவை தெளிந்திசின் யானே.

எ - து, பிரிவின்கண் ஆற்றாளாகியதலைமகளை 'அவர்போனகாரியம் இடையூறின்றி முடித்துவருதல் பல்லாற்றானுந்தெளிந்தேன்' எனத் தோழி

சொல்லி ஆற்றுவித்தது. (௬)

௪௬௭. புனையிழை நெகிழச் சாஅய் நொந்துநொந்
தினையல் வாழியோ விருளை வினைவயிற்
சென்றோர் நீடினர் பெரிதெனத் தங்காது
நம்மினும் விரையு மென்ப
வெம்முரண் யானை விறற்போர் வேந்தே.

எ - து, தலைமகன் வினைவயிற்பிரிய ஆற்றாளாகியதலைமகளைத் தோழி வற்புறீஇயது.

(ப - ம்:) 'சென்றோர்நீடினர் பெரிது' என்பது............ (௭)

௪௬௮. வரிநுணல் கறங்கத் தேனா தெவிட்டக்
கார்தொடங் கின்றே காலை யினிநின்
னேரிறைப் பணைத்தோட் கார்விருந் தாக
வடிமணி நெடுந்தேர் கடைஇ
வருவ ரின்றுநங் காத லோரே.

எ - து, பிரிவுநீட ஆற்றாளாய தலைமகட்குத் தோழி பருவங்காட்டி, 'இன்றேவருவர்' என வற்புறீஇயது. (௮)

௪௬௯. பைந்தினை யுணங்கல் செம்பூழ் கவரும்
வன்புல நாடற் றரீஇய வலனேர்
பங்க ணிருவிசும் பதிர வேஎறொடு
பெயறொடங் கின்றே வானங்
காண்குவம் வம்மோ பூங்க ணோயே.



எ - து, பிரிவுநீட ஆற்றாளாகியதலைமகட்குத் தோழி, 'அவனை நமக்குத் தருதற்கு வந்ததுகாண் இப்பருவம்' எனக்காட்டி வற்புறீஇயது.

(ப - ம்:) வன்புலநாடனென்பது அக்க............ (௯)

௪௭௦. இருநிலங் குளிர்ப்ப வீசி யல்கலு
மரும்பனி யளைஇய வச்சிரக் காலை
யுள்ளார் காதல ராயி னொள்ளிழை
சிறப்பொடு விளங்கிய காட்சி
மறக்க விடுமோநின் மாமைக் கவினே.

எ - து, பருவம்வந்ததுகண்டு தாம் குறித்தஇதனை மறந்தாரென வேறுபட்டதலைமகளைத் தோழி வற்புறீஇயது.

(பி - ம்:) மூ. அற்சிரக்காலை. (கo)

## தோழி வற்புறுத்தபத்து முற்றிற்று.



## ச அ.—பாணன் பத்து.

சஎக. எவ்வளை நெகிழ மேனி வாடப்
பல்லித ழுண்கண் பனியலைக் கலங்கத்
துறந்தோன் மன்ற மறங்கெழு குருசி
லதுமற் றுணர்ந்தனை போலா
யின்னும் வருதி யென்னவர் தகவே.

எ - து, பருவவரவின்கண் தூதாகிவந்த பாணன்கூறியவழித் தோழி சொல்லியது. (க)

சஎஉ. கைவல் சீறியாழ்ப் பாண நுமரே
செய்த பருவம் வந்துநின் றதுவே
யெம்மி னுணரா ராயினுந் தம்வயிற்
பொய்படு கிளவி நாணலு
மெய்யா ராகுக ணேகோ யானே.

எ - து, குறித்தபருவம் வரவும் தலைமகன் வாரானாகியவழித் தூதாய் வந்த பாணற்குத் தோழி கூறியது.

(பி - ம்:) மூ. எய்யாராகல். (உ)



சஎங. பலர்புகழ் சிறப்பினுங் குருசி லுள்ளிச்
செலவுநீ நயந்தனை யாயின் மன்ற
வின்னா வரும்பட ரெம்வயிற் செய்த
பொய்வ லாளர் போலக்
கைவல் பாணவெம் மறவா நீமே.

எ - து, 'தலைமகன்பிரிந்தநாட்டிற் செல்வேம்' என்ற அவன்பாணற்குத்

தலைமகள் சொல்லியது. (௩)

சஎச. மையறு சுடர்நுதல் விளங்கக் கறுத்தோர்
செய்யரண் சிதைத்த செருமிகு தானையொடு
கதழ்பரி நெடுந்தே ரதர்படக் கடைஇச்
சென்றவர்த் தருகுவ லென்னு
நன்று லம்ம பாணன தறிவே.

எ - து, பிரிவின்கண் ஆற்றுமைகண்டு, 'தூதாகிச்சென்று அவனைக் கொணர்வல்' என்ற பாணன்கேட்பத் தலைமகள் கூறியது. (௪)

சஎரு. தொடிநிலை கலங்க வாடிய தோளும்
வடிநல னிழந்தவென் கண்ணு நோக்கிப்
பெரிதுபுலம் பினனே சீறியாழ்ப் பாண
னெம்வெங் காதலொடு பிரிந்தோர்
தம்மோன் போலான் பேரன் பினனே.

எ - து, பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் தலைமகனுழைநின்று வந்தார் கேட்பத் தன்மெலிவு கண்டு இரங்கிய பாணனைத் தோழிக்கு மகிழ்ந்துசொல்லியது. (௫)

சஎசு. கருவி வானங் கார்சிறந் தார்ப்பப்
பருவஞ் செய்தன பைங்கொடி முல்லை
பல்லான் கோவலர் படலைக் கூட்டு
மன்பின் மாலையு முடைத்தோ
வன்பில் பாண வவர்சென்ற நாடே.

எ - து, 'பிரிவாற்றுமை அவற்கும் உளதன்றே, நீ வேறுபடுகின்றது என்னை' என்றபாணற்குத் தலைமகள் கூறியது.

(பி - ம்:) ௧. சென்றநாட்டே. (௬)

கஅ



சஎஎ. பனிமலர் நெடுங்கண் பசலை பாயத்
துனிமலி துயரமொ டரும்பட ருழப்போள்
கையறு நெஞ்சிற் குயவுத்துணை யாகச்
சிறுவளைத் தங்குவை யாயிற்

காண்குவை மன்னூற் பாணவெங் தேரே.

எ - து, தலைமகன்மாட்டுப் பாணனைத் தூதாகவிடுத்த தலைமகள் கூறியது.

(பி - ம்:) மூ. நெஞ்சத்துயவுத்துணையாகி. (எ)

சஎஅ. நீடின மென்று கொடுமை தூற்றி
வாடிய நுதல வாகிப் பிறிதுநினைந்
தியாம்வெங் காதலி நோய்மிகச் சாஅய்ச்
சொல்லிய துறைமதி நீயே
முல்லை நல்யாழ்ப் பாணமற் றெமக்கே.

எ - து, பிரிந்துறையுந் தலைமகன் தலைமகள்விட்ட தூதாய்ச்சென்ற பாணனை, 'அவள் சொல்லியதிறம் கூறு' எனக் கேட்டது.

(பி - ம:) மூ. பெரிதுநினைத்து. பெரிதுநினைந்து. (அ)

சஎகூ. சொல்லுமதி பாண சொல்லுதோ றினிய
நாடிடை விலங்கிய வெம்வயி னூடொறு
மரும்பனி கலந்த வருளில் வாடை
தனிமை யெள்ளும் பொழுதிற்
பனிமலர்க் கண்ணி கூறிய தெமக்கே.

எ - து, தலைவிவிடத் தூதாய்ச்சென்ற பாணன்மாற்றங் கூறக்கேட்ட தலைமகன், 'இவ்வாடைவருத்தத்திற்கு மருந்தாக இன்னுங்கூறவேண்டும்' எனக் கூறியது. (கூ)

சஅ0. நினக்கியாம் பாணரு மல்லே மெமக்கு
நீயுங் குருசிலை யல்லை மாதோ
நின்வெங் காதலி தன்மனைப் புலம்பி
யீரித ழுண்க ணுகுத்த
பூசல் கேட்டு மருளா தோயே.

எ - து, தலைமகட்குத் தூதாய்ப் பாசறைக்கட்சென்ற பாணன் தலைமகனை நெருங்கிச்சொல்லியது. (க0)

## பாணன்பத்து முற்றிற்று.



## சகூ.—தேர்வியங்கொண்டபத்து.

## ௪௯.—தேர்வியங்கொண்ட பத்து.



௪௮௧. சாயிறைப் பணைத்தோ ளவ்வரி யல்குற்
சேயிழை மாதரை யுள்ளி நோய்விட
முள்ளிட் டூர்மதி வலவநின்
புள்ளியற் கலிமாப் பூண்ட தேரே.

எ - து, வினைமுற்றிமீண்ட தலைமகன் தேர்ப்பாகற்குக் கூறியது.
இனி வருகின்றபாட்டு ஒன்பதிற்கும் இஃது ஒக்கும். (௧)

௪௮௨. தெரியிழை யரிவைக்குப் பெருவிருந் தாக
வல்விரைந்து கடவுமதி பாக வெள்வேல்
வென்றடு தானை வேந்தனொடு
நாளிடைச் சேப்பி னூழியி னெடிதே.

(பி - ம்:) மூ. வெண்வேல். (௨)

௪௮௩. ஆறுவனப் பெய்த வலர்தா யினவே
வேந்துவிட் டனனே மாவிரைந் தனவே
முன்னுறக் கடவுமதி பாக
நன்னுத லரிவை தன்னலம் பெறவே. (௩)

௪௮௪. வேனி னீங்கக் கார்மழை தலைஇக்
காடுகவின் கொண்டன்று பொழுது பாடுசிறந்து
கடியக் கடவுமதி பாக
நெடிய நீடினம் நேரிழை மறந்தே. (௪)

௪௮௫. அரும்பட ரவல மவளுந் தீரப்
பெருந்தோ ணலம்வர யாமு முயங்க
ஏவுதி வலவ தேரே
மாமருண் டுகளு மலரணிப் புறவே. (௫)

௪௮௬. பெரும்புன் மாலை யானுது நினைஇ
யருப்பட ருழத்தல் யாவ தென்றும்
புல்லி யாற்றுப் புரையோட் காண
வள்புதெரிந் தூர்மதி வலவநின்
புள்ளியற் கலிமாப் பூண்ட தேரே. (௬)

சஅஏ. இதுமற் பிரிந்தோ ருள்ளும் பொழுதே
செறிதொடி யுள்ள முவப்ப
மதியுடை வலவ வேமதி தேரே. (எ)

சஅஅ. கருவி வானம் பெய்தொடங் கின்றே
பெருவிறற் காதலி கருதும் பொழுதே
விரியுளை நன்மாப் பூட்டிப்
பருவர றீரக் கடவுமதி தேரே. (அ)

சஅகூ. அஞ்சிறை வண்டி னரியின மொய்ப்ப
மென்புல முல்லை மலரு மாலைப்
பையு ணெஞ்சிற் றைய லுவப்ப
நுண்புரி வண்கயி றியக்கிநின்
வண்பரி நெடுந்தேர் கடவுமதி விரைந்தே. (கூ)

சகூO. அந்நீங் கிளவி தான்றர வெம்வயின்
வந்தன்று ......... .........
வாய்மணி நெடுந்தேர் கடவுமதி விரைந்தே. (கO)

## தேர்வியங்கொண்டபத்து முற்றிற்று.



## ருO.—வரவுச்சிறப்புரைத்த பத்து.

(பி - ம்:) வரவுசிறப்பு.



சகூக. காரதிர் காலையா மோவின்று நலிய
நொந்துநொந் துயவு முள்ளமொடு
வந்தனெ மடந்தைநின் னேர்தர விரைந்தே.

எ - து, வினைமுற்றிப் புகுந்ததலைமகன் தலைவிக்குச் சொல்லியது. (க)

சகூஉ. நின்னே போலு மஞ்ஞையு யாலநின்
னன்னுத லுறு முல்லை மலர
நின்னே போல மாமருண்டு நோக்க

நின்னே யுள்ளி வந்தனெ
னன்னுத லரிவை காரினும் விரைந்தே.
இதுவுமது.
(பி - ம்:) மூ. நோக்கி. (உ)

## ரு௦.—வரவுச்சிறப்புரைத்த பத்து. கசுக

சகூரு. ஏறுமுரண் சிறப்ப வேறுநெறி நிரங்க
மாதர் மான்பிணை மறியொடு மறுகக்
கார்தொடங் கின்றே காலை
நேரிறை முன்கைநின் னுள்ளியாம் வரவே.
இதுவுமது.
(பி - ம்:) மூ. கார்தொடங்கின்றால். (க)
சகூச. வண்டுதா தூதத் தேனா தெவிட்டத்
தண்கமழ் புறவின் முல்லை மலர
வின்புறுத் தன்று பொழுதே
நின்குறி வாய்த்தனந் தீர்கினிப் படரே.
இதுவுமது. (உ)
சகூரு. சென்னில மருங்கிற் பன்மலர் தாஅய்ப்
புலம்புதீர்ந் தினிய வாயின புறவே
பின்னிருங் கூந்த னன்னலம் புனைய
வுள்ளுதொறுங் கலிழு நெஞ்சமொடு
முள்ளெயிற் றரிவையாம் வந்த வாறே.
இதுவுமது.
(பி - ம்:) மூ. செந்நிலம். வந்தவாறே. (ரு)
சகூசு. மாபுதல் சேர வரகிணர் சிறப்ப
மாமலை புலம்பக் கார்கலித் தலைப்பப்
பேரமர்க் கண்ணி நிற்பிரிந் துறைநர்
தோடுணை யாக வந்தனர்
போதவிழ் கூந்தலும் பூவிரும் புகவே.

எ - து, குறித்தபருவத்தின்கண் தலைமகன் வந்துழித் தோழி தலைமகட்குச்சொல்லியது. (சு)

(பி - ம்:) அரசிறை.

சகூஎ. குறும்பல் கோதை கொன்றை மலர
நெடுஞ்செம் புற்ற மீயல் பகர
மாபசி மறுப்பக் கார்தொடங் கின்றே
பேரிய லரிவைநின் னுள்ளிப்
போர்வெங் குருசில் வந்த பாறே.

இதுவுமது. (எ)



சகூஅ. தோள்கவி னெய்தின தொடிநிலை நின்றன
நீள்வரி நெடுங்கண் வாள்வனப் புற்றன
வேந்துகோட் டியானை வேந்துதொழில் விட்டென
விரைசெல னெடுந்தேர் கடைஇ
வரையக நாடன் வந்த வாறே.

இதுவுமது. (அ)

சகூகூ. பிடவ மலரத் தளவ நனையக்
கார்கவின் கொண்ட கானங் காணின்
வருந்துவள் பெரிதென வருந்தொழிற் ககலாது
வந்தன ரானங் காதல
ரந்தீங் கிளவிநின் னுயர்நலங் கொண்டே.

இதுவுமது. (கூ)

ருOO. கொன்றைப் பூவிற் பசந்த வுண்கண்
குன்றக நெடுஞ்சுனைக் குவளை போலத்
தொல்கவின் பெற்றன விவட்கே வெல்போர்
வியனெடும் பாசறை நீடிய
வயமான் றோன்றல் வந்த வாறே.

எ - து, வினைமுற்றிவந்த தலைமகற்குத் தோழி சொல்லியது. (க0)

வரவுச்சிறப்புரைத்தபத்து முற்றிற்று.



முல்லை முற்றிற்று.

பேயனார்.

ஐங்குறுநூறு முற்றிற்று.

மருதமோ ரம்போகி நெய்தலம் மூவன்
கருதுங் குறிஞ்சி கபிலர் - கருதிய
பாலையோ தலாந்தை பனிமுல்லை பேயனே
நூலையோ தைங்குறு நூறு.

இத்தொகைதொகுத்தார், புலத்துறைமுற்றிய கூடலூர்கிழார்; இத்தொகை தொகுப்பித்தார் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறையார்.

கசங

அடியிலுள்ள பாடல்கள், ஐங்குறுநூற்றுக் கையெழுத்துப்பிரதிகள் பலவற்றிற் காணப்படவில்லை; தென்காசிச் சுப்பையாபிள்ளையவர்கள்வீட்டுப் பிரதியொன்றில் மட்டும் இருந்தமையின், தனியே பதிப்பிக்கப்பட்டன.

க. உள்ளார் கொல்லோ தோழி சிள்ளெனப்
பருந்துவீழ்ந் தெடுத்த பைந்தலை யரவங்
காதறு கவண தேய்க்குந்
தீதுறு கள்ளியங் காடிறந் தோரே.

உ. உள்ளார் கொல்லோ தோழி முள்ளுடை
யலங்குகுலை யீந்தின் சிலம்பிபொதி செங்காய்
துகில்பொதி பவள மேய்க்கு
மகில்படு கள்ளியங் காடிறந் தோரே.

(தொல். சொல். உஅஅ - ம் சூ. நச். உரை; யா. வி; காரி. கக - ம் பா. உரை)

௩. உள்ளார் கொல்லோ தோழி முள்ளுடை
யிலவ மேறிய கலவ மஞ்ஞை
யெரிபுகு மகளி ரேய்க்கு
மரில்படு கள்ளியங் காடிறந் தோரே.

௪. உள்ளார் கொல்லோ தோழி வெள்ளைப்
புழுங்க னெல்லின் பொரிவீழ்த் தென்ன
நுண்குழிப் புற்றின் மண்கா லீயல்
கோல்பிடி குருட ரேய்க்கு
மாலுறு கள்ளியங் காடிறந் தோரே.

௫. எம்மூ ரல்ல தூர்நணித் தில்ல
வெம்முரட் செல்வன் கதிரு மூழ்த்தனன்
சேந்தனை சென்மோ பூந்தார் மார்ப
விளையண் மெல்லியண் மடந்தை
யரிய சேய பெருங்கான் யாறே.

(தொல். பொரு. ௪௦ - ம் சூ. நச். உரை; இறை. ௨௩ - ம் சூ. உரை)

## ௧௪௪

௬. அடும்பமை னெடுங்கொடி யுள்புதைந் தொளிப்ப
வெண்மணல் விரிக்குந் தண்ணந் துறைவன்
கொடிய னாயினு மாக
வவனே தோழியென் னுயிர்கா வலனே.

(தொல். பொரு. ௧௧௧ - ம் சூ. நச். உரை.)

# பிரயோகவிளக்கம்.



| | ஐங்குறுநூற்றுச் செய்யுளின் எண். | பாட்டின் பகுதி. | நூற்பெயர். | நூலின்பகுதி. | சூத்திரமுதலியவற்றின் எண். | உரையாசிரியர் பெயர். | அச்சுப்புத்தகத்தின் பக்க எண். |
|---|---|---|---|---|---|---|---|
| க | உ | ங | ச | ரு | சா | எ | அ |
| | ரு | ச | தொல். | பொரு. | ரு கூ அ | ந. | எ அ அ |
| | கூ | மு. | ,, | ,, | க ரு O | ,, | ங அ அ |
| | க க | உ | ,, | எழுத். | ச அ க | ,, | உ எ கூ |
| * | ,, | மு. | ,, | பொரு. | ரு ங | ,, | கூ எ |
| * | ,, | ,, | இ - வி. | | ங எ அ | | ங ச க |
| * | க உ | க, உ | தொல். | ,, | ச சா | ,, | அ கூ |
| * | ,, | மு. | ,, | ,, | ங O O | ,, | ரு ச O |
| * | க ங | ,, | ,, | ,, | க ச | ,, | ங ங |
| * | க ச | ,, | ,, | ,, | க ச எ | ,, | ங அ O |
| * | க எ | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| * | உ க | ச | ,, | ,, | ரு ங எ | ,, | எ சா சா |
| | ,, | மு. | யா - வி. | | எ க | | |
| * | ,, | ச | நன் - வி. | | ங O சா | | |
| * | உ ச | க, உ | தொல். | ,, | ங O ங | ,, | ரு ச ங |

|  |  |  |  |  |  |  |  |
|---|---|---|---|---|---|---|---|
| * | ,, | ,, | ,, | ,, | ௩௦௬ | ,, | ௫௪௪ |
| * | ,, | ,, | ,, | ,, | ௫௬௧ | ,, | ௭௭௬ |
| * | ௨௭ | மு. | ,, | ,, | ௧௫௦ | ,, | ௩௮௯ |
|  | ௩௦ | ,, | ,, | ,, | ௧௨ | ,, | ௨௪ |
| * | ௩௧-௪௦ | ௧ | நன் - வி. |  | ௪௩௮ |  |  |
| * | ,, | ,, | தொல். | சொல். | ௨௭௮ | ,, | ௧௮௫ |
| * | ௪௧ | ௧,௨ | ,, | பொரு. | ௨௩௦ | ,, | ௪௫௮ |
| * | ,, | மு. | ,, | ,, | ௩௦௦ | ,, | ௫௪௧ |
| * | ,, | ௧ | ,, | ,, | ௩௦௧ | ,, | ௫௪௨ |
| * | ,, | ,, | ,, | ,, | ௫௬௧ | ,, | ௭௭௬ |
| * | ,, | ௨ | ,, | ,, | ௩௦௦ | ,, | ௫௪௧ |
| * | ௪௨ | மு. | ,, | ,, | ௨௪௦ | ,, | ௪௬௫ |
| * | ௪௬ | ,, | ,, | ,, | ௧௪௭ | ,, | ௩௭௬ |
| * | ௫௧ | ,, | ,, | ,, | ௩௦௦ | ,, | ௫௪௦ |
|  | ,, | ௩ | ,, | எழுத். | ௨௪௬ | ,, | ௧௬௨ |

* இவ்வடையாளம், தனக்குநேரேயுள்ள ஐங்குறுநூற்றுச்செய்யுளுக்குக் குறிப்பிட்ட பழையவுரையில் விசேடவுரையிருத்தலைப் புலப்படுத்துவது.

௧௯



|  | ஐங்குறுநூற்றுச் செய்யுளின் எண். | பாட்டின் பகுதி. | நூற்பெயர். | நூலின்பகுதி. | சூத்திரமுதலியவற்றின் எண். | உரையாசிரியர் பெயர். | அச்சுப்புத்தகத்தின் பக்க எண். |
|---|---|---|---|---|---|---|---|
| ௧ | ௨ | ௩ | ௪ | ௫ | ௬ | ௭ | ௮ |

|  |  |  |  |
|---|---|---|---|
| * | ௫௫ | மு. | தொல். |
| * | ,, | ,, | ,, |
| * | ,, | உ | ,, |
| * | ௫௬ | மு. | ,, |
|  | ,, | உ | ,, |
| * | ௫௭ | மு. | ,, |
| * | ௫௮ | ,, | ,, |
| * | ௬௦ | ,, | ,, |
|  | ,, | ,, | நாற். |
| * | ௬௧ | ,, | தொல். |
| * | ௬௫ | ,, | ,, |
|  | ,, | ,, | நாற். |
| * | ௬௬ | ,, | தொல். |
| * | ௬௭ | ,, | ,, |
| * | ௬௮ | ,, | ,, |
| * | ௭௨ | ,, | ,, |

| | | | |
|---|---|---|---|
| | ௭௬ | ,, | ,, |
| * | ,, | ,, | ,, |
| * | ,, | ௪ | ,, |

| | | | |
|---|---|---|---|
| பொரு. | ௧௫௦ | ௩. | ௬௮௯ |
| ,, | ௧௪௨ | ,, | ௪௧௨ |
| ,, | ௬௦௦ | ,, | ௫௪௧ |
| ,, | ௧௫௦ | ,, | ௬௯௨ |
| சொல். | ௪௧௫ | ,, | ௨௪௪ |
| பொரு. | ௧௫௦ | ,, | ௬௯௦ |
| ,, | ,, | ,, | ௬௮௯ |
| ,, | ௧௨ | ,, | ௨௪ |
| ஒழி. | ௪௨ | | |
| பொரு. | ௬௦௦ | ,, | ௫௪௦ |

| | | | |
|---|---|---|---|
| ,, | ௧௪௭ | ,, | ௫௩௯ |
| கற். | ௭ | | |
| பொரு. | ௧௪௭ | ,, | ௫௮௫ |
| ,, | ,, | ,, | ௫௭௮ |
| ,, | ,, | ,, | ௫௮௫ |
| ,, | ௧௯௧ | ,, | ௪௨௯ |
| ,, | ,, | ,, | ,, |
| ,, | ௫௦௦ | ,, | ௬௪௦ |
| சொல். | ௨௯௭ | ,, | ௧௯௭ |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| * | ௭௪ | மு. | ,, | பொரு. | ௧௯௧ | ,, | ௪௨௯ |
| * | ,, | க | ,, | சொல். | ௨௯௭ | ,, | ௧௯௭ |
| * | ௭௮ | மு. | ,, | பொரு. | ௧௯௧ | ,, | ௪௨௯ |
| | ௮௬ | ,, | நாற். | கற். | ௮ | | |
| | ௯௧ | ,, | தொல். | பொரு. | ௧௨ | ,, | ௨௬ |
| * | ௯௨ | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| * | ,, | ,, | ,, | ,, | ௫௦௨ | ,, | ௬௪௨ |
| * | ,, | ,, | இ-வி. | | ௫௯௪ | | ௫௬௭ |
| | ௯௪ | ,, | நாற். | ஒழி. | ௪௨ | | |
| * | ௧௦௧ | ,, | தொல். | பொரு. | ௧௨ | ,, | ௨௪ |
| | ,, | க | நன்-வி. | | ௧௭௯ | | |
| | ௧௦௫ | மு. | தொல். | ,, | ௧௧௪ | ,, | ௫௨௫ |
| | ௧௦௪ | ,, | ,, | ,, | ௧௬௦ | ,, | ௫௯௩ |
| | ௧௦௮ | ,, | ,, | ,, | ௧௧௪ | ,, | ௫௨௫ |
| * | ,, | ,, | ,, | ,, | ௫௦௪ | ,, | ௬௪௫ |
| | ௧௦௯ | ,, | ,, | ,, | ௧௧௪ | ,, | ௫௨௫ |

| | | | |
|---|---|---|---|
| | கக0 | மு. | தொல். |
| * | ககக | ,, | ,, |
| * | ,, | க | ,, |
| | கக௫ | மு. | ,, |
| | க௨0 | ,, | ,, |
| | க௨க- க௨அ | க | ,, |
| | ,, | ,, | ,, |
| | ,, | ,, | ,, |
| | ,, | ,, | ,, |
| | ,, | ,, | நன் - வி. |
| * | க௨௨ | ,, | தொல். |

| | | | |
|---|---|---|---|
| * | ,, | ,, | ,, |
| | ,, | ,, | நாற். |
| * | ,, | ,, | இ - வி. |
| * | கஉஅ | ,, | தொல். |
| * | களள | ,, | ,, |
| * | கசO | ,, | ,, |
| * | கசக | ,, | ,, |
| | கசஅ | ,, | ,, |
| | கசகூ | ,, | நாற். |
| * | கருக | ,, | தொல். |
| * | கருரு | ,, | ,, |
| | கருஎ | ,, | ,, |
| | கசுஅ | ,, | ,, |
| * | கஎஉ | ,, | இ - வி. |
| * | கஎச | ,, | தொல். |
| * | ,, | ,, | இ - வி. |
| | கஎரு | ,, | தொல். |
| * | ,, | ,, | ,, |

| | | | |
|---|---|---|---|
| * | கஎரு | ,, | ,, |
| * | கஎஅ | ,, | இ - வி. |
| * | கஅஉ | ,, | தொல். |
| * | கஅ௲ | ,, | ,, |
| * | ,, | ,, | ,, |

| ரு | கா | எ | அ |
|---|---|---|---|
| பொரு. | ககக | ௫. | உஎஅ |
| ,, | ககரு | ,, | ௲உ௱ |
| சொல். | சகாரு | ,, | க0அ |
| பொரு. | ககக | ,, | உஎரு |
| ,, | ,, | ,, | ,, |
| சொல். | உஎரு | இள. | |

| | | | |
|---|---|---|---|
| ,, | ௨௫௨ | ,, | |
| ,, | ௨௭௫ | சேனா. | ௨௧௫ |
| ,, | ௨௭௭ | ௩. | ௧௮௪ |
| | ௪௪௧ | | |
| பொரு. | ௧௨ | ,, | ௨௪ |
| ,, | ௨௩௪ | ,, | ௪௬0 |
| ஒழி. | ௪௨ | | |
| | ௩௯௪ | | ௩௫௭ |
| பொரு. | ௧௨ | ,, | ௨௪ |
| ,, | ,, | ,, | ,, |
| ,, | ௧௪௭ | ,, | ௩௮௩ |
| ,, | ௯ | ,, | ௧௯ |
| ,, | ௧௫0 | ,, | ௩௮௮ |
| கற். | ௪ | | |
| பொரு. | ௧௨ | ,, | ௨௪ |
| ,, | ௧௪௭ | ,, | ௩௮0 |
| ,, | ,, | ,, | ௩௮௪ |
| ,, | ௧௧௪ | | ௩௨0 |

| | | | |
|---|---|---|---|
| ,, | [illegible] | ,, | [illegible] |
| | ௪0௫ | | ௩௬௩ |
| ,, | க0உ | ,, | உ௫0 |
| | ௫0௯ | ,, | ௪உ௬ |
| ,, | க0உ | ,, | உ௪௫ |
| ,, | க0௩ | ,, | உ௫௪ |
| ,, | க0உ | ,, | உ௪௭ |
| | ௫0௯ | | ௪உ௬ |
| ,, | கக௪ | ,, | ௩க௮ |
| ,, | ௩ | ,, | ௬ |
| ,, | கஉ | ,, | உ௮ |



# பிரயோகவிளக்கம்.

| | ஐங்குறுநூற்றுச் செய்யுளின் எண். | பாட்டின் பகுதி. | நூற்பெயர். | நூலின்பகுதி. | சூத்திரமுதலிய வற்றின் எண். | உரையாசிரியர் பெயர். | அச்சப்புத்தகத் தின் பக்க எண். |
|---|---|---|---|---|---|---|---|
| க | உ | ௩ | ௪ | ௫ | ௬ | ௭ | ௮ |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | ௧௮௩ | மு. | நாற். | ஒழி. | ௪௨ | | |
| | ௧௮௭ | ,, | தொல். | பொரு. | ௧௧௪ | ந. | ௩௨௩ |
| | ௧௯௫ | ,, | ,, | ,, | ௪௫ | ,, | ௮௫ |
| * | ௧௯௬ | ,, | ,, | ,, | ௧௧௪ | ,, | ௨௯௮ |
| * | ,, | ,, | இ - வி. | | ௫௦௯ | | ௪௨௬ |
| * | ௧௯௭ | ,, | தொல். | ,, | ௧௨ | ,, | ௨௪ |
| * | ௧௯௮ | ,, | ,, | ,, | ௧௧௪ | ,, | ௩௦௨ |
| * | ,, | ,, | இ - வி. | | ௫௦௯ | | ௪௨௯ |
| * | ௨௦௦ | ,, | தொல். | ,, | ௩௯ | ,, | ௬௪ |
| * | ௨௦௧ | ,, | ,, | ,, | ௧௧௪ | ,, | ௩௨௦ |
| * | ,, | ,, | ,, | ,, | ௨௦௭ | ,, | ௪௪௩ |
| * | ௨௦௨ | ,, | ,, | ,, | ௨௪௬ | ,, | ௪௭௦ |
| | ௨௦௩ | ,, | ,, | ,, | ௪௨ | ,, | ௮௦ |
| * | ௨௦௫ | ௫ | ,, | சொல். | ௨௦௬ | ,, | ௧௩௨ |
| * | ௨௦௬ | மு. | ,, | பொரு. | ௨௪௬ | ,, | ௪௭௦ |
| | ௨௧௪ | ,, | ,, | ,, | ௧௧௪ | ,, | ௩௦௮ |
| * | ௨௧௬ | ௧ | ,, | ,, | ௬௦௫ | ,, | ௭௯௦ |
| | ௨௧௮ | மு. | ,, | ,, | ௧௧௪ | ,, | ௩௧௯ |
| * | ௨௧௯ | ,, | ,, | ,, | ௯ | ,, | ௧௯ |
| * | ௨௨௦ | ,, | ,, | ,, | ௧௧௪ | ,, | ௩௧௯ |
| * | ,, | ,, | ,, | ,, | ௨௦௭ | ,, | ௪௪௩ |
| | ௨௨௩ | ,, | ,, | ,, | ௧௧௪ | ,, | ௩௨௩ |
| | ௨௩௨ | ,, | யா - வி. | | ௯௭ | | |
| * | ௨௩௬ | ,, | தொல். | ,, | ௨௩௭ | ,, | ௪௬௪ |
| * | ௨௩௭ | ,, | ,, | ,, | ௧௧௪ | ,, | ௩௧௬ |
| * | ,, | ,, | இ - வி. | | ௫௧௯ | | ௪௪௬ |
| | ௨௪௦ | ,, | தொல். | ,, | ௧௨ | ,, | ௨௩ |
| * | ,, | ,, | ,, | ,, | ௨௩௭ | ,, | ௪௬௩ |
| * | ,, | ,, | இ - வி. | | ௩௯௪ | | ௩௫௬ |
| * | ௨௪௨ | ,, | தொல். | ,, | ௧௧௫ | ,, | ௩௨௫ |
| | ௨௪௩ | ,, | ,, | ,, | ௧௧௪ | ,, | ௩௧௮ |
| | ௨௪௪ | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| * | ௨௪௭ | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| * | ,, | ௨ | ,, | எழுத். | ௩௪௬ | ,, | ௨௧௨ |
| * | ௨௪௮ | மு. | ,, | பொரு. | ௧௧௫ | ,, | ௩௨௫ |

| | இக்குறுநூற்றுச் செய்யுளின் எண். | பாட்டின் பகுதி. | நூற்பெயர். | நூலின்பகுதி. | குறித்தமேற்கோ ளுள்ள சூத்திரத்தின் எண். | உரையாசிரியர் பெயர். | அச்சுப்புத்தகத் தின் பக்க எண். |
|---|---|---|---|---|---|---|---|
| ௧ | ௨ | ௩ | ௪ | ௫ | ௬ | ௭ | ௮ |
| * | ௨௫0 | மு. | தொல். | பொரு. | ௧௧௪ | ௩. | ௩௧௮ |
| * | ௨௫௨ | ” | ” | ” | ௩0௪ | ” | ௫௪௩ |
| | ௨௫௫ | ” | யா - வி. | உறுப். | ௧௧ | | |
| | ” | ” | யா - கா. | ” | ௬ | | |
| * | ௨௫௬ | ” | தொல். | பொரு. | ௨௧ | ” | ௪௧ |
| | ௨௫௮ | ” | ” | ” | ௧௧௪ | ” | ௩௧௯ |
| | ௨௬0 | ” | ” | ” | ” | ” | ௩௧௫ |
| * | ௨௫௧- ௨௬0 | ” | ” | ” | ௨௧ | ” | ௪௧ |
| * | ௨௬௧ | ” | ” | ” | ௧௧௧ | ” | ௨௭௩ |
| * | ௨௬௫ | ” | ” | ” | ௧௨ | ” | ௨௩ |
| * | ௨௬௬ | ௨. | ” | சொல். | ௪0௩ | சேனா. | ௨௫௩ |
| | ௨௮0 | மு. | ” | பொரு. | ௩௯ | ௩. | ௬௬ |
| * | ௨௮௧ | ” | இ - வி. | | ௫0௩ | | ௪0௬ |
| * | ௨௮௩ | ” | தொல். | ” | ௧௨ | ” | ௨௩ |
| | ௨௮௪ | ” | ” | ” | ௧௧௪ | ” | ௩0௯ |
| * | ௨௮௭ | ” | ” | ” | ” | ” | ௩௧௫ |
| | ௨௮௮ | ” | ” | ” | ௧0௩ | ” | ௨௫௪ |
| * | ௨௯௩ | ” | ” | ” | ௧௪௬ | ” | ௩௬௬ |
| * | ௨௯௪ | ” | ” | ” | ௧௫0 | ” | ௩௮௮ |
| | ௨௯௫ | ” | ” | ” | ௧௧௧ | ” | ௨௭௪ |
| | ௨௯௮ | ” | ” | ” | ௧0௩ | ” | ௨௫௩ |
| * | ” | ” | இ - வி. | | ௫௧௯ | | ௪௪௬ |
| * | ௨௯௯ | ” | ” | | ௫0௧ | | ௪0௪ |
| * | ௩0௬ | ” | தொல். | ” | ௩௯ | ” | ௬௪ |
| * | ௩0௯ | ” | ” | ” | ௧௫0 | ” | ௩௯௫ |

|  |  |  |  |  |  |  |  |
|---|---|---|---|---|---|---|---|
|  | ௯ ௧ ௨ | ” | ” | ” | ௪ ௨ | ” | ௮ ௧ |
|  | ௯ ௧ ௯ | ” | ” | ” | ௧ ௧ ௫ | ” | ௯ ௨ ௮ |
|  | ௯ ௧ ௭ | ” | ” | ” | ௧ ௪ ௭ | ” | ௯ ௮ ௧ |
|  | ௯ ௨ ௨ | ” | ” | ” | ௧ ௪ ௬ | ” | ௯ ௬ ௧ |
|  | ௯ ௨ ௪ | ” | ” | ” | ” | ” | ௯ ௬ ௬ |
|  | ௯ ௨ ௯ | ” | ” | ” | ” | ” | ௯ ௬ ௧ |
|  | ௯ ௯ ௯ | ” | ” | ” | ௧ ௪ ௭ | ” | ௯ ௮ ௨ |
| * | ௯ ௯ ௪ | ” | ” | ” | ” | ” | ” |
| * | ௯ ௯ ௯ | ” | ” | ” | ௧ ௨ | ” | ௨ ௭ |



## பிரயோகவிளக்கம்.

| | ஐங்குறுநூற்றுச் செய்யுளின் எண். | பாட்டின் பகுதி. | நூற்பெயர். | நூலின்பகுதி | சூத்திரமுதலியவற்றின் எண். | உரையாசிரியர் பெயர் | அச்சுப்புத்தகத்தின் பக்க எண். |
|---|---|---|---|---|---|---|---|
| ௧ | ௨ | ௩ | ௪ | ௫ | ௬ | ௭ | ௮ |
| * | ௩௩௯ | மு. | இ - வி. | | ௩௯௪ | | ௩௫௬ |
| | ௩௪௭ | ,, | யா - வி. | உறுப். | ௩௪ | | |
| | ௩௫௫ | ,, | தொல். | பொரு. | ௪௫ | ந. | ௮௬ |
| | ௩௫௮ | ,, | ,, | ,, | ,, | ,, | ௮௫ |
| * | ௩௬௦ | ,, | ,, | ,, | ௧௪௬ | ,, | ௩௬௩ |
| | ௩௬௧ | ,, | ,, | ,, | ௪௧ | ,, | ௭௫ |
| | ௩௬௨ | ,, | ,, | ,, | ௧௫௦ | ,, | ௩௯௬ |
| | ௩௬௩ | ,, | ,, | ,, | ௨௨ | ,, | ௪௨ |
| | ,, | ,, | நாற். | ஒழி. | ௪௨ | | |
| | ௩௬௪ | ,, | தொல். | பொரு. | ௨௨ | ,, | ,, |
| | ௩௬௫ | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| * | ௩௬௬ | ,, | ,, | ,, | ௧௨ | ,, | ௨௩ |
| * | ,, | ,, | இ - வி. | | ௩௯௪ | | ௩௫௬ |
| | ௩௬௯ | ,, | தொல். | ,, | ௧௨ | ,, | ௨௩ |
| | ,, | ,, | நாற். | ஒழி. | ௪௨ | | |
| * | ௩௭௦ | ,, | தொல். | பொரு. | ௧௨ | ,, | ௨௪ |
| * | ,, | ,, | இ - வி. | | ௩௯௪ | | ௩௫௬ |
| * | ௩௭௧ | ,, | தொல். | ,, | ௩௬ | ,, | ௫௭ |
| * | ௩௭௨ | ,, | ,, | ,, | ,, | ,, | ௬௦ |
| * | ௩௭௩ | ,, | ,, | ,, | ,, | ,, | ௫௮ |
| * | ௩௭௫ | ,, | ,, | ,, | ,, | ,, | ௬௧ |
| * | ,, | ௫ | ,, | சொல். | ௨௯௭ | ,, | ௧௯௭ |
| * | ௩௭௬ | மு. | ,, | பொரு. | ௩௬ | ,, | ௫௭ |
| * | ௩௭௭ | ,, | ,, | ,, | ,, | ,, | ௬௦ |
| * | ௩௭௮ | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| | ௩௮௦ | ,, | ,, | ,, | ௪௨ | ,, | ௭௯ |
| * | ௩௮௪ | ,, | ,, | ,, | ,, | ,, | ௮௦ |
| * | ௩௮௫ | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| * | ௩௮௭ | ,, | ,, | ,, | ௪௦ | ,, | ௬௯ |

| | ஐங்குறுநூற்றுச் செய்யுளின் எண். | பாட்டின் பகுதி. | நூற்பெயர். | நூலின்பகுதி. | சூத்திர முதலியவற்றின் எண். | உரையாசிரியர் பெயர். | அச்சுப்புத்தகத்தின் பக்க எண். |
|---|---|---|---|---|---|---|---|
| ௧ | ௨ | ௩ | ௪ | ௫ | ௬ | ௭ | ௮ |
| | ௩௯௭ | மு. | இறை. | | ௨௩ | | ௧௧௫ |
| * | ௩௯௮ | ,, | தொல். | பொரு. | ௩௯ | ந. | ௬௬ |
| * | ௩௯௯ | ,, | ,, | ,, | ௩௬ | ,, | ௬௧ |
| * | ,, | ,, | இறை. | | ௨௩ | | ௧௧௬ |
| | ௪௦௧ | ,, | தொல். | ,, | ௧௫௩ | ,, | ௪௦௬ |
| | ௪௦௪ | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| | ௪௦௬ | ,, | ,, | ,, | ௧௭௨ | ,, | ௪௧௮ |
| * | ௪௨௪ | ,, | ,, | ,, | ௧௫௦ | ,, | ௩௯௫ |
| | ,, | ,, | நாற். | ஒழி. | ௪௨ | | |
| | ௪௨௮ | ,, | தொல். | பொரு. | ௧௪௬ | ,, | ௩௬௦ |
| | ௪௩௧ | ,, | ,, | ,, | ௯ | ,, | ௧௮ |
| * | ௪௩௧-௪௪௦ | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| | ௪௪௧ | ,, | ,, | ,, | ௪௧ | ,, | ௭௭ |
| | ௪௪௩ | ,, | ,, | ,, | ,, | ,, | ௭௬ |
| * | ௪௪௫ | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| * | ௪௪௬ | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| | ,, | ,, | நாற். | கற். | ௧௦ | | |
| | ௪௪௮ | ,, | தொல். | பொரு. | ௪௧ | ,, | ,, |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| * | சசகூ | ” | ” | ” | ” | ” | எஎ |
| * | சசக-சஞ0 | ” | ” | ” | ” | ” | ” |
| | சஞக | ” | ” | ” | கூ | ” | ககூ |
| * | சஞக-சசா0 | | ” | ” | ” | ” | ” |
| | சஎஉ | ” | ” | ” | கஞ0 | ” | கூகூச |
| * | சஎகூ | ” | ” | ” | கசஎ | ” | கூஅக |
| * | சஎச | ” | ” | ” | ” | ” | ” |
| | சஎஎ | ” | ” | ” | சக | ” | எஎ |
| | சஎஅ | ” | ” | ” | ” | ” | ” |

# அரும்பதவகராதிமுதலியன.

[எஃகன் பாட்டின் எஃகள்]

அகடு - வயிறு.
அகம் - உள்ளிடம்.
அகம்புகன் மரபு - வீட்டினுள்ளே புகுதற்குரிய முறைமை.
அகலம் - மார்பு.
அகவ - அழையாநிற்க (கலி. ச0.), ஒலியாநிற்க.
அகழ்தல் - தோண்டுதல்.
அகறல் - நீக்குதல்.
அங்கவிழாகம் - அழகு ஒழுகுகின்ற உடம்பு.
அச்சிரம் - முன்பனிக்காலம், உஉகூ, சஎ0. (சிலப். ஊர். க0ஞ.)
அணிமை - சமீபம்.
அணியும் - அலங்கரிக்கும்.
அனுமை=அணிமை.
அத்தம் - அருஞ்சுரம், செம்மை.
அதர் - வழி.
அதிரல்-புனலிக்கொடி, கூசஞ. (நற். ஞஉ, கூகூஎ.)
அந்தணிர் - அந்தணர்களே.
அந்தரமகளிர் - தெய்வமகளிர்.
அம் - அழகு.
அம்பணம் - மரக்கால், சகூ.
அம்பல் - சிலரறிந்து கூறும் பழிமொழி; பரவாத களவென்பர்.

அசைஇ - போய், கூ௯.
அசைஇய - மெலிந்த.

அசைந்த - தங்கிய.
அசையியல் - நுடங்கிய இயல்பினை யுடையாள். (திருக். ௧௦௯௮.)
அசோகந்தளிர், ௨௭௩.
அஞ்சனம் - மை.
அஞ்சாய்கூந்தல்=ஐந்து ஆய் கூந்தல்- ஐம்பால்.
அஞ்சிலோதி - அழகிய சிலவாகிய கூந்தல், அழகிய சிலவாகிய கூந் தலையுடையாள்.
அஞ்சிறை - அழகியசிறை.
அஞ்சுவல் - அஞ்சுவேன்.
அடர் - தகடு. (கலி. ௨௨.)
அடுக்கம் - பக்கமலை, மலைச்சாரல்.
அடும்பு=அடம்பு - அடப்பங்கொடி. (கலி. ௧௨௭.)
அடைகரை - நீரடையும் கரை.
அடைய - சேர.
அணங்கியோன் - வருத்தியவன்.
அணங்கு - தெய்வம், வருத்தம்.
அணங்குடைப்பனித்துறை, ௧௭௪.
அணங்கும் - வருத்தும்.
அணங்குற்ஜேர் - துன்புற்ஜேர்.
அணல் - தாடி.
அணி - அழகு.
அணிந்தன்று - அணிந்தது.
(திருச். ௧௮௦ - வி.)
அம்பி - தெப்பம். (கலி. ௧௦௩.)

அம்பியகமணை - தெப்பத்தின் உட் கட்டை, ௧௬௮.
அம்ம - யான் கூறுகின்றதனைக் கேளென்னும்பொருளை உணர்த்து வதோரிடைச்சொல்.
அம்மெலோதி - அழகிய மெல்லிய கூந்தல்.
அமர் - விருப்பம்.
அமர்த்த - பொருந்திய. (கலி - ௯௭), போர்செய்த, விரும்பிய.
அமைந்தன்று - அமைந்தது.
அமைந்தனன் - ஒத்தனன்.
அமையாது - சேராமையால்.
அமையும் - போதும்.
அயம் - நீர், பள்ளம்.
அயர்ச்சி - மயக்கம்; (திருச். ௨௩௧.) வருத்தம்.
அயாந்தனை - விரும்பினுய்.
அயர்வார் - செய்வார்.
அயரும் - விரும்பும்.
அயிர் - நுண்மணல்.
அயிலை - மீன்களில் தாழ்ந்தசாதி யான ஒருவகைமீன், ௧௬௪.
அரணம் - காவல், மதில்முதலியன.
அரம் - சங்குமுதலியவற்றைப் பிளக் கும் ஒருவகைக் கருவி.

அரவு - விடம்; ஆகுபெயர்.
அரி - அழகு, இரேகை.
அரிக்குரல் - அரித்தெழுமோசை, இனியகுரல், தவளைபோலுங்குரல்.
அரிகால் - அரிந்ததாள்.
அரிநர் - அறுப்போர்.
அரிப்பறை - அரித்தெழுமோசையை யுடைய வாச்சியம்.
அரிவை - பெண்.
அருந்த-அருந்திய, உ எ க.
அருந்ததி, ச ச உ.
அருந்தென - உண்டதாக.
அரும்பதம் - அரியவுணவு, அரிய செவ்வி, ச ० ०.
அரும்பின - அரும்பையீன்றன.
அருவி, உ உ ०, உ உ ச, உ ௫ க.
அருளுதி - அருளுவாய்.
அளா - ஒருவகைமரம், ௬ ௨ ௫. (தொல். எழு. உ அ ௬.)
அல்கல் - தங்குதல், நாள்.
அல்லல் - துன்பம்.
அலங்குதல் - அசைதல்.
அலமரல் - சுழலல்.
அலர் - பலரறிந்து கூறும பழிமொழி.
அலர்ந்தென - மலர்ந்தென்று.
அலராகின்று - அலராயிற்று. (புற. க ட.)
அலராங்கட்டு - பழிமொழியை அங்கே உடையது.

அழூம், ௫ ०, உ ௫ க.
அள்ளல் - சேறு.
அளிச்கும் - அளிப்பான், பாதுகாப்பான்.
அளிய - அளிக்கத்தக்கன.
அளை - வளை.
அளைஇ - கலந்து.
அளைஇய - கலந்த.
அளைகணுட்டி - ஈரளைந்த கண்களை யுடையாள்.
அற்கிரம்=அச்சிரம் - முன்பனிக்காலம், ச சு ச. (குறு. எ ௬.)
அற்றம் - அவமானம், சோர்வு.
அறத்தொடுநிலை } களவு வெளிப்
அறத்தொடுநிற்றல் } படுத்திநிற்றல்.
அறல் - அரித்தொழுகும்நீர், அறுதியையுடைய மணல், கருமணல். (கலி. உ எ, ௧ அ.)
அறவன் - புண்ணியமுடையான்.
அறனில்பால் - தீவினை.
அறனிலாளன் - தருமமில்லாமையை யுடையான்.
அறியா - அறிந்து.
அறியுநீஇ - அறியச்செய்து.
அறுகழி - நீரற்றகழி.
அறுபு - அற்று.
அறை - பாறை.
அறைதல் - ஒலித்தல்.
அன்பில - அன்பில்லாதசொற்கள்.

அலவன் - நண்டு.
அலறுதலை - காய்ந்ததலை, விரிந்த தலை, ௬௨௧.
அலை - அலைத்தல்.
அவ்வரி - அழகியவரி.
அவ்வளை - அழகியவளையல்.
அவவா, ௨0௧, ௨௭௧.
அவல் - பள்ளம்.
அவவு=அவா - ஆசை, ௬௮0. (கலி. ௧௪.)
அவிழ்தல் - மலர்தல்.
அழிதுளி - மிக்கதுளி.
அழுங்கல் - இரங்கல், கெடுதல்.
அழுங்கலூர - இரக்கத்தை யுடைய ஊர். (கலி. ௨௬.)
அழுங்குக - கெடுக.
அழுப - அழுவார்கள்.
அன்ன - ஒத்த.
அன்னைவாழி வேண்டன்னை, (கு. ௧.)
அனை - அத்தனை, தாய்,
அனையை - அத்தன்மையை யுடையாய்.
ஆகம் - மார்பு.
ஆகற்க - ஆகாதொழிக.
ஆகின்று - ஆகாநின்றது.
ஆங்கண் - அவ்விடத்து.
ஆங்கு - அப்படி, உவமவுருபு.
ஆட்டி - அலைத்து.
ஆடிய - உழுதழக்கிய, கலந்த.
ஆடுகம் - ஆடுவேம்.
ஆண்குரல், ௬௭௬.
ஆண்டு - ஆங்கு.
ஆதனவினி - ஒரு சேரன்; ௧-௧0.
ஆம் - நீர்.

ஆம்பல் - ஒருவகைநீர்ப்பூ, ஒருவகைப் பண்.
ஆம்பலின் நாருரித்த தண்டு, ௬௫.
ஆம்பற்குழல், உ௪௫.
ஆம்பற்று து, ௬௪.
ஆமூர் -சோழநாட்டுள்ளதோரூர், ௫௬.
ஆய்நலம் - அழகியநலம், மெலிந்த வழகு.
ஆய்நுதல் - அழகுகுறைந்த நெற்றி.
ஆயத்தார் - திரளாகியமகளிர்.
ஆயம் - மகளிர்கூட்டம்.
ஆயின்று - ஆயிற்று.
ஆர்க்கும் - நிறைக்கும்.
ஆர்க - உண்ணுக.
ஆர்கலி - நிறைந்தமுழக்கம்.
ஆர்தல் - உண்ணுதல்.
ஆர்ப்ப - முழங்க.
ஆர - நிறைய.
ஆரம் - சந்தனம்.
ஆரிடை - அரியவழி.
ஆல் - அசை.
ஆலம் - ஆலமரம்.
ஆலி - ஆலங்கட்டி.
ஆலும் - ஆரவாரித்து ஆடும், ஒலிக்கும்.
ஆற்றுதேம் - செய்யாதேம்.
ஆற்றுமை - பொறுக்கமாட்டாமை, பொறுக்கும் வலியில்லாமை.
ஆற்றுக - பொறுக்க.
ஆன் - பசு.
ஆன்றிசின் - அமைவாயாக.
ஆனாது - அமையாமல்.
ஆனும் - ஆயினும். (கலி. ௫அ.)
இகத்தல் - கடத்தல்.
இகு - வீழ்ச்சி; முதனிலைத்தொழிற் பெயர்.
இடி, ௬உ௦.
இடியூஉ - இடித்து.
இடும்பை - துன்பம்.
இடையர், அ௭.
இணர் - பூங்கொத்து.
இந்திரவிழவிற்பூ, ௬உ.
இமிர்தல் } - ஒலித்தல்.
இமிழ்தல் }
இமைக்கும் - விளங்கும்.
இயம்புணர்தூம்பு -நெடுவங்கியமென்னும் வாத்தியம். (மலை. ௬.)
இயல் - சாயல்.
இயலணி - இயற்கையழகு.
இயலி - நடந்து.
இயவர் - வாச்சியக்காரர்.
இயவு - வழி.
இயற்கைப்புணர்ச்சி - பொருளதிகாரத்திற் கூறப்பட்ட தலைவனும் தலைவியும் தெய்வம் இடைநிற்ப ஒத்த அன்பினராய்த் தம்முள் தாமே கூடுங்கூட்டம்.
இயற்படமொழிதல் - இயல்புபடச் சொல்லுதல்.
இயற்பழித்தல் - குணத்தைப் பழித்தல்.
இயறேர் - செல்லுகின்றதேர்.
இரக்குவெனல்லேன் - இரப்பேனல்லேன்.
இரட்டும் - மாறியொலிக்கும்.
இரவலர் - யாசகர்.
இரவினானும் - இரவின்கண்ணும்.
இரற்றுதல்-ஒலித்தல், ௧௧௪, ௧௫உ.
இரீஇ - இருந்து.
இருப்பை - ஓரூர், ௫அ.
இருமை - கருமை.
இருவி - தினையரிதாள்.

